# GENESIS AND EXODUS, XX.

**[New Version.]**



# மோசே எழுதின

முதலாம் இரண்டாம் புத்தகங்களாகிய

ஆதியாகமம்,

யாத்திராகமம் ௨௰. அதிகாரம்

வரைக்கும்.



PUBLISHED BY THE JAFFNA AUXILIARY
BIBLE SOCIETY.



JAFFNA:
RIPLEY AND STRONG—PRINTERS.
1856.

மோசே எழுதின

முதலாம் புத்தகமாகிய

# ஆதியாகமம்.

---

## க. அதிகாரம்.

க கடவுள் வானத்தையும் பூமியையுஞ் சிருஷ்டித்தல் : ௩. ஒளியைச் சிருஷ்டித்தல் : ௬. ஆகாயவிரிவைச் சிருஷ்டித்தல் : ௯. நிலத்தையும் நீரையும் வேறுக்கல் : ௰க. பூண்டுமுதலானவைகளை முளைப்பித்தல் : ௰ச. சந்திர சூரியாதிகளைச் சிருஷ்டித்தல் : உ௰. மச்ச பட்சிகளைச் சிருஷ்டித்தல் : உச. நாடு காடுகளின் மிருகங்களைச் சிருஷ்டித்தல் : உ௬. தமது சாயலாக மனிதனைச் சிருஷ்டித்தல் : உ௯. உணவுப்பொருளை நியமித்தல்.



க. ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியையுஞ் சிருஷ்டித்தார்.

உ. பூமியானது ஒழுங்கின்மையும் வெறுமையுமாயிருந்தது; ஆளமான சலமுகத்தின்மேல் இருள் இருந்தது. தேவ ஆவி சலமுகத்தின்மேல் உலாவிக்கொண்டிருந்தது.

௩. தேவன் ஒளி உண்டாகக்கடவதென்று சொல்ல ஒளி உண்டாயிற்று.

௪. ஒளி நல்லதென்று தேவன் கண்டார். தேவன் ஒளிக்கும் இருளுக்கும் வேற்றுமையுண்டாக்கினார்.

௫. தேவன் ஒளிக்குப் பகலென்றும் இருளுக்கு இரவென்றும் பெயரிட்டார். சாயங்காலமும் விடியற்காலமுமாகி முதலாம் நாளாயிற்று.

௬. தேவன் சலத்தின் மத்தியில் ஆகாய விரிவு உண்டாகக் கடவதென்றும், அது சலத்தையுஞ் சலத்தையும் பிரிக்கக்கடவதென்றுஞ் சொல்லி,

௭. ஆகாயவிரிவை உண்டாக்கி, ஆகாயவிரிவின் கீழ்ச் சலத்திற்கும், ஆகாயவிரிவின் மேற் சலத்திற்கும், பிரிவுண்டாக்கினார். அப்படியே ஆயிற்று.

௮. தேவன் ஆகாயவிரிவுக்கு வானமென்று பெயரிட்டார். சாயங்காலமும் விடியற்காலமுமாகி இரண்டாம் நாளாயிற்று.

௯. தேவன் வானத்தின் கீழுள்ள சலம் ஒரிடத்திற் சேரவும், உலர்ந்த தரை தோன்றவும், கடவனவென்றார். அப்படியே ஆயிற்று.

௰. உலர்ந்த தரைக்குப் பூமியென்றும், சேர்ந்த சலத்திற்குச் சமுத்திரமென்றும், தேவன்

பெயரிட்டார். அவை நல்லனவென்று தேவ
ன் கண்டார்.

யக. பூமியின்மேற் புல்லையும், விதை கொ
டுக்கிற பூண்டுகளையும், தங்களிலே தங்கள்வி
தையையுடைய கனிகளை, தங்கள் தங்கள்
சாதிப்படி கொடுக்கிற விருட்சங்களையும், பூ
மி முளைபிக்கக்கடவதென்று தேவன் சொன்
னார். அப்படியே ஆயிற்று.

யஉ. புல்லையும், தங்கள் தங்கள் சாதிப்படி
விதை கொடுக்கிற பூண்டுகளையும், தங்கள் த
ங்கள் சாதிப்படி, தங்களிலே தங்கள் விதை
யையுடைய கனிகளைக் கொடுக்கிறவிருட்சங்
களையும், பூமி முளைப்பித்தது. அவை நல்ல
னவென்று தேவன் கண்டார்.

யஙு. சாயங்காலமும் விடியற்காலமுமாகி
மூன்றும் நாளாயிற்று.

யச. பகலுக்கும் இரவுக்கும் வேற்றுமை
உண்டாக்குகிறதற்கு, வானவிரிவிலே சுடர்க
ள் உண்டாகக்கடவனவென்றும்; அவையே
அடையாளங்களையும், பருவ காலங்களையும்,
தினங்களையும், வருஷங்களையுங் குறிக்கும்
பொருட்டாக,

யரு. பூமியின் மேல் பிரகாசிக்கும்படிக்கு
வானவிரிவிலே சுடர்கள் ஆகக்கடவனவென்
றும், தேவன்சொன்னார், அப்படியேஆயிற்று.

௧௬. பகலை ஆளுவதற்கு ஒரு பெரிய சுடரும், இரவை ஆளுவதற்கு அதிற் சிறிய ஒரு சுடருமாக, இரண்டு பெரிய சுடர்களையும், நட்சத்திரங்களையும் உண்டாக்கினார்.

௧௭. அவைகள் பூமியின் மேற் பிரகாசிக்கவும்,

௧௮. பகலையும் இரவையும் ஆளவும், ஒளிக்கும் இருளுக்கும் வேற்றுமையுண்டாக்கவும், தேவன் அவைகளைவானவிரிவிலேவைத்தார். அவை நல்லனவேன்று தேவன் கண்டார்.

௧௯. சாயங்காலமும் விடியற்காலமுமாகி நாலாம் நாளாயிற்று.

௨௰. தேவன் நீந்துகிற சீவசெந்துக்களைச், சலமானது திரளாகச் சனிப்பிக்கக் கடவதென்றும், பூமிக்கு மேலாகஆகாயவிரிவிலேபறவைகள் பறக்கக் கடவனவேன்றுஞ் சொன்னார்.

௨௧. சலத்தினாலே தங்கள் தங்கள் சாதிப்படி திரளாய்ச் சனிப்பிக்கப்பட்ட மகா மச்சங்களையும், சஞ்சரிக்கிற மற்றச் சகலசெந்துக்களையுமன்றி, சிறகுகளுள்ள சாதிசாதியான எல்லாப் பறவைகளையும், தேவன் சிருஷ்டித்தார். அவை நல்லனவேன்று தேவன் கண்டார்.

௨௨. அவைகள் பல்கிப் பெருகி, சமுத்திர சலத்தில் நிறையவும், பறவைகள் பூமியிலே

பெருகவுங் கடவனவென்று, தேவன் அவைகளை ஆசீர்வதித்தார்.

உங. சாயங்காலமும் விடியற்காலமுமாகி ஐந்தாம் நாளாயிற்று.

உச. தேவன் பூமி நாலு சாதி சேந்துக்களாகிய நாட்டுமிருகங்களையும், ஊர்வனவற்றையும்,காட்டுமிருகங்களையும்,இனமினமாக, சனிப்பிக்கக்கடவதென்றார். அப்படியேஆயிற்று.

உரு. அவ்வவற்றின் இனப்படி காட்டு மிருகங்களையும், நாட்டு மிருகங்களையும், பூமியின் மேல் ஊருகிற சகல ஊர்வனவற்றையும், தேவன் உண்டாக்கினார். அவை நல்லனவென்று தேவன்கண்டார்.

உசு. தேவன், நமது சாயலாக, நம்முடைய உருவத்தின்படி, மனிதனை உண்டாக்குவோமாக. அவன் சமுத்திரமச்சங்களையும், ஆகாயப் பறவைகளையும், மிருகசேந்துக்களையும், பூமண்டலம் அனைத்தையும், பூமண்டலத்தின் மேல் ஊருகிற சகலவித ஊர்வனவற்றையும், ஆளுவானாகவென்றார்.

உஎ. தேவன் தமது சாயலாக மனிதரைச் சிருஷ்டித்தார். அவர்களைத் தேவ சாயலாகவே சிருஷ்டித்தார். அவர்களைப் புருஷனும் ஸ்திரியுமாகச் சிருஷ்டித்தார்.

உஅ. பின்பு தேவன் அவர்களை நோக்கி, நீ

ங்கள் பல்கிப்பெருகிப், பூமியை நிறைத்து, அதை வசப்படுத்திச், சமுத்திர மச்சங்களையும், ஆகாயப் பறவைகளையும், பூமியிலே சஞ்சரிக்கிற சகல சேந்துக்களையும், ஆண்டுகோள்ளுங்களென்று சோல்லி, அவர்களை ஆசீர்வதித்தார்.

உகூ. தேவன், பூமியெங்குமுள்ள வித்துக்களையுடைய சகலவிதப் பூண்டுகளையும், வித்துக்களையுடைய கனிகளுள்ள சகலவித விருட்சங்களையும், உங்களுக்குத் தந்தேன். அவை உங்களுக்கு ஆகாரமாயிருக்கக் கடவன.

ஙய. பூமியிலே சீவனுள்ள சகல மிருகங்களுக்கும், ஆகாயத்தில் எல்லாப் பறவைகளுக்கும், பூமியின் மேல் ஊர்வன எல்லாவற்றிற்கும், பசுமையான எல்லாப் பூண்டுகளையும், ஆகாரமாகக் கோடுத்தேனென்றார். அது அப்படியே ஆயிற்று.

ஙக. தேவன், தாம் உண்டாக்கின யாவையும் பார்த்து அவை மிக நல்லனவேன்று கண்டார். சாயங்காலமும் விடியற்காலமுமாகி ஆறும் நாளாயிற்று.

## உ. அதிகாரம்.

*க. ஒய்வுநாளைநியமித்தல் : ச. சிருஷடியின் விபரம் : அ. ஏதேனின் தோட்டமுண்டாக்கல் : யரு. அதிலேமனிதனை இருக்கச்செய்தல் : யஎ. நன்மை தீமைகளைத்தெரிவிக்கும் விருட்சத்திலுள்ளதை வி*

லக்கல்: உம. ஆதாம் சீவசெந்துக்களுக்குப்பெயரிடல்: உக. ஸ்திரியின் சிருஷ்டி விருத்தாந்தம்: உச. விவாகமுறை ஏற்படுத்தல்.

க. இவ்விதமாக வானமும் பூமியும் அவைகளிலுள்ள சகல சேனைகளுமாகிய இவைகளின் சிருஷ்டி நிறைவேறலாயிற்று.

உ. தேவன் தமது கிரியையை முடித்த பின்பு, ஏழாம் நாளிலே எந்தக் காரியங்களையுஞ் செய்வதையொழிந்து, அந்த ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்தார்.

ஙு. அதிலே தேவன் தாம் சிருஷ்டிப்பதும், செய்வதுமாகிய யாவையும் விட்டு ஓய்ந்திருந்ததினால், அந்த ஏழாம் நாளை ஆசீர்வதித்துப் பரிசுத்தமாக்கினார்.

ச. தேவனாகிய யேகோவா பூமியையும், வானத்தையும், தம்மாலே பூமியின்மேற் பெய்விக்கப்படும் மழையும், பயிர்செய்ய மனிதனும் இல்லாதிருக்கவும், முன், நிலத்தில் இல்லாத சகலவிதமான செடிகளையும்,

ரு. முன், முளைத்திராத சகலவிதமான பூண்டுகளையும், சிருஷ்டித்த காலத்தில், தேவனாகிய யேகோவா பூமி வானங்களைச் சிருஷ்டித்த விவரங்கள் இவையே.

சூ. பனி பூமியிலிருந்தெழும்பி, பூமியின் முகமுழுவதையும் நனைத்தது.

எ. தேவனாகிய யேகோவா மனிதனைப் பூமியின் மண்ணினாலே உருவாக்கி, சீவ சுவாசத்தை அவன் நாசியில் ஊதினார். அதினால் மனிதன் சீவாத்துமாவானான்.

அ. தேவனாகிய யேகோவா கீழ்த்திசையிலுள்ள ஏதேனில் ஒரு தோட்டத்தை உண்டாக்கித், தாம் உருவாக்கின மனிதனை அதிலே வைத்தார்.

கூ. தேவனாகிய யேகோவா காட்சிக்கினிமையும், புசிப்புக்குச் சுவையுமான சகலவித விருட்சங்களையுமன்றி, தோட்டத்தின் மத்தியிலே சீவ விருட்சத்தையும், நன்மை தீமைகளைத் தெரிவிக்கும் விருட்சத்தையும், பூமியில் நின்றுந் தோற்றுவித்தார்.

௰. ஏதேனில் ஒரு நதி தோட்டத்துக்குப் பாயும்படி தோன்றி, அதில் நின்று பிரிந்து நான்கு முகமாயிற்று.

௰க. முதலாம் ஆற்றுக்குப் பீஷோன் என்று பேர். அது பொன் விளையும் அவிலாதேசம் முழுவதையுஞ் சுற்றியோடுகின்றது.

௰உ. அத்தேசத்தின் பொன் சிரேஷ்டம். அவ்விடத்தில் முத்துக்களுங் கோமேதகக் கல்லுமுண்டு.

௰ரு. இரண்டாம் ஆற்றுக்குக் கீயோன் எ

ன்றுபேர். அது கூஷ் தேசமுழுவதையுஞ் சுற்றியோடுகின்றது.

௰௪. மூன்ரும் ஆற்றுக்கு இதேக்கேல் என்றுபேர். அது அசீரியாவுக்குக் கிழக்கே ஒடுகின்றது. நாலாம் ஆற்றுக்குப் பிருத்தேன்றுபேர்.

௰௫. ஏதேனிலுள்ள தோட்டத்திலே செய்கை செய்வதற்கும், அதைக் காப்பதற்கும், தேவனுகிய யேகோவா ஆதாமை அதில் வைத்தார்.

௰௬. தேவனுகிய யேகோவா, தோட்டத்தில் இருக்கிற எந்த விருட்சத்திலுள்ளதையும் நீ இஷ்டப்படி புசிக்கலாம்.

௰௭. நன்மை தீமைகளைத் தெரிவிக்கும் விருட்சத்திலுள்ளதையோ புசிக்கப்படாதேன்று மனிதனுக்குச் சொல்லி விலக்கி, நீ அதைப் புசித்தால் அந்நாளிலே நிச்சயமாய் மரிப்பாயென்ருர்.

௰௮. தேவனுகிய யேகோவா மனிதன் தனியேயிருப்பது உத்தமமல்ல. அவனுக்கேற்றதுணையை அவனுக்கு உண்டாக்குவேனென்ருர்.

௰௯. தேவனுகிய யேகோவா தாம் மண்ணிஞலே உருவாக்கின வெளியின் சகல வித மிருகங்களுக்கும், ஆகாயப் பறவைகளுக்

கும், ஆதாம் இடும்பேர் இன்னதென்று கா
ணும்படி அவைகளை அவனிடத்திற் சேரப்
பண்ணினார். அந்தச் சீவசெந்துக்களுக்கு ஆ
தாம் கொடுத்தபேரே பேராயிற்று.

௨௰. ஆதாம் சகலவித மிருகங்களுக்கும்,
ஆகாயப் பறவைகளுக்கும், வெளியிலுள்ள
சகலவித செந்துக்களுக்கும், பேரிட்டான்.
ஆதாமுக்கோ ஏற்றதுணை, இதுவரைக்குங்கா
ணப்படவில்லை.

௨௧. தேவனாகிய யேகோவா ஆதாமுக்கு அ
யர்ந்த நித்திரை வரப்பண்ண, அவன் நித்தி
ரை அடைந்தான். அப்பொழுது அவர் அவனு
டைய விலா எலும்புகளில் ஒன்றை எடுத்து,
அவ்விடத்திலே தசையைப் பொருத்தினார்.

௨௨. தேவனாகிய யேகோவா மனிதனிலெ
டுத்த விலா எலும்பை ஸ்திரியாக உருவாக்கி,
அவளை ஆதாமிடத்தில் வரப்பண்ணினார்.

௨௩. ஆதாம் இவள் என் எலும்பிலெலு
ம்புமாய், என் மாமிசத்தில் மாமிசமுமாயிருக்
கிறாள். இவள் மனுஷனில் எடுக்கப்பட்டதி
னால் மனுஷி யென்னப்படுவாளென்றான்.

௨௪. அதினால் ஒருவன் தன் பிதா மாதா
வைப்பிரிந்து தன் மனைவியைப் பற்றிக்கொ
ள்வான். இருவரும் ஏகாங்கமாயிருப்பார்கள்.

௨௫. ஆதாமும் அவன் மனைவியுமாகிய இ

ருவரும் நிருவாணிகளாயிருந்தும், வெட்கமி
ல்லாதிருந்தார்கள்.

## ௩. அதிகாரம்.

*க. சருப்பம் ஏவாளை வஞ்சித்தல்: அ. மனிதர் பாவ
ஞ்செய்தல்: ௰௪. தேவன் சருப்பத்தைச்சபித்தல்:
௰௫. இரட்சகரை வாக்குத்தத்தஞ்செய்தல்: ௰௬.
ஸ்திரி புருஷர்களைச் சபித்தல்: உக. தேவன் வஸ்
திரந் தரிப்பித்துத் தோட்டத்தில் நின்று அகற்றல்.*

க. தேவனாகிய யெகோவா சிருஷ்டித்த
வெளியின் சகலசெந்துக்களிலும் சருப்பமே,
அதிக சூதுள்ளதாயிருந்தது. அது ஸ்திரியை
நோக்கி, நீங்கள் தோட்டத்திலிருக்கிற எந்தவி
ருட்சத்திலுள்ளதையும் புசிக்கப்படாதேன்று
தேவன் சொன்னது மெய்யோ? என்றது.

உ. சருப்பத்துடனே ஸ்திரி, தோட்டத்தி
லுள்ள விருட்சக் கனிகளை நாங்கள் புசிக்க
லாம்.

௩. தோட்டத்தின் மத்தியிலிருக்கிற விரு
ட்சத்தைச்சுட்டி, நீங்கள் மரியாதிருக்கவே
ண்டில், அதின் கனியைப் புசிக்கவும்படாது,
தொடவும்படாதேன்று தேவன் விலக்கினார்
என்றுசொல்ல ;

௪. சருப்பம் ஸ்திரியை நோக்கி, நீங்கள் ம
ரிக்கவே மாட்டீர்கள்.

ரு. நீங்கள் அதைப் புசிக்கும் நாளில் உங்கள் கண்கள் திறக்கப்பட்டு, நீங்கள் நன்மை தீமைகளை உணர்ந்து, தேவனுக்கொப்பாவீர்களென்று தேவன் அறிவாரென்றது.

சு. அவ்விருட்சத்திலுள்ளது புசிப்புக்குச் சுவையும், காட்சிக்கு இனிமையும், புத்தியைத் தெளிவிக்குமென்றுஇச்சிக்கப்படத்தக்கதுமாயிருப்பதை ஸ்திரி பார்த்து, அதின் கனியைப் பறித்து, புசித்து, தன்னோடேயிருந்த புருஷனுக்குங் கொடுத்தாள்: அவனும் புசித்தான்.

எ. அவர்கள் இருவருடைய கண்களுந் திறக்கப்பட்டன. அப்பொழுது அவர்கள் தாங்கள் நிருவாணிகளென்றறிந்து, அத்தி இலைகளைத் தைத்து, தங்களுக்கு அரைக்கச்சைகளாகத் தரித்துக்கொண்டார்கள்.

அ. பகலில் குளிர்காற்று வீசுகையில்,தோட்டத்தில் உலாவிவரும் தேவனாகிய யெகோவாவின் சத்தத்தைக் கேட்டார்கள். ஆதாமும், அவன் மனைவியும், தேவனாகிய யெகோவாவின் சந்நிதானத்துக்கு விலகி, தோட்டத்தின் விருட்சங்களுக்குள்ளே ஒளித்துக்கொண்டார்கள்.

கூ. தேவனாகிய யெகோவா, ஆதாமே,என்

று கூப்பிட்டு, நீ எங்கேயிருக்கிருய் என்றுசொ
ல்ல,

௰. அவன் தோட்டத்தில் உமது சத்தத்தை
க் கேட்டு, நான் நிருவாணியாயிருக்கிறதினுல்
பயந்து ஒளித்துக்கொண்டேனென்ருன்.

௧௧. நீ நிருவாணியென்று உனக்கறிவித்த
வரார்? புசிக்கப்படாதேன்று நான் விலக்கி
ன விருட்சத்திலுள்ளதைப் புசித்தாயா என்
றுசொல்ல;

௧௨. ஆதாம், என்னுடனேயிருக்கும்படி
நீர்தந்த ஸ்திரி அவ்விருட்சத்திலுள்ளதை என
க்குத்தந்தாள். நான் புசித்தேனேன்ருன்.

௧௩. தேவனுகிய யேகோவா ஸ்திரியை
நோக்கி, நீ இப்படிச் செய்ததேன்னவேன்ரு
ர். அதற்கு ஸ்திரி சருப்பம் என்னைவஞ்சித்த
தினுல் நான் புசித்தேனேன்ருள்.

௧௪. தேவனுகிய யேகோவா சருப்பத்துட
னே, நீ இதைச்செய்தபடியால் நாட்டு மிருக
ங்கள் எவற்றிலும், வெளியிலுள்ள சகல சேந்
துக்களிலுஞ் சபிக்கப்பட்டு, நீ சீவிக்கும் நாள்
எல்லாம் வயிற்றினுல் ஊர்ந்து மண்ணைத் தி
ன்பாய்.

௧௫. உனக்கும், இந்த ஸ்திரிக்கும், உன்ச
ந்ததிக்கும், இவள் சந்ததிக்கும், பகையுண்
டாக்குவேன். அவர் உன் தலையை நருக்கு

வார். நீ அவருடைய குதிங்காலைக் கோத்து வாய் என்று சொன்னார்.

௧௬. அவர் ஸ்திரியை நோக்கி, நீ கருப்பவதியாகும்பொழுது, உன் வருத்தம் மிகவும் அதிகரிக்கப்பண்ணுவேன். வேதனையோடே பிள்ளைப்பெறுவாய், நீ உன் புருஷனுக்கு ஆதீனப்பட்டிருப்பாய் ; அவன் உன்னை ஆண்டு கொள்ளுவானென்றுசொன்னார்.

௧௭. பின்பு அவர் ஆதாமை நோக்கி, நீ உன் மனைவியின் வாக்குக்குச் செவிகொடுத்து, புசிக்கப்படாதேன்று நான் விலக்கின விருட்சத்திலுள்ளதைப் புசித்ததினாலே, பூமி உன் நிமித்தம் சபிக்கப்பட்டது. நீ சீவிக்கும் நாளெல்லாம் கிலேசத்துடனே அதிலுள்ளவையைப் புசிப்பாய்.

௧௮. அது உனக்கு முட்செடிகளையும், முட் பூண்டுகளையும், முளைப்பிக்கும். நிலத்திலுள்ள பயிர்வகைகளைப் புசிப்பாய்.

௧௯. பூமியில் எடுக்கப்பட்ட மண்ணாகிய நீ மண்ணோடேசேர்ந்துபோவாய். அதிலே சேருமட்டும் முகவேர்வையோடே ஆகாரம் புசிப்பாய் என்று சொன்னார்.

௨௰. ஆதாம் தன் மனைவி சீவனுள்ள யாவருக்கும் மாதாவானதினால் அவளுக்கு ஏவ ளென்று பேரிட்டான்.

௨௧. தேவனாகிய யேகோவா ஆதாமுக்கும், அவன் மனைவிக்கும், தோலங்கிகளைச் செய்து அவர்களைத் தரிப்பித்தார்.

௨௨. தேவனாகிய யேகோவா மனிதன் நன்மை தீமைகளை உணரப்பெற்று, நம்மிலொருவரைப் போலானானே, பாருங்களென்றார்: இனி அவன் தன் கையை நீட்டி, சீவ விருட்சக்கனியைப் பறித்துப் புசித்து சீவனுடனே நித்தியமாயிராதபடிக்கு,

௨௩. அவன் தோன்றிய பூமியைச் செய்கைப்பண்ணுகிறதற்கு, தேவனாகிய யேகோவா அவனை ஏதேனின் தோட்டத்தில்நின்றும் அகற்றிவிட்டார்.

௨௪. அவர் மனிதனை அகற்றி, சீவ விருட்சத்திற்குப் போம் வழியைக் காவல்செய்ய, ஏதேனின் தோட்டத்துக்குக் கிழக்கே சுலாவிச் சோலிக்கிற அக்கினிச் சுட்கத்தையும், கேருபிகளையும், வைத்தார்.

## ௪. அதிகாரம்.

*௧. காயீன் ஆபேல் என்பவர்களின் விருத்தாந்தம்: ௮. ஆபேலைக் கொன்றதினிமித்தம் காயீனுக்கு வந்த தேவதண்டனை: ௰௬. காயீனுடைய வமிச வரலாறு: ௨௫. சேத்து, ஏனோஸ் என்பவர்களின் செனனம்.*

க. ஆதாம் தன் மனைவியாகிய ஏவாளை அறிந்தான். அவள் கருப்பவதியாகிக் காயீனைப் பிரசவித்து, யெகோவாவினால் ஒரு புத்திரனைப் பெற்றேனேன்றாள்.

உ. பின்பு அவனுக்குச் சகோதரனாகிய ஆபேலையும் பெற்றாள். ஆபேல் ஆடுகளை மேய்க்கிறவனானான். காயீன் நிலச்செய்கைக் காரனானான்.

௩. சிலநாள் சென்றபின்பு, காயீன் யெகோவாவிடத்திலே பூமிப்பலன்களில் நைவேத்தியமாகச் சில கொண்டுபோனான்.

ச. ஆபேலும் தன் ஆட்டுக்கூட்டத்தின் தலையீற்றுக்களிலும், அவைகளின் நிணத்திலும், சில கொண்டுபோனான். ஆபேலையும், அவனுடைய நைவேத்தியத்தையும், யெகோவா அங்கிகரித்துக்கொண்டு,

ரு. காயீனையும், அவன் நைவேத்தியத்தையும், அங்கிகரியாதிருந்தார். அதினாற் காயீன் மிகவுங்குரோதித்து முகம்வேறுபட்டான்.

சு. யெகோவா காயீனிடத்தில், எதற்காகக் குரோதங்கொண்டாய்? எதற்காக உன்முகம் வேறுபட்டது?

எ. நீ முறைப்படிசெய்தால் மேன்மைபெறமாட்டாயா? நீ முறைப்படிசெய்யாதிருந்தாற் பாவம் வாசற்படியிற் கிடக்கும். அன்றியு

ம் அவன் உனக்கு ஆதீனமாயிருப்பான். நீ அவனை ஆண்டுகொள்வாயென்று சொன்னார்.

௮. காயீன் தன் சகோதரனாகிய ஆபேலுடனே பேசினான். அவர்கள் வயல்வெளியில் இருந்த சமையத்தில், காயீன் தன் சகோதரனாகிய ஆபேலுக்கு விரோதமாயெழும்பி அவனைக் கொலைசெய்தான்.

௯. யெகோவா காயீன்இடத்தில், உன் சகோதரனாகிய ஆபேல்எங்கேயென்றுசொல்ல, அவன் நான் அறியேன். என் சகோதரனுக்கு நான் காவலாளனா என்றான்.

௰. அதற்கு அவர் என்னசெய்தாய்? உன் சகோதரனுடைய இரத்தம் பூமியில் இருந்து என்னைநோக்கி ஓலமிடுகின்றது.

௰௧. கேள், உன் சகோதரனுடைய இரத்தத்தை உன்கையினால் வாங்கிக்கொள்ளும்படி தன் வாயைத்திறந்த இந்த நிலத்தினாலே தான், நீ சாபத்தையடைவாய்.

௰௨. நீ நிலத்தில் செய்கை செய்தாலும் இனி அது தன்பலனை உனக்குத் தராது. பூமியில் நிலையற்றலைகிறவனாயிருப்பாயென்றார்.

௰௩. காயீன் யெகோவாவுடனே, இன்று என்னை இத்தேசத்தை விட்டுத் துரத்திவிடுகிறீர். உமது சந்நிதானத்துக்கு விலகி மறைந்து, பூமியில் நிலையற்றலைகிறவனாயிருப்பேன்.

என்னைக்காண்பவனெவனும் என்னைக் கொலைசெய்வான்.

௰௪. எனக்கிட்ட தண்டனை என்னாலே சகிக்க முடியாதென்றான்.

௰௫. அதற்கு யெகோவா காயீனாகிய உன்னைக் கொலைசெய்கிறவனெவனோ அவன்மேல் ஏழு பழி தங்குமென்றுசொல்லி, காயீனைக் காண்கிறவனெவனும் அவனைக்கொல்லாதபடிக்கு யெகோவா அவனுக்கு ஒரு அடையாளத்தைக் கற்பித்தார்.

௰௬. காயீன் யெகோவாவினது சந்நிதானத்தை விட்டுப் புறப்பட்டுப்போய், ஏதேனுக்குக்கிழக்கேயுள்ள நோத் என்னுந் தேசத்திற் குடியிருந்தான்.

௰௭. காயீன் தன் மனைவியை அறிந்தான். அவள் கருப்பவதியாகி ஏனோகைப்பெற்றாள். காயீன் ஒரு நகரத்தையுண்டாக்கி அந்த நகரத்துக்குத் தன்புத்திரன் ஏனோகினுடைய பேயரிட்டான்.

௰௮. ஏனோகுக்கு ஈராத்துப்பிறந்தான். ஈராத்து மெகுயவேலைப் பெற்றான். மெகுயவேல் மெத்தூஷவேலைப்பெற்றான். மெத்தூஷவேல் லாமேகைப்பெற்றான்.

௰௯. லாமேகு இரண்டு ஸ்திரிகளை விவாகம்பண்ணினான். ஒருத்திக்கு ஆதாள் என்று

பேயர். மற்றேருத்திக்குச் சில்லாள் என்று பேயர்.

உ௰. ஆதாள் யாபாலைப்பெற்ருள். அவன் கூடாரங்களில் வாசம்பண்ணுகிற இடைய ருக்கு ஆதிபிதாவாய் இருந்தான்.

உக. அவன் சகோதரனுக்கு யூபால் என்று பேர். அவன் கின்னரக்காரர், நாகசுரக்கா ரர், யாவருக்கும் ஆதிபிதாவாய் இருந்தான்.

உஉ. சில்லாளும் தூபாள்காயீனைப்பெற் ருள். அவன் பித்தளை இரும்புகளின் நானு வித வேலைகளைச் செய்வதில் நிபுணனுயிருந் தான். தூபாள்காயீனுடைய சகோதரி நா மாள்.

உ௩. லாமேகு தன் ஸ்திரிகளாகிய ஆதா ளையுஞ் சில்லாளையும் நோக்கி, ஆதாளே, சில் லாளே, நீங்கள், நான் சொல்வதைக் கேளுங் கள். லாமேகுவின் மனைவிகளே, என் வசன த்துக்குச் செவிகொடுங்கள். எனக்குக் காய முண்டாகவும் ஒரு மனிதனை, எனக்குத் தழு ம்புண்டாகவும் ஒரு வாலிபனைக், கொலைசெ தேனே.

உச. காயீனுக்காக ஏழு பழிதங்குமேயாகி ல் லாமேகுக்காக எழுபத்தேழுபழி தங்குமே யென்ருன்.

உ௫. ஆதாம் பின்னும் தன் மனைவியை அ

றிந்தான். அவள் ஒரு புத்திரனைப் பெற்று, காயீனாற் கொலையுண்ட ஆபேலுக்குப் பிரதியாக ஒரு சந்ததியை யெகோவா எனக்கு அருளினாரென்று சொல்லி, அவனுக்குச் சேத்து என்று பெயரிட்டாள்.

உசு. சேத்துவுக்கும் ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்கு ஏனோஷ் என்றுபெயரிட்டான். அப்பொழுது மனுஷர் யெகோவாவுடைய நாமந் தரிக்கப்பட ஆரம்பமாயிற்று.

## ரு. அதிகாரம்.

க ஆதாம் முதல் நோவாவரைக்குமுள்ள ஆதி பிதாக்களின் வமிசவரலாறு: உச. தேவபத்தியுள்ளவனாகிய ஏனோத வானத்துக்கு ஏற்றப்படல்.

க. ஆதாமின் சந்ததிகளின் வரலாறு. தேவன் மனிதனைச் சிருட்டித்தநாளிலே அவனைத் தேவச்சாயலாகச் சிருஷ்டித்தார்.

உ. ஸ்திரி புருஷராகச் சிருஷ்டித்து அவர்களை ஆசீர்வதித்தார். அவர்களைச் சிருஷ்டித்த நாளிலே ஆதாம் என்று பெயரிட்டார்.

ங. ஆதாம் நூற்றுமுப்பதாம் வயதிலே தன் சாயலாக, தனது உருவத்தின்படி ஒரு புத்திரனைப்பெற்று, அவனுக்குச் சேத்து என்று பெயரிட்டான்.

ச. ஆதாம் சேத்தைப்பெற்றபின்பும் எண்ணூறு வருஷமிருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளையும் பெற்றான்.

ரு. ஆதாம் ஆகத் தொளாயிரத்து முப்பது வருஷம் சீவித்திருந்து மரித்தான்.

௬. சேத்து நூற்றைந்தாம் வயதில் ஏனோஷைப்பெற்றான்.

எ. சேத்து ஏனோஷைப் பெற்றபின்பும் எண்ணூற்றேழு வருஷமிருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளையும் பெற்றான்.

அ. சேத்து ஆகத் தொளாயிரத்துப் பன்னிரண்டுவருஷஞ் சீவித்திருந்து மரித்தான்.

௯. ஏனோஷ் தொண்ணூறும் வயதிலே கேனானைப்பெற்றான்.

ய. ஏனோஷ் கேனானைப் பெற்றபின்பும் எண்ணூற்றுப் பதினைந்து வருஷம் இருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளையும் பெற்றான்.

யக. ஏனோஷ் ஆகத் தொளாயிரத்தைந்துவருஷஞ் சீவித்திருந்து மரித்தான்.

யஉ. கேனான் எழுபதாம் வயதிலே மகலாலேயேலைப்பெற்றான்.

ய௩. கேனான் மகலாலேயேலைப் பெற்றபின்பும் எண்ணூற்று நாற்பதுவருஷம் இருந்தா

ன். அவன் புத்திரரையும் புத்திரிகளையும் பெற்ருன்.

௰௪. கேனுன் ஆகத் தோளாயிரத்துப் பத்து வருஷஞ் சீவித்திருந்து மரித்தான்.

௰௫. மகலாலேயேல் அறுபத்தைந்தாம் வயதிலே யாரேத்தைப்பெற்ருன்.

௰௬. மகலாலேயேல் யாரேத்தைப் பெற்றபின்பும் எண்ணூற்று முப்பது வருஷமிருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளையும் பெற்ருன்.

௰௭. மகலாலேயேல் ஆக எண்ணூற்றுத் தோண்ணூற்றைந்துவருஷஞ் சீவித்திருந்து மரித்தான்.

௰௮. யாரேத்து நூற்றறுபத்திரண்டாம் வயதிலே ஏனோகைப்பெற்ருன்.

௰௯. யாரேத்து ஏனோகைப்பெற்றபின்பும் எண்ணூறு வருஷமிருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளையும் பெற்ருன்.

௨௰. யாரேத்து ஆகத் தோளாயிரத்தறுபத்திரண்டு வருஷஞ்சீவித்திருந்து மரித்தான்.

௨௧. ஏனோகு அறுபத்தைந்தாம் வயதிலே மேத்தூஷலாகைப்பெற்ருன்.

௨௨. ஏனோகு மேத்தூஷலாகைப் பெற்றபின்பும் முந்நூறுவருஷம் தேவனுடன் நடந்

துகொண்டவனாகி, புத்திரரையும் புத்திரிக ளையும்பெற்றான்.

உங. ஏனோகு ஆக முந்நூற்றறுபத்தைந்து வருஷஞ்சீவித்திருந்தான்.

உச. ஏனோகு தேவனுடன் நடந்துவந்தான். அவன் ஒழிந்தான். தேவன் அவனைத் தம்மிடத்திற் சேர்த்துக்கொண்டார்.

உரு. மேத்தூஷலாகு நூற்றெண்பத்தேழாம் வயதிலே லாமேகைப்பெற்றான்.

உசா. மேத்தூஷலாகு லாமேகைப் பெற்றபின்பும் ஏழுநூற்றெண்பத்திரண்டுவருஷமிருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளையும் பெற்றான்.

உஎ. மேத்தூஷலாகு ஆகத் தொளாயிரத்தறுபத்தொன்பதுவருஷஞ் சீவித்திருந்து மரித்தான்.

உஅ. லாமேகு நூற்றெண்பத்திரண்டாம் வயதிலே ஒருபுத்திரனைப்பெற்று,

உகூ. யெகோவா பூமியைச் சபித்ததினிமித்தம் நமக்குண்டானதொழிலிலும், கைப்பிரயாசத்திலும், இவன் நமக்கு ஆறுதல் செய்வானென்றுசொல்லி, அவனுக்கு நோவாஎன்று பெயரிட்டான்.

ஙய. லாமேகு நோவாவைப் பெற்றபின்பும் ஐந்நூற்றுத்தொண்ணூற்றைந்து வருஷமிரு

ந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளையு
ம் பெற்றான்.

௩௧. லாமேகு ஆக எழுநூற்றெழுபத்தேழு
வருஷஞ் சீவித்துமரித்தான்.

௩௨. நோவா ஐந்நூறுவயது சென்றதின்மே
ல் ஷேம், காம், யாப்பேத்து என்பவர்களைப்
பெற்றான்.

## சா. அதிகாரம்.

க. உல்கத்தாருடைய துன்மார்க்கத்தினிமித்தம் தேவ
ன் கோபித்துச் சலப்பிரளயத்தை வருவிக்கத் தீர்
மானித்தல்: அ. தேவன் நோவாவைக் கடாட்சித்
தல்: யச. பேழைசெய்யும்படி கட்டளையிடல்.

க. இப்படியே பூமியிலே மனிதர் விருத்
தியடைந்து புத்திரிகளைப் பெற்றிருக்குங் கால
த்தில்,

உ. நர புத்திரிகள் அதிக சௌந்தரியராயிரு
க்கக்கண்டு யாவருக்குள்ளும், தேவபுத்திரர்
தங்கள் இஷ்டப்படி ஸ்திரிகளைத் தெரிந்துவி
வாகஞ்செய்து வந்தார்கள்.

௩. யெகோவா, மனிதன் மாமிசம் ; என்
ஆவி எப்பொழுதும் அவனோடே போராடா
து. ஆயினும் நூற்றிருபதுவருஷகாலம் அவ
னுக்கிருக்கின்றதென்றார்.

ச. அக்காலத்திலே துஷ்ட வீரர்கள் பூமியி

ல் இருந்தார்கள். அன்றியும் தேவபுத்திரர் நரபுத்திரிகளுடன் கூடிப்பெற்ற புத்திரரும் பூர்வகாலத்திற் பேர்பெற்ற வீரர்களாயிருந்தார்கள்.

ரு. பூமியில் மனிதரின் தீங்கு மிகுந்திருக்கிறதென்பதையும்; அவர்கள்உள்ளத்திலே தோன்றுஞ் சிந்தனைகளெல்லாம் எப்பொழுதுங் கேடாயிருக்கின்றனவென்பதையும் யெகோவா கண்டு,

சூ. தாம் பூமியிலே மனிதரைச் சிருஷ்டித்ததினிமித்தம் அனுதாபப்பட்டார். அது அவருடைய இருதயத்தில் விசனமுண்டாக்கிற்று.

எ. யெகோவா நான் மனிதரைச் சிருஷ்டித்ததினிமித்தம் அனுதாபப்படுகிறேன். ஆதலாற் சிருஷ்டித்த மனிதரையும், அவர்களுடனே மிருகங்களையும், ஊர்வனவற்றையும், ஆகாயப்பறவைகளையும், பூமியின் முகத்தில் நின்றுந் துடைப்பேனென்றார்.

அ. நோவாவுக்கோ யெகோவின் கடாட்சங் கிடைத்தது.

கூ. நோவாவின் வமிசவரலாறு; அக்காலத்திலுள்ளவர்களுக்குள்ளே நோவா நீதிமானும் சற்குணனுமாயிருந்தான். நோவா தேவனுடன் நடந்தான்.

ய. நோவா, ஷேம், காம், யாப்பேத்தென்னும் மூன்று புத்திரரைப் பெற்றான்.

யக. பூலோகம் தேவனுக்கு முன்பாகக் கேடுள்ளதாயிருந்தது. பூலோகம் கொடுமையினால் நிறைந்திருந்தது.

யஉ. பூமியின்மேற் சகல மனிதருந் தங்கள் நெறியைக் கெடுத்துக் கொண்டார்கள். தேவன் பூலோகத்தைப் பார்த்து, அது கேடுள்ளதாயிருப்பதைக்கண்டார்.

யங. தேவன் நோவாவைநோக்கி, மனிதருடைய கொடுமையினால் பூமி நிறைந்திருப்பதினிமித்தம் மாமிசமுள்ள சகலருக்கும் முடிவு எனக்குமுன் சமீபித்து வந்தது. அவர்களைப் பூமியோடும் அழிப்பேன்.

யச. நீ உனக்குக் கோப்பேர் மரத்தினால் ஒரு பேழையைச் செய்து, அப்பேழையில் அறைகளை வகுத்து, அதற்குள்ளும் புறம்புங் கிசில் பூசுவாய்.

யரு. அப்பேழை முந்நூறுமுழ நீளமும், ஐம்பது முழ அகலமும், முப்பதுமுழ உயரமுமாகச் செய்வாய்.

யசு. பேழையின் மேற்புறத்திலே ஒரு முழத்திற்குக் கீழாக, ஒரு பலகணியைச் செய்து முடித்து, பேழையின் கதவைப் பக்கத்தில்

ட்டு, முதலாம இரண்டாம், மூன்ரும் நிலைக ளையும் வகுப்பாய்.

௧எ. நானே வானத்தின் கீழ்ச் சீவ சுவாசத் தையுடைய மாமிசமுள்ள யாவையுஞ் சங்க ரிக்கும்படி பூமியின்மேற் சலப்பிரளயம் வர ப்பண்ணுவேன்.

௧அ. பூமியிலுள்ள யாவும் மாய்ந்துபோம். உன்னுடனே என் உடன்படிக்கையை நி லைப்படுத்துவேன். நீயும், உன்னேடிருக்கிற உன் புத்திரரும், உன் மனைவியும், உன் புத் திரருடைய மனைவிகளும், பேழையிற் பிர வேசியுங்கள்.

௧கூ. சீவரட்சையின் பொருட்டுச் சகலவித மாமிச சீவசெந்துக்களிலும் ஆணும் பெண் ணுமாக வகை ஒவ்வொன்றுக்கு ஒவ்வொரு சோடு உன்னுடனே பேழைக்குட்படுத்திக் கொள்.

உ௦. அந்தப்படி சீவரட்சையின் பொருட் டு வகைவகையான பறவைகளிலும், வகை வகையான மிருகங்களிலும், பூமியிலே வ கைவகையான ஊர்வனவெல்லாவற்றிலும், வகை ஒவ்வொன்றுக்கு ஒவ்வொருசோடு உ ன்னிடத்தில் வரும்.

உக. உனக்கும், அவைகளுக்கும், ஆகார மாகச் சகலவித போசன பதார்த்தங்களையுஞ்

சேர்த்து, உன்னிடத்தில் வைத்துக்கொள்ளே ன்று சொன்னார்.

௨௨. நோவா அப்படியே செய்தான். தன க்குத் தேவன் விதித்தபடி சகலத்தையும் நி றைவேற்றினான்.

## எ. அதிகாரம்.

*க. பேழையிற் பிரவேசிக்க நோவாபெற்ற கட்டளை: எ. நோவாவும் அவன் குடும்பத்தாரும் சீவசெந்துக் களோடே பேழையிற் பிரவேசித்தல் : ௰எ. சலப்பி ரளய முண்டாதல்.*

க. யெகோவா நோவாவை நோக்கி, இந் தச் சந்ததியில் என்முன்னே உன்னை நீதிமா னென்று கண்டேன். ஆகையால் நீயும், உ ன் குடும்பத்தாரனைவரும், பேழையிற் பிர வேசியுங்கள்.

௨. பூமியின் மேல் எங்கும் வித்தைக் காக் கும் பொருட்டு, சுசியான எல்லாவித மிருகங் களிலும், ஆணும் பெண்ணுமாக எவ்வேழு சோடும், அசுசியான மிருகங்களில், ஆணும் பெண்ணுமாக ஒவ்வொருசோடும்,

௩. ஆகாயப் பறவைகளில், சேவலும் பே டுமாக எவ்வேழு சோடும் உன்னிடத்திற் சே ர்த்துக்கொள்.

௪. ஏழுநாட் சென்றபின், நாற்பது நாள் இ

ரவும் பகலும், பூமியின் மேல் மழை வருஷி க்கப்பண்ணி, நான் சிருஷ்டித்த சேந்துக்கள் அனைத்தையும், பூமியின் முகத்தில் நின்றுந் துடைப்பேனென்றார்.

ரு. நோவா தனக்கு யேகோவா விதித்தப டி சகலத்தையுஞ் செய்தான்.

சு. சலப்பிரளயம் பூமியின்மேல் உண்டா னகாலத்தில் நோவாவுக்கு வயது அறுநூறு.

எ. சலப்பிரளயத்தினிமித்தம் நோவாவும், அவன் புத்திரரும், அவன் மனைவியும், அவ ன் புத்திரருடைய மனைவிகளும் பேழையிற் பிரவேசித்தார்கள்.

அ. நோவாவுக்குத் தேவன் விதித்தபடி சு சியான மிருகங்களிலும், அசுசியான மிருகங் களிலும், பறவைகளிலும், பூமியின்மேல் ஊ ருகிற எல்லாவற்றிலும்,

கூ. ஆணும் பெண்ணுஞ் சோடு சோடாக நோவாவிடத்திலே பேழையிற் புகுந்தன.

௰. ஏழு நாட்சென்றபின்பு பூமியிலே சலப் பிரளயம் ஆரம்பித்தது.

௰க. நோவாவுக்கு அறுநூறும் வயதாகும் வருஷத்தின் இரண்டாம்மாதம் பதினேழாந் தினத்திற் கடலின் ஊற்றுக்கண் எல்லாம் பி ளக்கப்பட்டன. மேகத் துவாரங்கள் திறக்க ப்பட்டன.

௰௨. நாற்பதுநாள் இரவும் பகலும் பூமியின்மேற் பெருமழை உண்டாயிற்று.

௰௩. அன்றைத்தினமே நோவாவும், நோவாவின் புத்திரராகிய ஷேமும், காமும், யாப்பேத்தும், நோவாவின் மனைவியும், அவன் புத்திரருடைய மனைவிகள் மூன்றுபேரும், பேழையிற் பிரவேசித்தார்கள்.

௰௪. வகைவகையான சகலவிதக் காட்டு மிருகங்களும், வகைவகையான சகலவிதநாட்டு மிருகங்களும், பூமியின்மேலூருகிற வகைவகையான சகலவித ஊர்வனவும், வகைவகையான சகலவிதப் பறவைகளும், பலவிதமான சிறகுகளுள்ள சகலவித பட்சிகளும் பிரவேசித்தன.

௰௫. இப்படிச் சீவசுவாச மாமிசசெந்துகள் எல்லாவற்றிலேயுஞ் சோடு சோடாக நோவாவிடத்திற் பேழையிற் பிரவேசித்தன.

௰௬. தேவன் அவனுக்கு விதித்தபடி ஆணும் பெண்ணுமாகிய சகலவித மாமிச செந்துக்களும் பிரவேசித்தன. பின்பு யெகோவா கதவை அடைத்தார்.

௰௭. பூமியின்மேல் நாற்பதுநாளும் பிரவாகித்த சலப்பிரளயத்தினாற் சலம் பெருகிப் பேழையை மிதக்கச்செய்ய, அது பூமியை விட்டுமேலே மிதந்தது.

௰௮. சலம் பெருவெள்ளமாகிப் பூமியின் மேல் மிகவும் பெருகிற்று. பேழை சலமுகத்தின்மேல் மிதந்துகொண்டிருந்தது.

௰௯. சலம் பூமியின்மேல் மிகவும் அதிகமாய்ப் பெருகினதினாலே வானத்தின் கீழ் எங்குமுள்ள உயர்ந்தமலைகளெல்லாம் மூடப்பட்டன.

௨௰. மூடப்பட்ட மலைகளுக்கு மேலாய்ப் பதினைந்து முழ உயரத்திற்குச் சலம் பெருகிற்று.

௨௧. அதினாலே மாமிச சேந்துக்களாகிய பறவைகளும், நாட்டுமிருகங்களும், காட்டுமிருகங்களும், பூமியின்மேல் ஊர்வனயாவும், மனுஷசாதியாவும், பூமியின்மேற் சஞ்சரித்தவையெல்லாம், மாய்ந்துபோயின.

௨௨. தரையிலுண்டான எல்லாவற்றிலும் நாசியிற் சீவசுவாசமுள்ளவையெல்லாம் மரித்தன.

௨௩. பூமியின்மேலே மனிதன்முதல் மிருகங்கள் ஊர்வன ஆகாயப்பறவைகளீறாக, இருந்த உயிருள்ளயாவும் அழிந்துபோயின். அவைகள் பூமியில்நின்றுந் துடைக்கப்பட்டன. நோவாவும் அவனோடே பேழையிலிருந்தவைகளுமாத்திரஞ் சீவித்திருந்தன.

௨௪. சலம் பூமியின்மேல் நூற்றைம்பதுநாளளவும் மிகவும் பிரவாகித்துக்கொண்டிருந்தது.

## அ. அதிகாரம்.

க. சலப்பிரளயத்தினொடுக்கம்: ௪. பேழை அரராத்மலையிலேதங்கல்: எ. காகமும் புறுவும்புறப்படல்: ௰. திரும்பவும் புறு, புறப்படல்: ௰௫. நோவாபேழையில்நின்றும்புறப்படும்படி தேவன் கட்டளையிடல்: ௨௰. நோவா பலியிடல் அதற்குத் தேவன் வாக்குத்தத்தஞ்செய்தல்.

க. தேவன் நோவாவையும், அவனுடனே பேழையிலிருந்த காட்டுமிருகங்களெல்லாவற்றையும், நாட்டு மிருகங்களெல்லாவற்றையும், நினைந்தருளினார். தேவன் பூமியின்மேற் காற்றுவீசப்பண்ண, சலம் வடிந்தது.

௨. கடலின் ஊற்றுக் கண்களும் மேகத்துவாரங்களும் அடைபட்டன. வானத்துமழையும் நின்றது.

௩. கிரமங் கிரமமாகச் சலம் வற்றிப் பூமியைவிட்டு நூற்றைம்பதுநாளளவிற் குறைந்தது.

௪. ஏழாம் மாதம் பதினேழாந் தேதியிற் பேழை அரராத் என்னும் மலைகளின்மேலே தங்கிற்று.

௫. பத்தாம் மாதம் வரைக்கும் சலம் கு

றைந்துகுறைந்து வந்தது. அந்தப் பத்தாம் மாதம் முதலாந்தினத்திலே மலைச் சிகரங்கள் தோன்றின.

சு. நாற்பதுநாள் சென்றபின்பு, நோவா தான்செய்த பேழையின் பலகணியைத் திறந்து ஒரு காகத்தை வெளியேவிட்டான்.

எ. அது புறப்பட்டுப் பூமியின் மேலிருந்த சலம் வற்றுமளவும் அங்குமிங்குமாகத் திரிந்தது.

அ. பூமியின்மேற் சலம் வற்றிப்போயிற்றோவென்றறியும்பொருட்டு, ஒரு புறாவையுந் தன்னிடத்திலிருந்து வெளியேவிட்டான்.

கூ. பூமியெங்கும் சலம் நின்றதினாற் புறா, தன் உள்ளங்காலை வைத்து இளைப்பாறுமிடத்தைக்காணாமல் திரும்பிப் பேழையிலே அவனிடத்திற் சேர்ந்தது. அவன் தன்கையை நீட்டி அதைப்பிடித்துத் தன்னிடமாகப் பேழையிற் சேர்த்துக்கொண்டான்.

ம. பின்னும் ஏழுநாட்பொறுத்து மறுபடியும் அப்புறாவைப் பேழையிலிருந்து வெளியேவிட்டான்.

மக. சாயங்காலத்திற் புறா அவனிடத்தில் வந்துசேர்ந்தது. சீதவிருட்சத்திற் கொய்யப்பட்ட ஒரு இலை அதின் வாயிலிருந்தது. அத

ஞலே நோவா பூமியின்மேற் சலங் குறைந்து போயிற்றென்று அறிந்தான்.

௰௨. அவன் பின்னும் ஏழுநாட் பொறுத்து அப்புறுவை வெளியேவிட்டான். அது அவனிடத்திற்குத் திரும்பிவரவில்லை.

௰௩. தனக்கு அறுநூற்றொருவயதாகும் வருஷத்தில் முதல்மாதம், முதலாந் தினத்தில், பூமியின்மேல் இருந்த சலம் வற்றிப்போயிற்று; நோவா பேழையின் மேற்றட்டை எடுத்துப்பார்த்து, பூமி உலர்ந்திருக்கிறதைக் கண்டான்.

௰௪. இரண்டாம் மாதம் இருபத்தேழாந்தினத்திற் பூமி உலர்ந்துபோயிற்று.

௰௫. தேவன் நோவாவைநோக்கி,

௰௬. நீயும் உன்மனைவியும், உன் புத்திரரும், உன்புத்திரருடைய மனைவிகளும், பேழையைவிட்டுப் புறப்படுங்கள்.

௰௭. உன்னிடத்திலிருக்கிற சகலவித மாமிச சேந்துக்களாகிய பறவைகளையும், மிருகங்களையும், பூமியின்மேல் ஊருகிற ஊர்வனவற்றையும், உன்னுடனே வெளியே புறப்படுத்து. அவைகள் பூமியிலே திரளாய்ச் சனிப்பிக்கவும், பூமியன்மேல் மிகுதியாக விருத்தியடையவுங் கடவனவென்றார்.

௰௮. நோவாவும், அவன் புத்திரரும், அவ

ன் மனைவியும், அவன் புத்திரருடைய மனை விகளும், புறப்பட்டு வந்தார்கள்.

௰௯. பூமியின்மேற் சஞ்சரிக்கும் சகல மிரு கங்களும், சகல ஊர்வனவும், சகல பறவை களும், இனமினமாய்ப், பேழையை விட்டு புறப்பட்டன.

௨௰. நோவா யெகோவாவுக்கு, ஒரு வேதி கையுண்டாக்கிச் சுசியான சகல மிருகங்களி லும், சுசியான சகல பறவைகளிலும், சில வற்றைத் தெரிந்து அவைகளை வேதிகையி ன்மேற் பலிகளாகத் தகனித்தான்.

௨௧. யெகோவா சுகந்தத்தை மோந்து, சி றுபிராயந்தொடங்கி மனிதருடைய உள்ளத் திலேதோன்றும் சிந்தனை கேடாயிருந்தாலும்; மனிதர்நிமித்தம் இனி நான் பூமியைச் சபிக் கமாட்டேன். நான் முன் செய்ததுபோலச் ச கல பிராணிகளையுஞ் சங்கரிக்கமாட்டேன்.

௨௨. பூமி நிலைத்திருக்குமளவும், விதைப் பும் அறுப்பும், சீதளமும் உஷ்டணமும், கு ளிர்காலமும், கோடைக்காலமும், பகலும், இரவும், ஒழிவதில்லையென்று தமதுள்ளத்தி ற் சொன்னார்.

# ௯. அதிகாரம்.

௧. தேவன் நோவாவை ஆசீர்வதித்தல்: ௪. இரத்தத்தையுங் கொலையையும் விலக்கல்: ௮. தேவன் உடன்படிக்கையைத் திடப்படுத்தி அதற்குமழைவில்லை அடையாளமாகவேற்படுத்தல்: ௨௰. நோவாதிராட்சத் தோட்டத்தை நாட்டி வெறிகொள்ளல்: ௨௫. கானானைச் சபித்து, சேமை ஆசீர்வதித்து யாப்பேத்துக்காகப் பிரார்த்தனைபண்ணி மரித்தல்.

௧. தேவன் நோவாவையும், அவன் புத்திரரையும், ஆசீர்வதித்து, நீங்கள் சந்தான விர்த்தியுடையவர்களாய்ப் பெருகிப் பூமியை நிரப்புங்கள்.

௨. பூமியிலுள்ள சகல மிருகங்களும், ஆகாயத்திலுள்ள சகல பறவைகளும் பூமியிற் சஞ்சரிக்கிறயாவும், சமுத்திர மச்சங்கள்யாவும், உங்களுக்கு அஞ்சி உங்களுக்குப் பயந்திருக்கும், அவை உங்கள் கைக்கு ஒப்பிக்கப்பட்டன.

௩. சஞ்சரிக்குஞ் சீவசெந்துக்கள் யாவையும், நீங்கள் ஆகாரமாய்க்கொள்ளலாம். பசும்பூண்டுகளைப்போலவே அவைகளெல்லாவற்றையும் உங்களுக்குத் தந்தேன்.

௪. மாமிசத்தை அதன் சீவனாகிய இரத்தத்தோடே புசியாதிருப்பீர்களாக.

௫. சீவனாகிய உங்கள் இரத்தத்தினிமித்த

ம் பழிவாங்குவேன். சகல சீவசெந்துக்களி டத்திலும் பழிவாங்குவேன். மனிதனுடை ய சீவனிமித்தம் எந்த மனிதனிடத்திலுமன் றி, அவனவன் சகோதரனிடத்திலும் பழிவா ங்குவேன்.

௬. தேவன் தமது சாயலாக மனிதனை உ ண்டாக்கினதினாலே, மனிதனுடைய இரத்த த்தைச் சிந்துகிறவனெவனோ அவனுடைய இரத்தம் மனிதனாலே சிந்தப்படக்கடவது.

௭. நீங்கள் சந்தான விர்த்தியுடையவர்களா ய்ப்பெருகி,பூமியிலேதிரளாய்த் தழைத்துமிகு த்திருங்களென்று அவர்களுக்குச் சொன்னார்.

௮. பின்னும் தேவன், நோவாவையும் அ வன் புத்திரரையும்நோக்கி,

௯. நான் உங்களுக்கும், உங்களுக்குப்பி ன் வரும் உங்கள் சந்ததிக்கும்,

௰. உங்களோடே பேழையிலிருந்து புறப் படும் சகல செந்துக்களுக்குமன்றி, இனிப்பூ மியிலுண்டாகுஞ் சகல சீவசெந்துக்களுமாகி ய பறவைகளுக்கும், நாட்டு மிருகங்களுக்கு ம், காட்டு மிருகங்கள் சகலத்திற்கும், என் உ டன்படிக்கையை நிலைப்படுத்துகிறேன்.

௰௧. இனி மாமிசமுள்ளவைகளெல்லாம் சலப்பிரளயத்தால் சிதைக்கப்படுதலில்லை யென்றும் பூமியை அழிக்குஞ் சலப்பிரளயம்

உண்டாகாதேன்றுமே உங்களுக்கு எனது உடன்படிக்கையை ஏற்படுத்துகிறேனென்றார்.

௰உ. அன்றியும் தேவன் எனக்கும், உங்களுக்கும், உங்களிடத்திலுள்ள எல்லாச் சீவசெந்துக்களுக்கும், நித்திய தலைமுறையாக நான் பண்ணுகிற உடன்படிக்கைக்கு அடையாளமாக,

௰௩. நான் என் வில்லை மேகத்தில் ஸதாபித்திருக்கிறேன். அதுவே எனக்கும், பூலோகத்துக்குமுண்டான உடன்படிக்கைக்கு அடையாளம்.

௰௪. பூமிக்குமேலாய் மேகத்தை நான் வருவிக்கும்பொழுது அந்த வில்லு மேகத்திலே தோன்றும். நான், எனக்கும், உங்களுக்கும், மாமிச செந்துக்களேல்லாவற்றிற்கும், உண்டான உடன்படிக்கையை நினைப்பேன்.

௰௫. சலப்பிரளயமுண்டாகி மாமிசமுள்ள எல்லாவற்றையும் இனி அழிக்காது.

௰௬. தேவனுக்கும், பூமியின்மேலுள்ள சீவசெந்துக்களேல்லாவற்றிற்கு முண்டான நித்திய உடன்படிக்கையை நினைப்பதற்கு, மேகத்திலே தோன்றும் வில்லை நோக்குவேனென்றார்.

௰௭. தேவன், நோவாவை நோக்கி, எனக்கும், பூமியின்மேலிருக்கிற மாமிசமுள்ள யா

வுக்கும், நான் ஏற்படுத்தின உடன்படிக்கைக்கு அடையாளம் இதுவேயென்றார்.

லஅ. பேழையிலிருந்து புறப்பட்ட நோவாவின் புத்திரர் சேம்; காம், யாப்பேத்தென்பவர்களே. காம் கானுனுக்குப் பிதா.

லகூ. இம்மூவரும் நோவாவின் புத்திரர். பூலோகமெங்கும் வியாபித்திருக்கிறவர்கள் இவர்கள் சந்ததியார்.

உல. நோவா பயிர் செய்கிறவனுகித் திராட்சத்தோட்டத்தை நாட்டினன்.

உக. அவன் திராட்சரசத்தைக்குடித்து வெறிகொண்டு, தன் கூடாரத்தில் நிருவாணமாய்க் கிடந்தான்.

உஉ. கானுனுக்குப் பிதாவாகிய காம், தன் பிதாவின் நிருவாணத்தைக் கண்டு, வெளியிலிருந்த தன் சகோதரர் இருவருக்கும் அறிவித்தான்.

உங. சேமும்; யாப்பேத்தும், ஒரு வஸ்திரத்தை எடுத்துத்தங்கள் இருவருடைய தோள் மேலும் போட்டுக்கொண்டு, தங்கள் பிதாவுக்குப் புறங்காட்டிவந்து, அவன் நிருவாணத்தை மூடினார்கள். அவர்கள் எதிர் முகமாகப் போகாததினுலே பிதாவின் நிருவாணத்தைக் காணவில்லை.

உச. நோவா, திராட்சரசத்தின் மயக்கம் நீ

ங்கி விழித்தபொழுது, தன் இளையகுமாரன் தனக்குச் செய்ததை அறிந்து,

உரு. கானான் சாபமேற்று, தன் சகோதரருக்கு அடிமைகளின் அடிமையாயிருப்பானென்றான்.

உசு. சேமுடைய தேவனாகிய யேகோவாவுக்கு ஸ்தோத்திரம். கானான் அவர்களுக்கு அடிமையாயிருப்பான்.

உஎ. யாப்பேத்தை, தேவன் விர்த்தியாக்குவார். அவன் சேமுடைய கூடாரங்களில் வசிப்பான். கானான், அவர்களுக்கு அடிமையாயிருப்பான் என்றான்.

உஅ. நோவா சலப்பிரளயத்துக்குப் பின்னும், முந்நூற்றைம்பது வருஷமிருந்தான்.

உகூ. ஆகத் தொளாயிரத்தைம்பது வருஷம், நோவா சீவித்திருந்து மரித்தான்.

## ய. அதிகாரம்.

*க. நோவாவுடைய சேஷட புத்திரனாகிய யாப்பேத்தின்வமிசவரலாறு : ரு. கனிஷடபுத்திரனாகிய காமின் வமிசவரலாறு : உக. மத்திமபுத்திரனாகிய சேமுடைய வமிசவரலாறு.*

க. நோவாவின் புத்திரராகிய சேம், காம், யாப்பேத்தென்பவர்களுடைய வமிச வரலா

ய. சலப்பிரளயத்திற்குப் பின்பு அவர்களு க்குப் புத்திரர் பிறந்தார்கள்.

உ. யாப்பேத்தின் புத்திரர் கோமர், மாகோ க், மாதாய், யாவான், தூபால், மேஷேக், தீ ராஸ் என்பவர்கள்.

௩. கோமரின் புத்திரர் அஷ்கினஸ், ரீபாத் து, தோகற்மா என்பவர்கள்.

௪. யாவானுடைய புத்திரர், எலீஷா, தர் ஷிஷ், கித்தீம், தோதானிம் என்பவர்கள்.

௫. இவர்கள் வழியாய்த் தோன்றிய அன் னியதேசத்தாரின் தீவுகள், அவனவன் பா ஷை, அவரவர்கள் கோத்திரம், சாதி என்ப வைகளின்படி வேறு வேறு தேசங்களாய்ப் பகுக்கப்பட்டன.

௬. காமுடைய புத்திரர், கூஷ், மிஸ்ராயீம், பூற்று, கானான் என்பவர்கள்.

௭. கூஷினுடைய புத்திரர் சேபா, அவி லா, சப்தா, ராமா, சப்தேகா என்பவர்கள். ராமாவின் புத்திரர், ஷேபா, தேதான், என்ப வர்கள்.

௮. கூஷ் நிம்ரோத்தைப்பெற்றான். அவ ன் பூமியிலே பராக்கிரமசாலியாகி,

௯. யேகோவாவின் பார்வைக்கு வலிய வேடனாயிருந்தான் ; அதினால், "யேகோவா வின் பார்வைக்கு வலியவேடனாகிய நிம்ரோ

த்தைப்போல" என்னுமொழி வழக்கமாயி ற்று.

ய. ஷினியார் தேசத்திலுள்ள பாபேல், எ் ரேக், அகத், கல்னே என்னுமிவைகள் அவ ன் ஆண்ட அரசாட்சியின் ஆதிஸ்தலங்கள்.

யக. அத்தேசத்திலிருந்து அஷூர் புறப்பட்டு ப்போய் நினிவேயையும் ரேகோபோத்பட்ட ணத்தையும், காலாகையும்,

யஉ. நினிவேக்கும், காலாக்கும்; இடை யே, மகா நகரமாகிய ரேசேனையும் உண்டாக் கினன்.

யங. மிஸ்ருயும், லூதீமையும், அனமீமை யும், லிகாபீமையும், நப்துகீமையும்,

யச. பத்துருசீமையும், பேலிஸ்தருக்கு ஆ திபிதாவாகிய கஸ்லூகீமையும், கப்தோரிமை யும்பெற்றான்.

யரு. கானான், தன் சேஷ்ட புத்திரனாகிய சீதோனையும், கேத்தையும்,

யசா. எபூசியையும், எமோரியையும், கிர காசியையும்;

யஎ. ஈவியையும், அர்கீயையும், சீனியை யும்,

யஅ. அரவாதியையும், சேமாரியையும்; கா மாத்தியையும் பெற்றான். பின்பு கானானியர் என்னுஞ் சந்ததியார் பிரிந்து பரந்திருந்தார்கள்.

யகூ. கானானியருடைய எல்லை, சீதோன் முதல் கேரார் மார்க்கமாய், காசாமட்டும்; அது முதல் சோதோம், கொமோரா, அத்மா, சேபோயிம், மார்க்கமாய், லாசாபரியந்தமும், போயிருக்கும்.

உய. இவர்கள் காமுடைய சந்ததியார்; இவர்கள் தங்களுக்குண்டான குடும்பம், பாஷை, தேசம், சாதியேன்பவைகளாற் பிரிக்கப்பட்டார்கள்.

உக. சேமுக்கும் பிள்ளைகள் பிறந்தார்கள். அவன் ஏபேருடைய சந்ததியாரெல்லாருக்கும் ஆதி பிதாவும், மூத்தவனாகிய யாப்பேத்துக்குச் சகோதரனுமாயிருந்தான்.

உஉ. சேமுடைய புத்திரர், எலாம், அஷூர், அற்பக்சாத், லூத்து, அராம், என்பவர்கள்.

உங. அராமுடைய புத்திரர், ஊத்சு, கூல், கேத்தேர், மாஷ் என்பவர்கள்.

உச. அர்பக்சாத், சாலாவைப் பெற்றான்; சாலாக், ஏபேரைப்பெற்றான்.

உரு. ஏபேருக்கு இரண்டு புத்திரர் பிறந்தார்கள். ஒருவனுக்குப் பேலேக்கென்றுபேர். அவனுடைய நாள்களில் பூமி பகுக்கப்பட்டது. அவனுடைய சகோதரனுக்கு யோக்தானென்றுபேயர்.

உசூ. யோக்தான் அல்மோதாதையும், ச

லேப்பையும், ஆசர்மாவேத்தையும், யாரா கையும்,

உஎ. ஆதோராமையும், ஊசாலேயும், திக் லாவையும்,

உஅ. ஒபாலேயும், அபிமாவேலேயும், ஷே பாவையும்,

உகூ. ஒப்பீரையும், அவிலாவையும், யோ பாபையும் பெற்றன். இவர்கள் அனைவரு ம் யோக்தானுடைய புத்திரர்.

௩௰. இவர்களுடைய வாசஸ்தானம், மே ஷாமுதல் கிழக்கேயுள்ள மலேயாகிய ஷேப் பார் பரியந்தமிருந்தது.

௩க. தங்கள் தங்கள் தேசம், சனம், குடு ம்பம், பாஷை என்பவைகளால் வேறுபட் ட சேமின் சந்ததியார் இவர்களே.

௩உ. இவர்கள், தங்கள் தங்கள் சாதிகளி லுள்ள வமிச வரலாற்றின்படி வேறுபட்ட, நோவாவின் புத்திரருடைய சந்ததியார். சலப் பிரளயத்துக்குப் பின், பூமியிற் பகுக்கப்பட் ட எத்தேசத்தாரும், இவர்கள் வழியாய்த் தோ ன்றினவர்கள்.

# ௰க. அதிகாரம்

க. பாபேலை உண்டாக்கினதினிமித்தம் பாஷையை வேறுக்கல்: ௰. சேமின் வமிசவரலாறு: உஎ. தேராவின் வமிசவரலாறு: ௩௰. தேராகு, ஆபிராம் லோத்து என்பவர்கள் காரானுக்குப் புறப்படல்.

க. பூமியிலுள்ள சகலருக்கும் பாஷையும், மொழியும், ஒரேவிதமாயிருந்தன.

உ. அக்காலத்திலே சனங்கள், கீழ்த்திசையில் நின்று பிரயாணமாய்ப் போய், ஷினியார் தேசத்தில் ஒரு சமபூமியைச் சேர்ந்து, அங்கே வாசம்பண்ணுகையில்,

௩. நாம் செங்கல்லறுத்து, அதைச் செவ்வையாய்ச் சூளையிடுவோம் வாருங்களென்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள். அவர்கள் கருங்கல்லுக்குச் செங்கல்லும், சுண்ணச்சாந்துக்கு நிலக்கீலும், எடுத்துக்கொண்டார்கள்.

ச. பின்னும் அவர்கள், நாம் பூமியின்மேலெங்குஞ் சிதறுதபடிக்கு, நமக்கோரு நகரத்தையும், வானத்தையளாவுஞ் சிகரமுள்ள ஒரு கோபுரத்தையும், உண்டாக்குவோம்; அதினால் நமக்கோரு பேருமுண்டாகும், வாருங்களென்று சொல்லிக்கொண்டார்கள்.

ரு. இப்படியே நரபுத்திரர் உண்டாக்குகி

ற நகரத்தையும், கோபுரத்தையும் பார்க்கிறதற்கு யேகோவா இறங்கினார்.

சு. யேகோவா, பாருங்கள், ஜனங்கள் ஒன்று. அவர்களனைவருக்கும் பாஷையும் ஒன்று. இப்படிச் செய்யத்தொடங்கினார்கள். இனி அவர்கள் செய்ய நினைத்த யாதொன்றையும் செய்வதில் தடைபடார்கள்.

எ. நாம் இறங்கி, ஒருவர் பேசுவதை மற்றொருவர் அறியாதபடிக்கு, அங்கே அவர்கள் பாஷையை, வெவ்வேறாக்குவோமென்று சொன்னார்.

அ. அப்படியே யேகோவா, அவர்களை அவ்விடத்தில் நின்று பூமியின்மேலெங்கும் போகும்படி சிதற அடித்தார். அவர்கள் நகரமுண்டாக்குதலை விட்டார்கள்.

கூ. பூமியெங்கும் வழங்கிய பாஷையை யேகோவா அங்கே வெவ்வேறாக்கினதினால், அவ்விடத்துக்கு, பாபேல் என்னும் பெயராயிற்று. யேகோவா, அவர்களை அவ்விடம் விட்டு, பூமியின்மேலெங்கும் சிதறவும் பண்ணினார்.

ய. சேமின் சந்ததியின் வரலாறு: ஜலப்பிரளயம் ஒழிந்த இரண்டு வருஷத்தின் பின்; சேம் நூறாம் வயதில், அர்பக்சாத்தைப்பெற்றான்;

யக. சேம், அர்பக்சாத்தைப் பெற்றபின், ஐந்நூறுவருஷஞ் சீவித்திருந்தான். அவன் புத்திரரையும், புத்திரிகளேயும் பெற்றுன்.

யஉ. அர்பக்சாத்து, முப்பத்தைந்தாம் வயதில், சாலாகைப் பெற்றுன்.

யஈ. அர்பக்சாத்து சாலாகைப் பெற்றபின், நானூற்றுமூன்று வருஷஞ் சீவித்திருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளேயும்பெற்றுன்.

யச. சாலாகு, முப்பதாம் வயதில், ஏபேரைப் பெற்றுன்.

யரு. சாலாகு ஏபேரைப்பெற்றபின், நானூற்றுமூன்றுவருஷஞ் சீவித்திருந்தான். அவன் புத்திரரையும், புத்திரிகளேயும் பெற்றுன்.

யசா. ஏபேர் முப்பத்துநாலாம் வயதில், பேலேகைப்பெற்றுன்.

யஎ. ஏபேர் பேலேகைப் பெற்றபின், நானூற்று முப்பதுவருஷஞ் சீவித்திருந்தான். அவன் புத்திரரையும், புத்திரிகளேயும் பெற்றுன்.

யஅ. பேலேக் முப்பதாம் வயதிலே ரேகூவைப்பெற்றுன்.

யகூ. பேலேக்,ரேகூவைப் பெற்றபின், இருநூற்றென்பது வருஷஞ் சீவித்திருந்தான். அவன் புத்திரரையும், புத்திரிகளேயும் பெற்றுன்.

உய. ரேகூ முப்பத்திரண்டாம் வயதிலே சேரூகைப்பெற்ருன்.

உக. ரேகூ சேரூகைப் பெற்றபின், இருநூற்றேழு வருஷஞ் சீவித்திருந்தான். அவன் புத்திரரையும், புத்திரிகளேயும் பெற்ருன்.

உஉ. சேரூக் முப்பதாம் வயதில் நாகோரைப் பெற்ருன்.

உரு. சேரூக் நாகோரைப் பெற்றபின், இருநூறுவருஷஞ் சீவித்திருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளேயும் பெற்ருன்.

உச. நாகோர் இருபத்தோன்பதாம் வயதில் தேராகைப் பெற்ருன்.

உரு. நாகோர் தேராகைப் பெற்றபின், நூற்றுப் பத்தோன்பது வருஷஞ் சீவித்திருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளேயும் பெற்ருன்.

உசா. தேராக் எழுபது வயதின்மேல் ஆபிராம், நாகோர், ஆரான் என்பவர்களேப் பெற்ருன்.

உஎ. தேராகின் சந்ததியின் வரலாறு; தேராக் ஆபிராம், நாகோர், ஆரான் என்பவர்களேப் பெற்ருன். ஆரான் லோத்தைப் பெற்ருன்.

உஅ. ஆரான், தான் பிறந்த கல்தேயரின் தேசத்திலுள்ள ஊர் என்னும் நகரத்திலே, த

ன் பிதாவாகிய தேராகுக்கு முன்னமே மரித்தான்.

உகூ. ஆபிராமும், நாகோரும், விவாகம் பண்ணினார்கள். ஆபிராமுடைய மனைவிக்குச் சாராயென்றுபேயர். நாகோருடைய மனைவிக்கு மில்க்காளென்றுபேர். இவள் ஆரானுடைய குமாரத்தி. அந்த ஆரான் மில்க்காளுக்கும், இஸ்காளுக்கும் பிதா.

ஙய. சாராய்க்குச் சந்ததியில்லை. அவள் மலடி.

ஙக. தேராகு, தன் புத்திரனாகிய ஆபிராமையும், ஆரானுடைய புத்திரனும், தன் பேரனுமாயிருந்த லோத்தையும், தன் புத்திரன் ஆபிராமுடைய மனைவியாகிய தன் மருமகள் சாராயையும் அழைத்துக்கொண்டு, அவர்களுடனே கல்தேயர் வசிக்கும் ஊர் என்னும் நகரத்தை விட்டு, கானான் தேசத்திற்குப் போகப் புறப்பட்டான். அவர்கள் காரான்மட்டுஞ்சென்று அங்கே தங்கினார்கள்.

ஙஉ. தேராகு இருநூற்றைந்து வருஷஞ் சீவித்திருந்து காரானிலே இறந்தான்.

## ௰௨. அதிகாரம்.

*க. தேவன் ஆபிராமை அழைத்து ஆசீர்வதித்தல் : ச. ஆபிராம் லோத்துடன் காராணவிட்டுப் புறப்படல்: ரு. கானான்தேசத்திலே சஞ்சரித்தல் : ௰. பஞ்சத்தினிமித்தம் எகிப்துதேசத்திற்குப் புறப்படல்.: ௰ச. அங்குள்ள இராசா ஆபிராமின் ஸ்திரியைக் கவர்ந்து வாதைகளினிமித்தந் திரும்பவும் அவளை ஒப்பித்தல்.*

க. யெகோவா ஆபிராமை நோக்கி, நீ உன் பிதாவின் வீட்டையும், உன் இனத்தாரையும், உன் தேசத்தையும் விட்டுப் புறப்பட்டு, நான் உனக்குக் காண்பிக்கும் தேசத்திற்குப்போ;

௨. நான் உன்னிலே மகத்தான ஒரு சாதியைத் தோற்றுவித்து, உன்னை ஆசீர்வதித்து, உன் நாமத்தை மகிமைப்படுத்துவேன்; நீ ஆசீர்வாதமாயிருப்பாய்.

ந. உன்னை ஆசீர்வதிப்பவர்களை ஆசீர்வதிப்பேன்; உன்னைச் சபிப்பவனைச் சபிப்பேன்; பூமியிலுள்ள சகல சந்ததிகளும் உன்னால் ஆசீர்வதிக்கப்படுமென்று சொல்லியிருந்தார்.

ச ஆபிராம் தனக்கு யெகோவா சொல்லியிருந்தபடியே புறப்பட்டுப் போனான். லோத்தும் அவனுடனே போனான். ஆபிராம் கா

ரானைவிட்டுப் புறப்பட்டபொழுது, அவனுக்கு எழுபத்தைந்து வயது.

ரு. ஆபிராம் தன் மனைவியாகிய சாராயையும், தன் சகோதரனுடைய புத்திரனாகிய லோத்தையும், தாங்கள் காரானிலே சம்பாதித்த பொருள்கள் எல்லாவற்றையும், தங்கள்வசத்தில் இருந்தவர்களையுஞ் சேர்த்துக்கொண்டான். அவர்கள் கானான் தேசத்திற்குப் புறப்பட்டுப் போய், அந்தக்கானான்தேசத்திற் சேர்ந்தார்கள்.

சு. மேலும், ஆபிராம் அந்தத்தேசத்திலே சுற்றித்திரிந்து, சீகேம் என்னுமிடத்திற்குச் சமீபமான மோரே என்னுஞ் சமபூமியை அடைந்தான். அக்காலத்திலே கானானியர் அத்தேசத்திலிருந்தார்கள்.

எ. யேகோவா ஆபிராமுக்குத் தரிசனையாகி, உன் சந்ததிக்கு இந்தத் தேசத்தைக் கொடுப்பேனென்றார். அவன் தனக்குத் தரிசனையான யேகோவாவுக்கு, அங்கேயொரு வேதிகையை உண்டாக்கினான்.

அ. அவன் அவ்விடம் விட்டுப் பேர்ந்து, பெத்தேலுக்குக் கிழக்கேயுள்ள ஒரு மலைக்குப்போய், பெத்தேலுக்குக் கிழக்காகவும், ஆயிக்குமேற்காகவுமிருக்குமிடத்தில் கூடாரம் போட்டு, அங்கேயும் யேகோவாவுக்கு ஒரு

வேதிகையுண்டாக்கி, யெகோவாவின் நாமத்தைச்சொல்லிப் பிரார்த்தித்தான்.

கூ. ஆபிராம் பின்னும் பிரயாணமாய்ப் புறப்பட்டுத் தெற்கேநாடிப் போனான்.

ய. அந்தத் தேசத்திலே பஞ்சமுண்டாயிற்று. பஞ்சம், தேசத்திலே கொடிதாயிருந்ததினால் ஆபிராம் எகிப்துதேசத்திலே தங்கும்படி அவ்விடத்துக்குப் போனான்.

யக. எகிப்துக்குச் சமீபித்த மாத்திரத்தில், அவன் தன் மனைவியாகிய சாராயை நோக்கி, நீ கண்ணுக்கு அழகான ஸ்திரியென்று அறிவேன்,

யஉ. எகிப்தியர் உன்னைக் காணுமிடத்தில், இவள் அவனுடைய மனைவியென்று சொல்லி என்னைக் கொலைசெய்து, உன்னை உயிரோடே விடுவார்கள்.

யஙு. ஆகையால் உன் நிமித்தமாய், எனக்கு நன்மையுண்டாகும்படிக்கும், உன்னாலே நான் உயிரோடிருக்கும்படிக்கும், நான் இவனுடைய சகோதரியென்று சொல்லென்றான்.

யச. ஆபிராம் எகிப்திலே சேர்ந்திருந்தபொழுது, எகிப்தியர் அந்த ஸ்திரி மிகவும் அழகுள்ளவளாயிருக்கக் கண்டார்கள்.

யரு. பார்வோனிடத்திலிருந்த பிரபுகளும்

அவளைக் கண்டு, பார்வோனுக்குமுன்பாக அவளைப் புகழ்ந்தார்கள். அந்த ஸ்திரி பார்வோனுடைய வீட்டிலே கொண்டுபோகப்பட்டாள்.

௰௬. அவள்நிமித்தம் அவன் ஆபிராமை உபசரித்தான். இவன் வேலைக்காரரையும், வேலைக்காரிகளையும், ஆடுமாடுகளையும், கழுதைகளையும், பெட்டைக் கழுதைகளையும், ஒட்டகங்களையுமுடையவனாயிருந்தான்.

௰௭. ஆபிராமுடையமனைவியாகிய சாராயின் நிமித்தம், யெகோவா, பார்வோனையும், அவன் குடும்பத்தாரையும், மகா வாதைகளால் வாதித்தார்.

௰௮. பார்வோன் ஆபிராமை அழைத்து, நீ எனக்கு இப்படிச் செய்ததென்ன? இவள் உன் மனைவியென்று நீ எனக்கு அறிவியாமற் போனதென்ன?

௰௯. இவள் உன் சகோதரியென்று சொன்னதென்ன? அதினால் நான் இவளை எனக்கு மனைவியாக்கிக்கொள்ளக் கூடும். இவள் உன் மனைவி. இவளை அழைத்துப் போ என்று சொன்னான்.

௨௰. அவனைக் குறித்துப் பார்வோனாற் கட்டளையிடப்பட்ட ஆட்கள், அவனையும், அ

வன் மனைவியையும், அவனுக்குண்டான எ
ல்லாவற்றையும் அனுப்பிவிட்டார்கள்.

## ௰௩. அதிகாரம்.

௧. ஆபிராமும், லோத்தும், எகிப்துதேசத்தை விட்டுப் புறப்படல். அவர்களுடைய மேய்ப்பருக்குள் விரோதமுண்டாதல்: ௰. லோத்து, சோதோமுக்குப்போதல்: ௰௪. ஆபிராமுக்குத் தேவன் வர்க்குத்தத்தம் அருளிச்செய்தல்: ௰௮. ஆபிராம் எபிரோனுக்குப் போய் அங்கேயொரு வேதிகையை உண்டாக்கல்.

௧. ஆபிராமும், அவன் மனைவியும், அவனுக்குண்டான எல்லாவற்றோடும், லோத்துவோடும், எகிப்தைவிட்டுத் தென்திசையில் வந்தார்கள்.

௨. ஆபிராம் ஆடுமாடுகளிலும், வெள்ளியிலும், பொன்னிலும், மிகச் செல்வனாயிருந்தான்.

௩. ஆபிராம், தென்திசையிலிருந்து பிரயாணம்பண்ணிப், பெத்தேலைச் சேர்ந்து, பெத்தேலுக்கும் ஆயீக்கும், இடையிலே, தான் முன்பு கூடாரம் போட்டதுமன்றி,

௪. முதல் முதல் வேதிகையையும் உண்டாக்கின ஸ்தலத்திலே, யெகோவாவின் நாமத்தைச் சொல்லிப் பிரார்த்தித்தான்.

௫. ஆபிராமுடனே வந்த லோத்துக்கும் ஆடுமாடுகளுங் கூடாரங்களுமிருந்தன.

௬. அவர்கள் சகவாசம்பண்ண, அவ்விடம் போதாமலிருந்தது. அவர்களுக்குண்டான பொருள் மிகுதியாயிருந்ததினால்தான், அவர்கள் சகவாசம் பண்ணக் கூடாமற் போயிற்று.

௭. ஆபிராமுடைய மேய்ப்பருக்கும், லோத்துவினுடைய மேய்ப்பருக்கும், விரோதமுண்டாயிற்று. அத்தேசத்திற் கானானியரும், பெரிசியரும், அக்காலத்திலே வாசம்பண்ணினார்கள்.

௮. ஆபிராம், லோத்துவிடத்தில், எனக்கும், உனக்கும், என் மேய்ப்பருக்கும், உன் மேய்ப்பருக்கும், விரோதம் வேண்டாம்; நாம் சகோதரர்.

௯. இத்தேசமெல்லாம் உனக்கு முன்னிருக்கிறதல்லவா? என்னை விட்டுப் பிரிந்திருக்கலாம். நீ இடப்புறத்திற் போனால், நான் வலப்புறத்திற் போவேன், நீ வலப்புறத்திற் போனால், நான் இடப்புறத்திற் போவேனென்றான்.

௰. லோத்து, கண்ணேறிட்டுப் பார்த்து, யோர்தானைச் சேர்ந்த சமபூமி முழுவதும், எங்கும் நீர்ப்பாய்ச்சலுள்ளதாயிருக்கக் கண்டான். யெகோவா சோதோமையும், கோமோ

ராவையும், அழிக்குமுன், அது சோவார்வரை
க்கும் யேகோவாவுடைய தோட்டத்திற்குச்
சமானமாகவும், எகிப்துதேசத்திற்குச் சமான
மாகவுமிருந்தது.

யக. ஆகையால் லோத்து, யோர்தானைச் சே
ர்ந்த சமபூமி முழுவதையும் தெரிந்துகொண்
டு, கிழக்கே பிரயாணப்பட்டுப் போனன்.
இப்படி அவர்கள் ஒருவரையொருவர் விட்டு
ப்பிரிந்தார்கள்.

யஉ. ஆபிராம் கானன்தேசத்தில் வாசம்ப
ண்ணினன். லோத்தோ அந்தச் சமபூமியி
ன் நகரங்களில் வாசம்பண்ணி, சோதோமுக்
கு நேரே கூடாரம்போட்டுக்கொண்டான்.

யங. சோதோமின் சனங்கள் யேகோவாவு
க்கு முன்பாக, மிகவும் துன்மார்க்கரும், பா
விகளுமாயிருந்தார்கள்.

யச. லோத்து ஆபிராமை விட்டுப் பிரிந்தபி
ன்பு, யேகோவா ஆபிராமை நோக்கி, நீ கண்
ணேறிட்டு நீ இருக்கிற இடத்துக்கு வடதி
சையையும், தென்திசையையும், கீழ்த்திசை
யையும், மேற்றிசையையும் பார்.

யரு. நீ பார்க்கிற இந்தப் பூமிமுழுவதையு
ம், என்றைக்கும், உனக்கும் உன் சந்ததிக்
கும் ஆகும்படி நான் தருவேன்.

யசா. உன் சந்ததியைப், பூமியின் தூளைப்

போலப் பெருகப்பண்ணுவேன். ஒருவன் பூமியின் துளை எண்ணக் கூடுமேயாகில், உன் சந்ததியும் எண்ணப்படும்.

௰எ. இத்தேசத்தை உனக்குத் தருவேன், ஆகையால் நீ எழுந்து தேசத்தின் நீளமும், அகலமும், எம்மட்டோ, அம்மட்டும் நடந்துதிரியென்றார்.

௰அ. அப்பொழுது ஆபிராம் கூடாரத்தைப் பேர்த்துக் கொண்டுபோய், எப்பிரோனிலுள்ள மம்ரேயின் சம பூமியிற்சேர்ந்து வாசம்பண்ணி, அங்கே யெகோவாவுக்கு ஒரு வேதிகையை உண்டாக்கினான்.

## ௰௪. அதிகாரம்.

*௧. அமராப்பேல் முதலான இராசாக்கள் பேராமுதலான இராசாக்களோடே செய்த யுத்தம் : ௰௫. லோத்து அவர்கள்வசத்தில் அகப்பட்டு ஆபிராமால் மீட்கப்படல் : ௰எ. மெல்கீசேதேக் ஆபிராமை ஆசீர்வதித்தல். ஆபிராம் அவருக்குப் பத்திலொரு பாகத்தைக்கொடுத்தல் : ௨௨. எஞ்சிய பொருளைச் சோதோம் இராசாவிடத்தில் ஒப்பித்தல்.*

௧. சீனியாருக்கு இராசனாகிய அமராபேலும்,எலாசாருக்கு இராசனாகிய அரியோகும், எலாமுக்கு இராசனாகிய கேதர்லாகோமேரு

ம், கோயீமுக்கு இராசனாகிய தீதாலும், தங்கள் காலத்திலே,

உ. சோதோமுக்கு இராசனாகிய பேராவோடும், கோமோராவுக்கு இராசனாகிய பிரசாவோடும், அத்மாவுக்கு இராசனாகிய சீனேயாவோடும், சேபோயீமுக்கு இராசனாகிய சேமேபரோடும், சோவார் என்னும் பேலாவின் இராசனோடும் யுத்தம்பண்ணினார்கள்.

ஙா. இவர்கள் எல்லாரும் கேதர்லாகோமேருக்குப் பன்னிரண்டு வருஷம் வசப்பட்டிருந்து, பதின்மூன்றாம் வருஷத்திலே விரோதமாயெழும்பி,

ச. உவர்க்கடலாய்ப் போன சித்தீம் என்னுந் தாழ்ந்த பூமியிலே கூடினார்கள்.

ரு. பதினாலாம் வருஷத்திலே, கேதர்லாகோமேரும், அவனுடனே கூடியிருந்த இராசாக்களும்போய், அஸ்தேரோத் கர்னாயீமிலேயிருந்த ரெப்பாவரையும், காமிலேயிருந்த சூசியரையும், சாவேகீறியத்தாயீமிலே இருந்த எமியரையும்,

சா. சேயீர் மலைகளிலிருந்த ஓரியரையும், வனத்துக்கருகான எல்பாரான்மட்டும் முறிய அடித்து,

எ. திரும்பிக் காதேஸ் என்னும் என்மிஸ்பாத்திற் சென்று, ஆமலேக்கியருடைய நாடு அ

னைத்தையும், அத்சத்சோன் தாமாரில் வசித்த் எமோரியரையுங்கூட அழித்தார்கள்.

௯. அப்பொழுது சோதோமின் இராசனும், கொமோராவின் இர்ராசனும், அத்மாவின் இராசனும், செபோயீமின் இர்ராசனும், சோவாரென்னும் பேலாவின் இராசனுமாகிய இவ்வைந்து இராசாக்களும் புறப்பட்டு,

௧௦. சீத்தீம் என்னுந் தாழ்ந்த பூமியில் எலாமின் இர்ராசனாகிய கேதர்லாகோமேர், கோயிமின் இர்ராசனாகிய தீதியால், ஷினியாரின் இராசனாகிய அமராப்பேல், ஏலாசாரின் இராசனாகிய ஆரியோக், என்னும் இந்நான்கு இராசாக்களோடும் யுத்தம்பண்ணினார்கள்.

௰. அந்தச்சீத்தீம் என்னுந்தாழ்ந்தபூமி, நிலக்கீலுண்டாகும் அநேக கேணிகளுள்ளதாயிருந்தது. சோதோமின்ராசனும், கொமோராவின் ராசனும் முறிந்தோடி அங்கே விழுந்தார்கள். மற்றவர்கள், மலைகளுக்கு ஓடிப்போனார்கள்.

௰௧. சோதோமிலுங் கொமோராவிலுமுள்ள பொருள்கள் எல்லாவற்றையும், சகலபோசனபதார்த்தங்களையுங் கவர்ந்து கொண்டு போனார்கள்.

௰௨. ஆபிராமின் சகோதரனுடைய புத்திரனும், சோதோமில் வசித்தவனுமாகிய லோ

த்தையும், அவன் பொருள்களையுங் கவர்ந்து கொண்டுபோனார்கள்.

யக. தப்பியோடின ஒருவன், எபிரேயனாகிய ஆபிராமிடத்தில் வந்து, அதை அறிவித்தான். அப்பொழுது ஆபிராம், தன்னோடே உடன்படிக்கைசெய்திருந்த மனிதராகிய எஸ்கோலுக்கும், ஆனேருக்குஞ் சகோதரனும், அமோரியனுமான மமிரேயின் சமபூமியிலே வசித்தான்.

யச. தன் சகோதரன் அகப்பட்டுப் போனதை ஆபிராம் கேட்டு, தன்வீட்டிற் பிறந்தவர்களும், கைபடிந்தவர்களுமான முந்நூற்றுப் பதினெட்டு ஆள்களுக்கும் ஆயுதங்களைக் கொடுத்து, தாண் என்னும் ஊர் மட்டுந்தொடர்ந்து,

யரு. இரவிலே தானும், தன்பணிவிடைக்காரரும், பகுதிபகுதியாக எதிர்த்து, அவர்களை முறிய அடித்து, தமஸ்குஊருக்கு இடப்புறமான கோபாமட்டுந்துரத்தி,

யசா. சகல பொருள்களையும் மீட்டுக்கொண்டுவந்ததுமன்றி, தன்சகோதரனாகிய லோத்தையும், அவனுடைய பொருள்களையும், ஸ்திரிகளையும், சனங்களையும் கூட மீட்டுக்கொண்டுவந்தான்.

யஎ. அவன் கேதர்லாகோமேரையும், அவ

ஞேடிருந்த இராசாக்களையும் முறிய அடித்து, திரும்பிவருகிறபொழுது, சோதோமின் இராசா, அவனைச்சந்திக்கும்படி, இராசபள்ளமாகிய சாவே என்னுந் தாழ்ந்த பூமிக்குப்போனன்.

யஎ. அன்றியும் சாலேமின் இராசனும், சருவத்திற்குமேலான தேவனை வழிபடும் ஆசாரியனுமாகிய மெல்கீசேதேக்கு, அப்பமும் திராட்சரசமுங் கொண்டுவந்து,

யகூ. அவனை ஆசீர்வதித்து, வானத்தையும் பூமியையுமுடையவராயிருக்கிற சருவத்திற்குமேலான தேவனாலே, ஆபிராம் ஆசீர்வதிக்கப்படக்கடவனென்றும்,

உய. உன் சத்துருக்களை உன்கையிலொப்பித்த சருவத்திற்குமேலான தேவன், தோத்திரிக்கப்படக்கடவரென்றுஞ் சொன்னன். ஆபிராம் எல்லாவற்றிலும் பத்திலொரு பாகத்தை அவனுக்குக் கொடுத்தான்.

உக. சோதோமின் இராசா ஆபிராமிடத்தில், பொருளை, நீர்தாம் எடுத்துக்கொள்ளும்; சனங்களை எனக்குத் தாருமென்ருன்.

உஉ. அதற்கு ஆபிராம் சோதோமின் இராசனை நோக்கி வாலிபர் உண்ட சேலவையும், என்னுடனேவந்த ஆனேர், எஸ்கோல், மமிரே என்னும் ஆள்களுடைய பங்கையும் நீக்

கிக்கொள்ளலாம்; இவர்கள் தங்கள் தங்கள் பங்கை எடுத்துக்கொள்வார்களாகவேன்றும்,
௨௩. ஆபிராமை ஐசுவரியவானுக்கினே னென்று நீர்சொல்லும்படி நான் ஒரு சரட் டையாகிலும், பாதரட்சையின் வாரையாகி லும், உம்முடைய பொருள் ஏதையாகிலு ம், எடுத்துக்கொள்ளேனென்றும்,
௨௪. வானத்தையும் பூமியையுமுடையவு ராயிருக்கிற சருவத்திற்கும் மேலான தேவ ஞகிய யெகோவாவுக்கு நேராக என் கையை உயர்த்துகிறேனென்றுஞ் சொன்னன்.

## ௰௫. அதிகாரம்.

௧. ஆபிராமுக்குப் புத்திரன் உற்பவித்தல். அப்புத்திர னுக்குக் கானுன்தேசத்தைத் தருவேனென்று தே வன்வாக்குத்தத்தம் அருளிச்செய்தல். தேவகட்ட ளைப்படி ஆபிராம் பலியிடல்.

௧. இந்தக்காரியங்கள் நடந்தபின்பு, தரிச னையில் ஆபிராமே, நீ பயப்படாதிரு; நானே உன் கேடகமும் உன் பரிபூரணபலனுமாயி ருக்கிறேனென்னும் யெகோவாவின் வாக்கு ஆபிராமுக்குக் கிடைத்தது.
௨. அதற்கு ஆபிராம், தேவனுகிய யெகோ வாவே, அடியேனுக்கு எதையருள்வீர். பிள்

ளையில்லாமற் போனேன்; தமஸ்கு ஊராகுகி
ய இந்த எலியேசர் அல்லவா என்குடும்பத்
திற்கு அதிகாரியாயிருக்கிறான்.

௩. எனக்கோ, சந்ததியை நீர் அருளவில்
லை; என் வீட்டிற்பிறந்த அன்னியனே என்
பொருளுக்குச் சுதந்தரனாயிருப்பானென்று
ஆபிராம் சொல்ல;

௪. இவன் உனக்குச் சுதந்தரனல்லான்; உ
ன்னுதரத்தில் தோன்றினவனே உனக்குப்
பின் சுதந்தரனாவானென்று யேகோவாவின்
வாக்கு அவனுக்குக்கிடைத்தது.

௫. அவர் அவனை வெளியிலே அழைத்து,
நீ வானத்தையண்ணாந்து பார். நட்சத்திரங்
களை உன்னாலே எண்ணக்கூடுமேயாகில், அ
வைகளை எண்ணென்றும், இப்படியே, உன்
சந்ததி இருக்குமென்றுஞ் சொன்னார்.

௬. அப்பொழுது அவன் யேகோவாவில்
விசுவாசம்வைத்தான்; அதை அவர் அவனு
க்கு நீதியென்று எண்ணினார்.

௭. அவர் அவனை நோக்கி, இத்தேசத்தைத்
உனக்குச் சுதந்தரமாகத் தரும்பொருட்டு உ
ன்னைக் கல்தேயருடைய ஊர்நகரத்திலிருந்து
அழைத்துவந்த யேகோவா நானே என்றார்.

௮. அதற்கு அவன், தேவனாகிய யேகோ
வாவே, நான் அதைச் சுதந்தரித்துக்கொள்வே

னென்று எதைக்கொண்டு அறிவேனென்றான்.

௯. அதற்கு அவர், மூன்று வயதுள்ள கடாரியையும், மூன்று வருஷத்து வெள்ளாட்டையும், மூன்றுவருஷத்துச் செம்மறிக்கடாவையும், ஒரு காட்டுப்புறாவையும், ஒரு புறாக்குஞ்சையும், என்னிடத்திற்குக் கொண்டுவரவேண்டுமென்று சொல்ல,

௰. அவன் அவைகளெல்லாவற்றையும் அவரிடத்திற்குக்கொண்டுபோய், அவைகளை நடுவாகப் பிளந்து, துண்டங்களை ஒன்றுக்கொன்று எதிராக வைத்தான். பட்சிகளை அவன் பிளக்கவில்லை.

௰௧. காட்டுப்பறவைகள் அந்த உடல்களின்மேல் விழுந்தன; அவைகளை ஆபிராந்துரத்தினான்.

௰௨. சூரியன் அஸ்தமிக்க ஆபிராமுக்கு, கடுநித்திரை வந்தது. பயங்கரமான காரிருள் அவனை மூடிற்று.

௰௩. அவர் ஆபிராமை நோக்கி, உன்சந்ததியார் புறத்தேசத்தாருக்கு, அவர்கள் தேசத்தில், நானூறுவருஷமட்டும் ஊழியஞ்செய்து, அவர்களாலே துயரப்படுவார்களென்று அறிந்து நிச்சயித்துக்கொள்,

௰௪. அவர்களை அடிமைப்படுத்தும் அத்தேசத்தாரை நான் தண்டிப்பேன். அதன்பின்பு மிகுந்த பொருள்களுடனே புறப்பட்டு வருவார்கள்.

௰௫. நீ சாந்தத்துடனே உன் முன்னோர்களிடத்திற்சேருவாய்; பூரண ஆயுள்பெற்றிருந்து அடக்கம்பண்ணப்படுவாய்.

௰௬. நாலாந்தலைமுறையாரே இவ்விடத்துக்குத் திரும்பிவருவார்கள். எமோரியருடைய தீங்கு இன்னும் நிறைவாகவில்லையென்றார்.

௰௭. அஸதமித்திருண்ட பின் சூளையின் புகையும், அக்கினிச்சுவாலையுமுண்டாகி, அந்தத்துண்டங்களுக்கு இடையேசென்றன.

௰௮. அந்நாளிலே யெகோவா ஆபிராமோடே உடன்படிக்கைபண்ணி, எகிப்து நதிமுதல் பிருத் என்னும் பெரிய நதிமட்டும்,

௰௯. கேனியரும், கேனிசியரும், கத்மோனியரும்,

௨௰. எத்தியரும், பெரிசியரும் ரெப்பாவரும்,

௨௧. எமோரியரும், கானானியரும், கிரகாசியரும், எபூசியரும் இருக்கிற இந்தத் தேசத்தை உன் சந்ததிக்குக் கொடுத்தேன் என்றார்.

## ௰௬. அதிகாரம்.

க. ஆபிராம் சாராயின்சொற்படி ஆகாரைவிவாகம் பண்ணல்: ச. அவள் தன்நாயகியால் இடைஞ்சற் பட்டுத் தப்பியோடல். தேவகட்டளையினாலே திரும்பிவருதல்: ௰௫. இஷ்மவேல் பிறத்தல்.

க. ஆபிராமுடைய மனைவியாகிய சாராய்க்குப் பிள்ளையில்லை. எகிப்து தேசத்தாளாகிய ஆகார் என்னும் பேருள்ள ஒருத்தி அவளுக்கு அடிமையாயிருந்தாள்.

உ. சாராய் ஆபிராமை நோக்கி, யெகோவா எனக்குச் சந்ததி அருளவில்லையே. என் அடிமையோடே சேரும். அவள் வழியாய் என் குடும்பம் விர்த்தி அடையவுங் கூடுமென்றாள். சாராயின் சொல்லுக்கு ஆபிராம் இசைந்தான்.

ரு. ஆபிராம் கானான் தேசத்திற் பத்துவருஷம் வசித்தபின், ஆபிராமின் மனைவியாகிய சாராய் எகிப்துதேசத்தாளும் தன் அடிமையுமான ஆகாரை அழைத்து, அவளைத் தன்கணவனன் ஆபிராமுக்குப் பாரியாக அளித்தாள்.

ச. அவன் ஆகாரைச் சேர்ந்ததினால் அவள் கருப்பவதியானாள். அவள் தான் கருப்பவதியானதைக் குறித்து, அவள் தலைவி அவள் பார்வைக்கு அற்பமாக எண்ணப்பட்டாள்.

௫. ஆனபடியால் சாராய் ஆபிராமை நோக்கி, நான் அனுபவிக்கிற தீமை உன்மேலும் வரும். என் அடிமையை உன்னுடைய மார்போடே அணைவித்தேன். அவள் தான் கருப்பவதியானதைப்பற்றி என்னை அலட்சியமாக எண்ணுகிறாள். யேகோவா எனக்கும் உனக்கும் நியாயந்தீர்ப்பாராக என்றாள்.

௬. அதற்கு ஆபிராம் சாராயை நோக்கி, உன் அடிமை உன்கைக்கீழிருக்கிறாள். அவளுக்கு உன் இஷ்டப்படிசெய்யலாம் என்றான். பின்பு சாராய் இவளை வருத்த, இவள் அவளை விட்டோடிப்போனாள்.

௭. வனத்திலே சூருக்குப் போகிற வழியருகில் நீரூற்றுள்ள கிணற்றருகே யேகோவாவின் தூதன் அவளைக்கண்டு,

௮. சாராயின் அடிமையாகிய ஆகாரே, எங்கேயிருந்துவருகிறாய்? எங்கேபோகிறாயென்று கேட்க, அவள் என்தலைவியாகிய சாராயின் பார்வைக்குத் தப்பிவருகிறேனென்றாள்.

௯. அதற்கு யேகோவாவின்தூதன் அவளை நோக்கி, நீ உன் தலைவியிடத்திற்குத் திரும்பிப்போய் அவளுக்கு அடங்கியிருவென்று சொன்னான்.

௰. அன்றியும், யேகோவாவின் தூதன் அவளை நோக்கி, உன்சந்ததியை மிகவும் பெருக

ப்பண்ணுவேன். அதுபெருகி அளவிறந்ததாயிருக்குமென்றான்.

௰௧. பின்னும் யெகோவாவின் தூதன் அவளை நோக்கி, யெகோவா உன் துக்கப்பிரலாபத்தைக் கேட்டதினாலே, கருப்பவதியாகிய நீபெறும் புத்திரனுக்கு இஸ்மவேலென்று பேரிடுவாயாக.

௰௨. அவன் துஷ்ட மனிதனாயிருப்பான். அவனுடைய கை எல்லாருக்கும் விரோதமாகவும், எல்லாருடைய கையும், அவனுக்கு விரோதமாகவுமிருக்கும். தன் சகோதரர் யாவருக்கும் எதிர்ப்புறமாக வாசம்பண்ணுவானென்றான்.

௰௩. அவள் இவ்விடத்தில் என்னைக்கண்டவரை நானும் பின்னே கண்டேனல்லவா என்றுசொல்லி, தன்னுடனே பேசின யெகோவாவுக்கு, நீர் என்னைக் கண்ட தேவன் என்னும் நாமஞ் சூட்டினாள்.

௰௪. இக்காரியத்தினாலே அந்தக் கிணறு, சுயசீவியும், என்னைக் காண்கிறவருமானவரின் கிணறு என்றருத்தங்கொள்ளும் பேயோர் லாகாய்ரோயீ என்னப்பட்டது. அது, காதேசுக்கும், பேரேத்துக்கும் நடுவேயிருக்கின்றது.

௰௫. ஆகார் ஆபிரகாமுக்கு ஒரு புத்திரனைப் பெற்றாள். ஆபிராம் ஆகார் பெற்ற புத்திர

னுக்கு இஷ்மவேலென்று பெயரிட்டான்.

யசுா. ஆகார் ஆபிராமுக்கு இஷ்மவேலைப் பெற்றகாலத்தில், ஆபிராமுக்கு வயது எண்பத்தாறு.

## யஎ. அதிகாரம்.

க. ஆபிராமுக்குத் தேவன் தமதுடன்படிக்கையை நிலைப்படுத்தல். அவ்வுடன்படிக்கைக்கு ஒரடையாளமாகிய விருத்தசேதனத்தைக் கற்பித்தல் : யரு. சாராயின் நாமத்தை மாற்றுதல் : அவளுக்குப் பிள்ளைப்பேற்றைக்குறித்து வாக்குத்தத்தம் அருளிச்செய்தல் : உஙா. ஆபிரகாம், இஷமவேல், முதலானவர்கள் விருத்தசேதனஞ் செய்யப்படல்.

க. ஆபிராமுக்குத் தொண்ணூற்றென்பது வயதானபொழுது, யெகோவா ஆபிராமுக்குத் தரிசனையாகி அவனைநோக்கி நான் சருவவல்லமையுள்ளதேவன் ; நீ என் முன்னிலையிலே திடங்கொண்டு நடந்து, சற்குணனாயிரு.

உ. நான் என் உடன்படிக்கையை எனக்கும் உனக்கும் ஏற்படுத்தி, மிகவுந் திரளாய் உன்னைப் பெருகப்பண்ணுவேனென்றார்.

ங. ஆபிராம் வணக்கமாய் விழுந்தான். தேவன் அவனோடே சம்பாஷித்து,

ச. நீ அநேகசாதியாருக்குப் பிதாவாயிருப்பாயென்னும் என் உடன்படிக்கை உனக்குண்டே,

ரு. நானுன்னை மிகவும் அதிகமான சாதிக ளுக்குப் பிதாவாக ஏற்படுத்தினபடியால், உ ன்நாமம் ஆபிராம்என்று வழங்காமல், இனி ஆபிரகாம் என்று வழங்கும்.

சூ. உன்னை மிகவும் அதிகமாய் விர்த்திய டையச்செய்து, சாதிகளை உன்னிடத்திலே தோற்றுவிப்பேன் ; இராசாக்களும் உன்வழி யாய்த் தோன்றுவார்கள்.

எ. நான் உனக்கும், உன் பின்வருஞ் சந்த திக்குந் தேவனுவேனென்கிற என் உடன்ப டிக்கையை எனக்கும், உனக்கும், உனக்கு ப்பின் தலைமுறைதோறும் வரும் உன் சந்ததி யாருக்கும், நித்திய உடன்படிக்கையாகத் தி டப்படுத்துவேன்.

அ. நீ பரதேசியாய்த் தங்கிவருகிற கானு ன்தேசமுழுவதையும் உனக்கும், உன் பின்ச ந்ததிக்கும், நித்திய ஆட்சியாக அளிப்பேன். நானே அவர்களுக்குத் தேவனுவேன்என்றார்.

கூ. பின்னும் தேவன் ஆபிரகாமைநோக்கி, நீயும் உனக்குப்பின் தலைமுறைதோறும் வரு ம் உனசந்ததியாரும், என் உடன்படிக்கை யைக் கைக்கோள்வீர்களாக.

ய. எனக்கும், உங்களுக்கும், உன் பின்ச ந்ததிக்கும் ஏற்க நீங்கள் கைக்கோள்ளவேண் டியதாப் ஏற்படுத்துகிற என்னுடன்படிக்கை

யாவது; உங்களிற் சகல ஆண்பிள்ளைகளும் விருத்தசேதனம் பண்ணப்படவேண்டும்.

௰க. உங்கள் அக்கிரசரும மாமிசத்தை விருத்தசேதனம்பண்ணக்கடவீர்கள். அதுவே எனக்கும், உங்களுக்கும், இருக்கும் உடன்படிக்கைக்கடையாளம்.

௰உ. உங்கள் தலைமுறைதோறும், வீட்டுப்பிள்ளையும், உன் சந்ததியல்லாத எந்தஅன்னியனிடத்திலும், பணத்திற்குக் கோள்ளப்பட்டபிள்ளையுமாகிய ஒவ்வொரு பாலகனும், பிறந்த எட்டாம் நாளிலே விருத்தசேதனம் பண்ணப்படவேண்டும்.

௰௩. என்னுடன்படிக்கை உங்கள் மாமிசத்தில் நித்திய உடன்படிக்கையாயிருக்கும்படி, உன் வீட்டிற் பிள்ளையும், உன் பணத்திற்குக் கோள்ளப்பட்டவனும், அவசியமாய் விருத்தசேதனம் பண்ணப்படவேண்டும்.

௰௪. அக்கிரசருமஞ் சேதிக்கப்படாமல், அந்த அக்கிரசருமத்தோடிருக்கும் எந்தப்பாலகனும், என்னுடன்படிக்கையை மீறினதினால் தன்சனங்களில் நின்றுஞ் சேதிக்கப்படுவானென்றார்.

௰௫. பின்னும் தேவன் ஆபிரகாமை நோக்கி, உன்மனைவியைச் சாராய் என்னும்பேரா

ல் அழையாதிருப்பாயாக. சாராள் என்பது அவளுக்குப்பேர்.

யசு. நான் அவளை ஆசீர்வதித்து, அவள் வழியாகவும் உனக்கோரு புத்திரனைத் தருவேன். அவள் சாதிகளுக்கு மாதாவாகவும், தேசத்தாரின் இராசாக்கள் அவளிடத்தில் தோன்றவும், அவளை ஆசீர்வதிப்பேனென்று சொன்னார்.

யஎ. ஆபிரகாம் வணக்கமாய் விழுந்து, நகைத்து, நூறுவயதானவனுக்குப் பிள்ளைபிறக்குமா? தொண்ணூறுவயதான சாராள் புத்திரனைப் பெறுவாளாவென்று, தன்னுள்ளத்திலெண்ணினன்.

யஅ. மேலும் ஆபிரகாம், தேவனைநோக்கி, இஷ்மவேல் உமக்கு முன்பாகச் சீவித்திருக்க வேண்டுமேயென்றான்.

யகூ. தேவன் நிச்சயமாக உன் மனைவியாகிய சாராள் உனக்கோரு புத்திரனைப்பெறுவாள். அவனுக்கு ஈசாக்கென்று பேரிடுவாயாக. என் உடன்படிக்கையை அவனுக்கும், அவன் பின்சந்ததிக்கும், எக்காலமும் நிலையான உடன்படிக்கையாக ஏற்படுத்துவேன்.

உய. இஷ்மவேலைக்குறித்து நீ செய்த பிரார்த்தனையையுங் கேட்டேன். கேள், நான் அவனை ஆசீாவதித்து, அவனை மிகவும் அதிகமா

ய்த் தழைத்துப் பெருகப்பண்ணுவேன்; பன்னிரண்டு பிரபுகளைப் பெறுவான்; அவன் வழியாய் ஒரு பெரிய சாதியைத் தோன்றச் செய்வேன்.

உக. என் உடன்படிக்கையை வருகிற வருஷத்திலே இப்படியொருகாலத்தில் சாராள் உனக்குப்பெறும் ஈசாக்குக்கு ஏற்படுத்துவேனென்றார்.

உஉ. சம்பாஷணை முடிந்தபின் தேவன் ஆபிரகாமை விட்டெழுந்தருளினார்.

உ௩. அப்பொழுது ஆபிரகாம் தன்புத்திரன் இஷ்மவேலும், தன் வீட்டிற் பிறந்த சகலரும், தான் பணத்திற்குக் கொண்ட அனைவரும் உட்பட, தன் வீட்டிலுள்ளவர்களில் ஆண்மக்கள் யாவரையுஞ் சேர்த்து, ஆபிரகாம் தனக்குத் தேவன் சொல்லிய பிரகாரம், அவர்களுடைய அக்கிர சரும மாமிசத்தை அந்நாளிலே விருத்தசேதனம் பண்ணினான்.

உ௪. ஆபிரகாமுடைய அக்கிரசருமமாமிசம் விருத்தசேதனம் பண்ணப்பட்டபொழுது, அவனுக்குத் தொண்ணூற்றொன்பது வயது.

உ௫. அவனுடைய புத்திரனாகிய இஷ்மவேலினுடைய அக்கிரசருமமாமிசம் விருத்தசேதனம் பண்ணப்பட்டபொழுது அவனுக்குப் பதின்மூன்று வயது.

உசு. ஒருதினத்திலே தானே ஆபிரகாமும், அவன் புத்திரனாகிய இஷ்மவேலும், விருத்த சேதனம் பண்ணப்பட்டார்கள்.

உஎ. வீட்டிற் பிறந்தவர்களும் அன்னியரிடத்திற் பணத்திற்குக் கொள்ளப்பட்டவர்களுமாகிய அவன் வீட்டு மனிதர்களெல்லாரும், அவனோடே விருத்தசேதனம் பண்ணப் பட்டார்கள்.

## ௧அ. அதிகாரம்.

க. ஆபிரகாம் தேவதூதர் மூவரை உபசரித்தல்: அவர்கள் அவனோடு சம்பாஷித்தல். ௧எ. சோதோமின் சங்காரம் ஆபிரகாமுக்கு அறிவிக்கப்படல்: உஉ. சோதோமின் இரட்சிப்புக்காக ஆபிரகாம் விண்ணப்பஞ் செய்தல்.

க. யெகோவா, மம்ரேயின் சமபூமியிலே அவனுக்குத் தரிசனையானார். ஒருநாள் அவன் உட்டணவேளையில் கூடாரவாசலிலேயிருந்துகொண்டு,

உ. ஏறிட்டுப் பார்த்தான். அப்பொழுது மூன்று புருஷர் அவனுக்கெதிரே நின்றார்கள். கண்டமாத்திரத்தில் அவன் கூடாரவாசலை விட்டு அவர்களுக்கெதிர்கொண்டோடிப் பூமிக்கு நேராய்த் தாழ்ந்து வணங்கி,

ஈ. ஆண்டவரே, எனக்கு அனுக்கிரகஞ்

செய்யச் சித்தமானல் அடியேனை விட்டு நீங்
காதிருப்பீராக.

ச. கொஞ்சந் தண்ணீர்கொண்டு வரட்டும்;
உங்கள் பாதங்களைச் சுத்திபண்ணி மரத்தின்
கீழிருந்து இளைப்பாறுங்கள்.

ரு. நீங்கள் உங்கள் இருதயங்களைக் குளி
ரப்பண்ண, ஒரு துண்டு அப்பங்கொண்டுவரு
கிறேன்; அதற்குப் பின்பு நீங்கள் போகலா
ம்; இதற்காகவே அடியேனிடத்திற்கு நடந்
து வந்தீர்களென்றான். அதற்கவர்கள், நீ சொ
ன்னபடி செய்யென்றார்கள்.

சா. ஆபிரகாம் தீவிரமாய்க் கூடாரத்தில்
போய்ச் சாராளைநோக்கி, நீ விரைந்து மூன்று
படி மெல்லிய மாவெடுத்துப் பிசைந்து, அப்
பங்களைச் சுடேன்றான்.

எ. ஆபிரகாம் மாட்டு மந்தைக்கோடி ஒரு
நல்ல இளங்கன்றைப் பிடித்து, பணிவிடை
க்காரன் கையிலே கொடுத்தான். அவனும்
அதை விரைவில் சமைத்தான்.

அ. அவன்வெண்ணெய்யையும், பாலையும்,
தான் சமைப்பித்த கன்றையுமெடுத்து, அவர்
கள்முன்பாக வைத்தான். தானும் மரத்தின்
கீழே அவர்களருகே நின்றான். அவர்கள் புசி
த்தார்கள்.

கூ. அவர்கள் அவனிடத்தில், உன் மனைவி

யாகிய சாராள் எங்கேயென்று கேட்க, கூடா ரத்திலே இருக்கிறுளேன்றுன்.

௯. அவர், ஒரு உற்பவகாலத்தளவில் நிச்சயமாகவே உன்னிடத்துக்குத் திரும்பி வருவேன்; உன் மனைவியாகிய சாராள் ஒரு புத்திரனைப் பெறுவாளேன்றுர். சாராள் அவருக்குப் பின் புறமாய்க் கூடாரவாசலில் கேட்டுக்கொண்டிருந்தாள்.

௰க. அக்காலத்தில் ஆபிரகாமும், சாராளும் மிகவும் வயதுசென்ற விருத்தாப்பியர். சாராளுக்கு இல்விலக்கம் ஒளிந்துபோயிற்று.

௰உ. அதனுல் சாராள் தன்னுள்ளே நகைத்து, நான் விருத்தையாயிருக்க எனக்கு மகிழ்ச்சியாகுமா? என் நாயகனும் விருத்தனே என்றுள்.

௰ரு. யேகோவா ஆபிரகாமை நோக்கி, சாராள், விருத்தையாகிய நான் பிள்ளைபெறுவது மெய்யோவேன்று நகைப்பானேன்?

௰சு. யேகோவாவுக்கு அரியகாரியமுண்டா? ஒரு உற்பவகாலத்தளவில் உன்னிடத்திற்கு நியமித்தபடி திரும்பி வருவேன். அப்பொழுது சாராள் ஒரு புத்திரனைப் பெறுவாளேன்றுர்.

௰ரு. சாராள் பயந்து, நான் நகைக்கவில்லையென்று மறுத்தாள். அவர், இல்லை, நீ நகைத்தாய் என்றுர்.

௰௬. பின்பு அந்தப் புருஷர்கள் எழுந்து அவ்விடம் விட்டுச் சோதோமை நோக்கிப்போனார்கள். ஆபிரகாமும் அவர்களுடனே போய் வழிவிட்டனுப்பினான்.

௰௭. அப்பொழுது யெகோவா, நான் செய்வதை ஆபிரகாமுக்கு மறைக்கலாமா?

௰௮. அவனில் மேன்மையும் பராக்கிரமமுமுள்ள ஒரு சாதி தோன்றும்; அவன் மூலமாய்ப் பூமியிலுள்ள சகல சாதிகளும் ஆசீர்வதிக்கப்படும்.

௰௯. அவனுக்கு அருளிய வாக்கை யெகோவா நிறைவேற்றும்படி, ஆபிரகாம் தனக்குப்பின் வரும் தன் சந்ததிகளுக்கும், தன் வீட்டாருக்குங் கட்டளையிட, அவர்களும் நீதியையும், நியாயத்தையுஞ் செய்பவர்களாகி, யெகோவாவின் மார்க்கத்தைக் காத்து நடந்துகொள்வார்களென்பதை அறிவேனென்றார்.

௨௰. பின்பு, யெகோவா சோதோம் கொமோராவின் ஒலம் பெரிதாயிருப்பதினாலும், அவைகளின் பாவம் மிகவுங் கொடிதாயிருப்பதினாலும்,

௨௧. நான் இறங்கி என்னிடத்தில் வந்து சார்ந்த ஒலத்தின்படி அவர்கள் செய்தார்களோ, இல்லையோவென்று பார்த்தறிவேனென்று சொன்னார்.

உஉ. அந்தப் புருஷர்கள் அவ்விடம் விட்டு ச் சோதோமை நோக்கிப் போனார்கள். ஆபிரகாமோ, பின்னும் யேகோவாவுக்கு முன்பாக நின்றான்.

உங. ஆபிரகாம் சமீபமாய்ச் சேர்ந்து, துன்மார்க்கரோடே சன்மார்க்கரையுஞ் சங்கரிப்பீரா?

உச. அந்த நகரத்திற் சன்மார்க்கராய் ஐம்பதுபேர் இருப்பார்களானால், அங்குள்ள சன்மார்க்கர் ஐம்பது பேர் நிமித்தம் அந்தத் தலத்தை அழியாமல் விடக்கூடாதா?

உரு. துன்மார்க்கரோடே சன்மார்க்கரையுஞ் சங்கரிப்பது உமக்குத் தூரமாகவே இருக்கும். சன்மார்க்கரையும் துன்மார்க்கரையும் சமமாய் நடப்பிப்பது உமக்குத் தூரமாகவே இருக்கும். பூமி முழுமைக்கும் நியாயாதிபதி, நியாயத்தைச் செய்யாமல் விடுவாரோ என்றான்.

உசு. அதற்கு யேகோவா, சோதோம் நகரத்தில் சன்மார்க்கர் ஐம்பது பேரைக் கண்டால், நான் அவர்களின் நிமித்தம் அத்தலத்தார் யாவரையுஞ் சங்கரியாமல் விடுவேனென்றார்.

உஎ. ஆபிரகாம், நான் தூளுஞ் சாம்பலுமாயிருந்தும், என் ஆண்டவருடனே பேசத் துணிந்தேன்.

உஅ. சன்மார்க்கர் ஐம்பதுபேருக்கு ஐந்து

பேர்குறைந்தாலோ, ஐந்துபேர் குறைவென்று அந்நகரத்தார் யாவரையுஞ் சங்கரிப்பீரா என்ருன். அதற்கு அவர், சன்மார்க்கர் நாற்பத்தைந்துபேரை அங்கே கண்டால், சங்கரிக்கமாட்டேனென்ருர்.

உகூ. பின்னும், அவன் அவருடனே பேசி, நாற்பதுபேர் அங்கே காணப்பட்டாலோவென்ருன். அதற்கு அவர், நாற்பதுபேர் இருந்தால் செய்யேனென்ருர்.

ஙய. அவன் நான் மேலும், பேசினுலும் என் ஆண்டவர் கோபிக்க வேண்டாம். முப்பதுபேர் அங்கேகாணப்பட்டாலோவென்ருன். அதற்கு அவர், முப்பது பேரை அங்கே கண்டால் செய்யேனென்ருர்.

ஙக. அவன், என் ஆண்டவருடனே, இன்னும் நான் பேசத் துணிகிறேன். இருபதுபேர் அங்கே காணப்பட்டாலோவென்று சொல்ல, அவர் இருபதுபேர் இருந்தால் அழிக்கமாட்டேனென்ருர்.

ஙஉ. பின்னும் அவன், ஆண்டவருக்குக் கோபம் வராதிருப்பதாக; நான் இன்னும் ஒருதரமாத்திரம் பேசுகிறேன். பத்துப் பேர் அங்கே காணப்பட்டாலோவென்று சொல்ல, அவர் பத்துப் பேர் இருந்தாலும் அழிக்கமாட்டேனென்ருர்.

௩௩. யெகோவா ஆபிரகாமுடனே சம்பாஷித்து முடித்தமாத்திரத்திலே புறப்பட்டுப் போனார். ஆபிரகாமும் தன்னுடைய இடத்திற்குத் திரும்பினான்.

## ௰௯. அதிகாரம்.

*க. தூதர் இருவர் லோத்துவினிடத்திற் சேர்தல் : ச. சோதோம் நகரத்தார் அவர்களுக்குத் தீமைசெய்யத்துணிதல் : ௰உ. லோத்தும் அவன் புத்திரிகளிருவரும் இரட்சிக்கப்படல் : உச. சோதோம் நகரத்தாரும் லோத்தின் மனைவியுஞ் சங்கரிக்கப்படல் : ௩௰. லோத்துவும், அவனுடைய இரண்டு குமாரத்திகளும், முறைகேடாய் நடந்து மோவாபியர் அம்மோனியர் என்னும் இரண்டு சாதிகளின் பூர்வபிதாக்களைப் பெறுதல்.*

க. சாயங்காலத்தில் தேவதூதர் இருவர் சோதோமிற் சேர்ந்தார்கள். லோத்து சோதோமின் வாசலிலிருந்தான். அவர்களைக் கண்டு லோத்து எழுந்து எதிர்கொண்டு, பூமிக்கு நேராய்த் தாழ்ந்து வணங்கி,

உ. என் பிரபுகளே, அடியேனுடைய வீட்டிலே நீங்கள் பிரவேசித்து உங்கள் பாதங்களைச் சுத்திபண்ணி, இராத் தங்கிக் காலையில் எழுந்து பிரயாணஞ் செய்யலாமென்றான். அதற்கு அவர்கள், இல்லை, இராமுழுவதும் வீதியிலே தங்குவோமென்றார்கள்.

௩. அவன் அவர்களை மிகவும் நெருக்கிக் கேட்டதினால் அவனிடத்துக்குத் திரும்பி, அவன் வீட்டிற் பிரவேசித்தார்கள். அவன் புளிப்பில்லாத அப்பங்களைச் சுட்டு, அவர்களுக்கு விருந்துபண்ணினான். அவர்கள் புசித்தார்கள்.

௪. அவர்கள் படுக்குமுன், சோதோம் நகரத்தில் வாலிபர்முதல், கிழவர்வரைக்குமுள்ள சனங்களனைவரும், நான்கு திசைகளிலுமிருந்து வந்து, வீட்டைச் சூழ்ந்துகொண்டு,

௫. லோத்தைக் கூப்பிட்டு, இன்றிரவிலே உன்னிடத்தில் வந்திருக்கிற மனிதர் எங்கே? நாங்கள் அவர்களை அறியும்படிக்கு, அவர்களை எங்களிடத்துக்கு வெளியே கொண்டுவாவென்றார்கள்.

௬. அப்பொழுது லோத்து வாசலுக்கு வெளியே அவர்களிடத்திற் போய், கதவைப்பூட்டிக்கொண்டு,

௭. என் சகோதரரே, ஆ! அவ்வளவு துர்க்கிரியையைச் செய்யாதிருங்கள்.

௮. கேளுங்கள், புருஷரை அறியாத என் குமாரத்திகள் இரண்டுபேரிருக்கிறார்கள். அவர்களை உங்களிடத்துக்கு வெளியே கொண்டு வருகிறேன்; அவர்களுக்கு உங்கள் இஷ்டப்படியேசெய்யுங்கள். இந்தப்புருஷர் என்னு

டைய தாழ்வார நிழலிலே வந்தபடியால், இவர்களுக்கு மாத்திரம் ஒன்றுஞ் செய்யாதிருப்பீர்களாகவென்றான்.

கூ. அதற்கு அவர்கள், அப்பாற் போ என்றதுமல்லாமல், வந்தேறு குடியாயிருக்கிற இவன் நமக்கு நியாயாதிபதியாய் இருக்கப்பார்க்கிறானென்றும், இப்பொழுது அவர்களிலும் உனக்கு அதிக தீங்கைச் செய்வோமென்றுஞ் சொல்லி, லோத்தை மிகவும் நெருக்கி, கதவை உடைக்கவுங் கிட்டினார்கள்.

ய. அப்பொழுது அந்தப் புருஷர்கள், தங்கள்கைகளை வெளியே நீட்டி, லோத்தைத் தங்களருகே வீட்டுக்குள் இழுத்துக்கொண்டு, கதவைப்பூட்டி,

யக. வீட்டுவாசலிலுள்ள சிறியோரும் பெரியோருமாகிய சனங்களைக் குருடாக்கினார்கள். அதனால் அவர்கள் வாசலைத் தேடித்தேடி இளைப்படைந்தார்கள்.

யஉ. பின்பு அந்தப்புருஷர் லோத்தை நோக்கி, இவ்விடத்தில் உனக்கு வேறே ஆராகிலுமிருக்கிறார்களோ?

யங. இந்த ஸ்தலத்தின் ஒலம் யெகோவாவின் சந்நிதியிற் பெரிதாயிருக்கிறபடியால், நாங்களிந்தத் தலத்தை அழிப்போம். இதையழிக்கும்படி யெகோவா எங்களை அனுப்பினார். ஆதலால் உன் மருமகனையும், உன்புத்திரபுத்

திரிகளையும், நகரத்தில் உனக்குள்ள யாவை
யும், இவ்விடத்தைவிட்டு வெளியே புறப்ப
டுத்திக் கொண்டுபோவென்றார்கள்.

௰௪. அப்பொழுது லோத்து புறப்பட்டு,
தன் குமாரத்திகளை விவாகம்பண்ணின தன்
மருமக்கள்மாருடனே பேசிக்கொண்டு இந்த
நகரத்தை யெகோவா அழிப்பார். ஆகை
யால் நீங்கள் எழுந்து இந்தத்தலத்தைவிட்டுப்
புறப்படுங்களேன்றான். அவனுடைய மரும
க்கள்மாருக்கு அவன் பரிகாசக்காரனைப்போ
லக் காணப்பட்டான்.

௰௫. விடியற்காலமாகத் தூதர்கள் லோத்
தை நோக்கி, நீ நகரத்துக்கு வருந்தண்டனையி
னால் அழியாதபடிக்கு எழுந்து, உன் மனை
வியையும், இங்கேயிருக்கிற உன் புத்திரிகளி
ருவரையும் அழைத்துக்கொண்டு போவென்
று சொல்லி, அவனைத் துரிதப்படுத்தினார்கள்.

௰௬. அவன் தாமதித்துக்கொண்டிருக்கிற
பொழுது, யெகோவா அவன்மேல் வைத்த
இரக்கத்தினாலே, அந்த மனிதர் அவன் கை
யையும், அவன்மனைவியின் கையையும், அ
வன் குமாரத்திகளிருவருடைய கையையும்,
பிடித்து நடத்தி, அவர்களை நகரத்துக்கு வெ
ளியே கொண்டுபோய் விட்டார்கள்.

௰௭. அவர்களை வெளியே கொண்டுபோய்

விட்டு, அவர், உன்பிராணரட்சிப்பின் பொரு
ட்டுத் தப்பி ஒடு; பின்னிட்டுப் பாராதே; இந்
தச் சமபூமியில் எங்கேயாகிலும் தரியாதே.
மலைக்கு ஒடிப்போ. இல்லாவிட்டால் நீ நா
சமடைவாயென்று சொன்னார்.

ம்௯. அதற்கு லோத்து ஆ! அப்படியல்ல,
என் ஆண்டவரே,

ம்௯. அடியேனுக்கு உமது கடாட்சங் கி
டைத்ததே; என் சீவனை இரட்சித்ததினால்
நீர் உம்முடைய மகாகிருபை விளங்கக்காட்
டினீர்; மலைக்கு ஒட என்னால் முடியாது. ஏ
தாகிலும் ஒரு தீமை நேரிடவுங் கூடும். நான்
மரிக்கவுங் கூடும்.

உ௰. சிறிதாயிருக்கிறஇந்த ஊர், நான் ஒடிப்
போகத்தக்க சமீபமாயிருக்கின்றது; நான் சீவி
த்திருக்கும்படி அங்கே ஒடிப்போக உத்தரவு
கொடும். அதுசிறிதல்லவாவென்று அவர்களை
நோக்கிச் சொன்னான்.

உக. அதற்கு அவர், நீ குறித்த ஊரைக் க
விழாமல், இக்காரியத்திலும் உன் முகத்தை
ப் பார்த்தேன்.

உஉ. நீ அங்கேபோய்ச் சேருமளவும் நான்
ஒன்றுஞ் செய்யேன். சீக்கிரமாய் அங்கே ஒ
டித் தப்பித்துக்கொள்ளென்று சொன்னார். அ
தனால் அந்த ஊர் சோவார் என்னப்பட்டது.

உ௩. லோத்து, சோவாரிற், பிரவேசித்தபோழுது பூமியின்மேற் சூரியன் உதயமாயிற்று.

உ௪. சோதோம் கோமோராவின்மேல் யேகோவாவினால் வானத்திலிருந்து கந்தகத்தையும், அக்கினியையும், யேகோவா வருஷிப்பித்து,

உ௫. அந்த நகரங்களையும், சமபூமிகளனைத்தையும், நகரத்தார் யாவரையும், பூமியிற் பயிரையுங் கவிழ்த்தார்.

உ௬. லோத்துக்குப் பின்பு அவன் மனைவி திரும்பிப்பார்த்து, உப்புத் தூணானாள்.

உ௭. விடியற்காலத்தில் ஆபிரகாம் எழுந்து, தான் யேகோவாவுக்கு முன்பாக நின்ற இடத்துக்குப்போய்,

உ௮. சோதோம் கோமோராவின் திசையையும், சமபூமியாகிய தேசமுழுவதையும் பார்த்தபோழுது, அந்தப் பூமியிலே சூளையின் புகையைப்போலப் புகை எழும்புவதைக் கண்டான்.

உ௯. தேவன் அந்தச் சமபூமியிலுள்ள நகரங்களை அழிக்கையிலும், லோத்து வாசம்பண்ணின நகரங்களைத் தாம் கவிழ்த்து விடுகையிலும், அவர் ஆபிரகாமை நினைத்து, லோத்தைஅக்கவிழ்ப்பின் மத்தியில் நின்றுந் தப்பவைத்து அனுப்பினார்.

௩௰. லோத்து சோவாரில் வாசம்பண்ணப் பயந்து, சோவாரைவிட்டுத் தன் குமாரத்திகளிருவருடனேயும் மலையிலே போய் வசித்தான். அங்கே அவனும், அவன் குமாரத்திகளிருவரும், ஒரு குகையிலே தங்கினார்கள்.

௩௧. மூத்தவள் இளையவளிடத்தில், நம்முடைய பிதாவும் விருத்தனாயிருக்கிறான். பூமியெங்கும் நடக்கிற முறைமையின்படி, நம்முடனே சேருகிறதற்குப் பூமியில் ஒரு புருஷனுமில்லை.

௩௨. நம்முடைய பிதாவினாற் சந்ததியுண்டாகும்படி, அவனுக்குத்திராட்சரசத்தைக் குடிக்கக் கொடுத்து அவனோடே சயனிப்போம் வாவென்று சொன்னாள்.

௩௩. அன்றிரவில் அவர்கள் தங்கள் பிதாவுக்குத் திராட்சரசத்தைக் குடிக்கக் கொடுத்தார்கள். மூத்தவள், போய்த் தன் பிதாவோடே சயனித்தாள், அவள் சயனித்ததையும், எழுந்திருந்ததையும், அவன் அறியவில்லை.

௩௪. மற்றநாளில் மூத்தவள் இளையவளிடத்தில், கேள், நேற்றிரவு நான் என் பிதாவுடன் சயனித்தேன். இன்றிரவும் அவனுக்குத் திராட்சரசத்தைக் குடிக்கக் கொடுப்போம். நம்முடைய பிதாவினாலே சந்ததியுண்டாகும்

படி, நீயும் போய், அவனுடன் சயனியென்று சொன்னாள்.

௩௫. அன்றிரவும் தங்கள் பிதாவுக்குத் திராட்சரசத்தைக் குடிக்கக் கொடுத்தார்கள். இளையவள் எழுந்துபோய் அவனுடனே சயனித்தாள். அவள் சயனித்ததையும், எழுந்திருந்ததையும் அவன் அறியவில்லை.

௩௬. இவ்விதமாய் லோத்தின் குமாரத்திகளிருவருந் தங்கள் பிதாவினால் கருப்பவதியானார்கள்.

௩௭. மூத்தவள் ஒரு புத்திரனைப் பெற்று, அவனுக்கு மோவாபென்று பேரிட்டாள். அவன் மோவாபியருக்குப் பிதா. அவர்கள் இந்நாள்வரைக்குமிருக்கிறார்கள்.

௩௮. இளையவளும் ஒரு புத்திரனைப்பெற்று, அவனுக்குப் பென்னம்மியென்று பேரிட்டாள். அவன் அம்மோனியருக்குப்பிதா. அவர்களும் இந்நாள்வரைக்கும் இருக்கிறார்கள்.

## ௨௰. அதிகாரம்.

*௧. ஆபிரகாம் தன் மனைவியைத் தன் சகோதரியென்றமையால் அபிமேலேக்கு அவளைத் தன் மனைவியாய்க்கொள்ளல்: அவன் சொப்பனத்தில் தேவனால் உணர்த்தப்பட்டு அவளை ஒப்பித்தல்.*

௧. ஆபிரகாம் அவ்விடம் விட்டுத் தென்

தேசத்துக்குப் பிரயாணமாய்ப்போய், காதே ஷுக்கும், ஷூருக்கும், இடையிலே வாசம்ப ண்ணினதுமன்றிக் கேராரிலேயுந் தங்கிவந் தான்.

௨. அங்கே ஆபிரகாம் தன் மனைவியாகிய சாராளைத் தன் சகோதரியென்று சொன்னதி னால், கேராரின் இராசனாகிய அபிமேலேக்கு ஆளனுப்பிச் சாராளை அழைப்பித்தான்.

௩. தேவன், இரவிலே அபிமேலேக்குக்கு ச் சொப்பனத்தில் தோன்றி, அவனை நோக்கி, கேள், நீ அழைப்பித்த ஸ்திரியே உன் மரண த்துக்கேதுவாவாள். அவள் ஒருவனுடைய மனைவியென்று சொன்னார்.

௪. அபிமேலேக்கு அவளுடன் சேரவில் லை. அவன், ஆ! ஆண்டவரே, நீதியுள்ளசாதி யாரையும் அழிப்பீரா?

௫. இவள் தன் சகோதரியென்று அவன் எ ன்னுடனே சொல்லவில்லையா? அவன் தன் சகோதரனென்று இவளுஞ் சொல்லவில்லை யா? நேர்மையான இருதயத்தோடும், சுத்த மானகைகளோடும், இதைச் செய்தேனென் று சொன்னான்.

௬. அதற்குத் தேவன் அவனை நோக்கி, நே ர்மையான இருதயத்தோடு நீ இதைச் செய்தா யென்பதை நானும் அறிந்து நீ எனக்கு விரோ

தமாய்ப் பாவஞ்செய்யாதபடிக்கு உன்னைத் தடுத்தேன்; அவளைத்தொட, நான் உன்னை விடவில்லை.

எ. அந்த மனிதனுடைய மனைவியை விட்டுவிடு. அவன் ஒரு தீர்க்கதரிசி. உனக்காகப் பிரார்த்தனைபண்ணுவான். நீயுஞ் சீவிப்பாய். விடாயேயாகில், நீயும், உன்னைச்சேர்ந்தயாவரும் நிச்சயமாக மரிப்பீர்களென்பதை அறியென்று சொப்பனத்திலே சொன்னார்.

அ. அபிமேலேக்கு அதிகாலையில் எழுந்து தன் பணிவிடைக்காரரெல்லாரையும் அழைப்பித்து, நடந்தவைகளெல்லாவற்றையும் அவர்கள் செவிக்கேறத் தெரிவித்தான். அந்த மனிதர்கள் மிகவும் பயந்தார்கள்.

கூ. அபிமேலேக்கு ஆபிரகாமை அழைப்பித்து, அவனிடத்தில், நீ எங்களுக்கு என்ன செய்தாய்? நீ எனக்கும், என் இராச்சியத்துக்கும், கொடிய பாவம் வரப்பண்ணுகிறதற்கு உனக்கென்ன குற்றஞ்செய்தேன்? செய்யத்தகாத காரியங்களை என்னிடத்திற் செய்தாயே என்று சொன்னான்.

ய. பின்னும் அபிமேலேக்கு ஆபிரகாமிடத்தில், எதைக்கண்டு நீ இந்தக் காரியத்தைச் செய்தாயென்று கேட்க;

யக, ஆபிரகாம், இவ்விடத்தில் தேவ பயு

மேயில்லை; என் மனைவியினிமித்தம் என்னைக் கொலைசெய்வார்களென்று நான் நினைத்தேன்.

௰௨. அன்றியும், அவள் என் சகோதரியென்பது மெய்தான். அவள் என் பிதாவுக்குப் புத்திரி; என் மாதாவுக்கோ புத்திரியல்ல.

௰௩. அவள் எனக்கு மனைவியானாள். என் பிதாவின் வீட்டை விட்டு, அங்குமிங்குந திரியத் தேவன் என்னை ஏவினகாலத்திலே, நான் போகுமிடமெங்கும் இவன் என் சகோதரன் என்றுசொல்லு; இந்தத் தயையை நீ எனக்குச் செய்யவேண்டுமென்பதாக, நான் அவளிடத்திற் சொல்லி யிருந்தேனென்று சொன்னான்.

௰௪. அபிமெலேக்கு ஆடுமாடுகளையும், பணிவிடைக்காரரையும், பணிவிடைக்காரிகளையும், ஆபிரகாமுக்குக் கொடுத்து, அவன் மனைவியாகிய சாராளையும், அவனுக்கு ஒப்பித்தான்.

௰௫. அபிமெலேக்கு, என் தேசம் உனக்குமுன்பாக இருக்கின்றது; உன் இஷ்டப்படி வாசம்பண்ணென்று சொல்லியபின்பு,

௰௬. சாராளை நோக்கி, உன் சகோதரனுக்கு ஆயிரம் வெள்ளிக்காசு கொடுத்தேன்; உன்னுடனேயிருக்கிற யாவருக்கும், மற்றெல்லாருக்கும் முன்பாக இவனே உன கண்க

ளுக்கு முக்காடாயிருப்பானுக என்றுன். இ ப்படி அவள் கண்டிக்கப்பட்டாள்.

யஎ. யேகோவா, ஆபிரகாமுடைய மனைவியாகிய சாராளின் நிமித்தம், அபிமேலேக்கின் விட்டிலுள்ளசகலருக்கும் கருப்பத்தடை செய்திருந்தார்.

யஅ. ஆபிரகாம் தேவனை நோக்கிப் பிரார்த்தித்ததினுலே, தேவன், அபிமேலேக்கையும், அவன் மனைவியையும், அவன் பணிவிடைக்காரிகளையுஞ் சீர்ப்படுத்த, அவர்களும் பிள்ளைப்பேறடைந்தார்கள்.

## உக. அதிகாரம்.

க. ஈசாக்கு உற்பவித்தலும், முலைப்பால் மறுத்தலும் : சு. ஆகாரைத் துரத்திவிடுதல் : யஎ. தேவதூதனுற் சாந்தமடைதல். உஉ. ஆபிரகாமும் அபிமேலேக்கும் பேர்ஷேபாவில் உடன்படிக்கை செய்தல்.

க. யேகோவா தாஞ் சொன்னபடி சாராளைக் கடாட்சித்தார். யேகோவா தாம் சொல்லியபிரகாரஞ் சாராளுக்கு அருள்செய்தார்.

உ. ஆபிரகாம் முதிர்ந்த வயதாயிருக்கையில், சாராள் கருப்பந்தரித்து, தேவன் குறித்த காலத்தில், அவனுக்கொரு புத்திரனைப்பெற்றுள்.

ங. ஆபிரகாம் தனக்குச் சாராள் பெற்ற புத்திரனுக்கு ஈசாக்கென்று பேரிட்டான்.

ச. தன் புத்திரனாகிய ஈசாக்கு பிறந்த எட்டாந் தினத்தில், ஆபிரகாம் தனக்குத் தேவன் விதித்தபடி, அவனுக்கு விருத்தசேதனம் பண்ணினான்.

ரு. ஈசாக்குஎன்னும் புத்திரன் பிறந்தகாலத்தில் ஆபிரகாமுக்கு நூறுவயது.

சு. ஆபிரகாம் முதிர்ந்த வயதாயிருக்கையில், நான் அவனுக்கோரு புத்திரனைப் பெற்றேனே; இப்படித் தேவன், நான் நகைக்கும்படி செய்தார். இதைக் கேட்கும் யாவரும் என்னோடே நகைசெய்வார்கள்.

எ. ஆபிரகாமை நோக்கி, சாராள் பிள்ளைகளுக்கு முலைகோடுப்பாளேன்று, முன்னமே சோல்பவர் யாவரேன்று, சாராள்சோன்னாள்.

அ. பிள்ளை வளர்ந்து முலை மறந்தது. ஈசாக்கு முலைமறுத்த தினத்தில் ஆபிரகாம் பெருவிருந்துபண்ணினான்.

கூ. எகிப்து தேசத்தாளாகிய ஆகார் ஆபிரகாமுக்குப் பெற்ற புத்திரன் பரிகாசஞ்செய்வதைச் சாராள் கண்டு,

ய. ஆபிரகாமை நோக்கி, இந்த அடிமையாகிய இவளையும், இவள் மகனையும், புறம்பேவிடும். இந்த அடிமையின் மகன் என் பு

த்திரனுகிய ஈசாக்கோடே உடன் சுதந்தரனு யிருக்கலாகாதேன்று சொன்னுள்.

யக. ஆபிரகாம் தன் மகனைக் கடாட்சித்த தினுல், இக்காரியம் அவன் பார்வைக்கு மிக வுங்கொடிதாயிருந்தது.

யஉ. தேவன் ஆபிரகாமை நோக்கி, அந்த ப் புத்திரனையும், உன்னடிமைப் பெண்ணை யுங் குறித்து நீ துக்கிக்கவேணடுவதில்லை. உ ன் சந்ததி ஈசாக்கின் வழியாய் விளங்கும்; ஆ கையால் சாராள் உன்னுடன் சொன்ன எல் லாவற்றையுங் கேள்.

யங. அடிமையானவளின் புத்திரனும் உ ன் சந்ததியாயிருக்கிறதினுல், அவனில் நின் றும் ஒரு சாதியைத் தோன்றச்செய்வேனென் று சொன்னுர்.

யச. ஆபிரகாம் அதிகாலையில் எழுந்து, உ ணவுப்பொருளையும், ஒரு துருத்தி நீரையுமெ டுத்து, ஆகாரினுடைய தோளின்மேல் வைத் து, பிள்ளையையும் ஒப்பித்து அவளை அனுப் பி விட்டான். அவள் புறப்பட்டுப் போய்ப் பேர்ஷேபாவின் வனத்திலே அங்குமிங்கு மாக அலைந்து திரிந்தாள்.

யரு. துருத்தியில் இருந்த தண்ணீர் ஒழிந்த பின் அவள் பிள்ளையை ஒரு செடியின் கீழ்வி ட்டு,

௰௬. பிள்ளை மரிப்பதை நான் பார்க்கமாட்டேன் என்று, எதிராக அம்பு பாயுந் தூரமளவிற்குப் போயிருந்துகொண்டு, சத்தமிட்டழுதாள்.

௰௭. தேவன் பிள்ளையின் சத்தத்தைக் கேட்டார். தேவதூதன் வானத்திினின்று ஆகாரைக்கூப்பிட்டு, ஆகாரே, துயரம் என்ன? நீ பயப்படவேண்டாம். தேவன்அவ்விடத்தில் இருக்கிற பிள்ளையின் சத்தத்தைக்கேட்டார்.

௰௮. நீ எழுந்து பிள்ளையைத் தூக்கி உன் கையில் ஏந்து. அவனில் நின்றும் ஒரு பெரிய சாதியைத் தோன்றச் செய்வேன் என்றார்.

௰௯. தேவன் அவளுடைய கண்களைத்தெளிவித்தார். அப்பொழுது அவள் ஒரு கிணற்றைக் கண்டு போய்த் துருத்தியில் தண்ணீரை நிறைத்துப் பிள்ளைக்குக் குடிக்கக் கொடுத்தாள்.

௨௰. தேவனும் பிள்ளையுடனே இருந்தார். அவன் வளர்ந்து வனத்தில் வசித்து, வில் வல்லவனானன்.

௨௧. அவன் பாரான் வனத்தில் வாசம்பண்ணுகையில், அவனுடைய மாதா அவனுக்கு எகிப்து தேசத்தாளை மனைவியாகக் கொடுப்பித்தாள்.

௨௨. அக்காலத்தில் அபிமெலேக்கு தன்

சேனுபதியாகிய பிகோலை நோக்கி, ஆபிரகாமி டத்துக்குப் போய், அவனிடத்தில் நீ செய்கி ற காரியங்கள் எல்லாம் வாய்க்கத் தக்கதாகத் தேவன் உன் பட்சமாயிருக்கிறுர்.

உங. ஆகையால் நீ, என்னையாகிலும், எ ன்புத்திர பௌத்திரரையாகிலும், வஞ்சியாம ல் நான் உனக்குச் செய்தபடி எனக்கும், நீ தங்குகிற இத்தேசத்துக்கும், தயை செய்வே னென்று இங்கே தேவன் மேல் எனக்கு ஆ ணையிட்டுத் தாவென்று சொல்ல;

உச. ஆபிரகாம், நான் ஆணையிடுகிறேனே ன்று சொன்னுன்.

உரு. மேலும் அபிமேலேக்கினுடைய ப ணிவிடைக்காரர், கிணற்றை அபகரித்துக்கொ ண்டதினிமித்தம், ஆபிரகாம் அபிமேலேக் கைக் கடிந்துகொண்டான்.

உசு. அதற்கு அபிமேலேக்கு, இந்தக் காரி யத்தைச் செய்தவனை நான் அறியேன். நீயும் எனக்கு அறிவிக்கவில்லை. இதை நான் இ ன்றுகேட்டதேயன்றி இதற்கு முன் கேட்க வே இல்லையேன்றுன்.

உள. ஆபிரகாம் ஆடுமாடுகளைக் கொண்டுவ ந்து அபிமேலேக்குக்குக் கொடுத்தான். அவ ர்கள் இருவரும் உடன்படிக்கை பண்ணிக் கொண்டார்கள்.

உஅ. ஆபிரகாம் ஏழு பெண் ஆட்டுக் குட்டிகளை ஒரு பக்கத்தில் விட்டு வைத்தான்.

உகூ. அபிமெலேக்கு ஆபிரகாமை நோக்கி நீ ஒருபக்கத்தில் விட்டுவைத்த இவ்வேழு ஆட்டின் பெண்குட்டிகளும் எதற்கென்று கேட்டான்.

௩௰. அதற்கு அவன், நான் இந்தக்கிணறு தோண்டினதைக் குறித்து நீர் எனக்குச் சாட்சியாக இவ்வேழு ஆட்டின் பெண் குட்டிகளையும் என் கையினுல் வாங்கிக்கொள்ள வேண்டும் என்றுன்.

௩க. அவர்கள் இருவரும் அவ்விடத்தில் ஆணையிட்டுக்கொண்டபடியால், அந்த இடம் பேர்ஷேபா என்னப்பட்டது.

௩உ. அவர்கள் பேர்ஷேபாவிலே உடன்படிக்கை பண்ணிக்கொண்டபின்பு, அபிமெலேக்கும் அவனுடைய சேனுபதியாகிய பீகோலும் எழுந்து பெலிஸ்தியருடைய தேசத்திற்குத் திரும்பினுர்கள்.

௩௩. ஆபிரகாம் பேர்ஷேபாவிலே ஒருதோப்பை உண்டாக்கி, நித்திய தேவனுகிய யேகோவாவுடைய நாமத்தை அவ்விடத்திலே சொல்லி, பிரார்த்தித்துக்கொண்டான்.

௩ச. ஆபிரகாம் நெடுநாளாகப் பெலிஸ்தியருடைய தேசத்திலே தங்கினுன்.

# உஉ. அதிகாரம்.

க. ஆபிரகாம் தன்புத்திரனுகிய ஈசாக்கைப்பலியிடக் கற்பிக்கப்படல்: அதன்படி செய்யத்துணிந்தபொழுது தேவதூதனுல்விலக்கப்படல்: ௰௫. அத்துணிவினிமித்தம் தேவனுல் ஆசீர்வதிக்கப்படல்: உ௰. ஆபிரகாமின் சகோதரனுகிய நாகோரின் வமிசவரலாறு.

க. இந்தக் காரியங்கள் நடந்த பின்பு, தேவன், ஆபிரகாமே, என்று சொல்ல, அவன் அடியேன் என்றான்.

உ. அவர், உனக்கன்பானவனும் ஏகசுதனுமாகிய ஈசாக்கை நீ அழைத்துக்கொண்டு, மோரியதேசத்துக்குப் போய், அங்கே நான் உனக்குக் காட்டும் மலைகளில் ஒன்றின்மேல் அவனைச் சருவாங்க தகனபலியாக இடுவென்று சொல்லி, ஆபிரகாமைப் பரிசோதித்தார்.

ஙு. அதிகாலையில் ஆபிரகாம் எழுந்து தன் கழுதையிற்சேணங்கட்டி தன் வாலிபரிலிருவரையும், தன்புத்திரனுகிய ஈசாக்கையும், அழைத்து, தகனபலிக்குக் கட்டைகளையும் பிளந்துகொண்டு, தனக்குத் தேவன் குறித்த இடத்துக்குப் புறப்பட்டுப்போனான்.

ச. மூன்றும் நாளில் ஆபிரகாம் கண்ணேறி

ட்டுப் பார்த்து அந்த இடத்தைத் தூரத்தில்க ண்டான்.

ரு. ஆபிரகாம் தன்வாலிபரை நோக்கி, நீங் கள் இங்கே கழுதையை நிறுத்தி நில்லுங்கள். நானும் பிள்ளையும் அவ்விடம்மட்டும் போய் த் தேவாராதனை செய்து, உங்களிடத்துக்கு த் திரும்பிவருவோமென்று சொல்லி,

சு. ஆபிரகாம் தகனபலிக்குக் கட்டைக ளையெடுத்துத் தன் புத்திரன் ஈசாக்கின்மேற் சுமத்தி, தன்கையிலே நெருப்பையும், கத்தி யையுமெடுத்துக்கொண்டான். பின்பு இருவ ருங் கூடிப்போனார்கள்.

எ. ஈசாக்கு தன்பிதாவாகிய ஆபிரகாமை நோக்கி, என் பிதாவேயென்று சொல்ல, அவ ன் இருக்கிறேன், என் மகனே, என்றான். இ வன், பாரும், நெருப்புங் கட்டையுமிருக்கி ன்றன. தகனப் பலிக்கு ஆட்டுக்குட்டி எங் கே என்றான்.

அ. அதற்கு ஆபிரகாம் என்மகனே, தேவ ன் தமக்குத் தகனபலிக்கு ஆட்டுக்குட்டி யைத் தாமே தெரிந்துகொள்வாரென்றான். பி ன்பு இருவருங் கூடிப் போய்,

கூ. தேவன் குறித்த இடத்தைச் சேர்ந்தா ர்கள். அங்கே ஆபிரகாம் ஒரு வேதிகையை உண்டாக்கி, கட்டைகளை அடுக்கி, தன்புத்திர

ன் ஈசாக்கைக்கட்டி, வேதிகையிலிட்ட அக்கட்டைகளின்மேல் அவனைக் கிடத்தினான்.

௰. பின்பு, ஆபிரகாம் தன் புத்திரனைச் சேதிக்கும்படி தன் கையை நீட்டிக் கத்தியை எடுக்க,

௰௧. யேகோவாவுடைய தூதனானவர் வானத்தில் நின்று ஆபிரகாமே, ஆபிரகாமே, என்றுகூப்பிட்டார். அவன் இங்கே நிற்கிறேனென்றான்.

௰உ. அவர், இந்தப்பிள்ளையின்மேற் கையைவைக்கவேண்டாம். இவனை ஒன்றுஞ் செய்யாதிரு; நீ தேவனுக்குப் பயப்படுகிறவனென்று இப்போழுது அறிந்தேன். என்நிமித்தம் உன் சுதனை, உன் ஏக சுதனையும் பார்க்கவில்லையென்று சொன்னார்.

௰௩. பின்பு ஆபிரகாம் பார்வை செலுத்திப் பார்க்கிற பொழுது, பின்னாக ஒரு ஆட்டுக்கடாசெடிக்குள்ளே தன் கொம்புகள் சிக்குண்டிருக்கக் கண்டான். ஆபிரகாம் போய்க் கடாவைப் பிடித்து, அதைத் தன் புத்திரனுக்கு ஈடாகத் தகனபலியிட்டான்.

௰௪. ஆபிரகாம் அந்த ஸ்தலத்துக்கு யேகோவாயீரேயென்று பேரிட்டான். அதனால் மலையில் யேகோவா பார்த்துக்கொள்வாரே

ன்பது இந்நாள்வரைக்குஞ் சொல்லப்பட்டி ருக்கின்றது.

௰௫. யேகோவாவுடைய தூதன் இரண் டாந்தரம் வானத்தில் நின்று ஆபிரகாமைக் கூப்பிட்டு,

௰௬. நீ உன்சுதனை, உன் ஏகசுதனையும் பா ராமல் இந்தக் காரியத்தைச் செய்தபடியால்,

௰௭. நான் உன்னை மிகவும் ஆசீர்வதித்து, உன் சந்ததியை வானத்தின் நட்சத்திரங்களை ப்போலவும், கடற்கரை மணலைப்போலவும் மிகுதியாய்ப் பெருகப்பண்ணுவேன். உன்ச ந்ததியார் தங்கள் சத்துருக்களின் வாசல்களை ச் சுதந்தரித்துக்கொள்வார்கள்.

௰௮. உன் சந்ததியினாலே பூமண்டலத்தி லுள்ள சகல சாதியாரும் ஆசீர்வதிக்கப்படு வார்களென்று, என்னைக் கொண்டே ஆணையி ட்டிருக்கிறேனென்று, யேகோவா சொல்லுகி றாரென்றான்.

௰௯. பின்பு ஆபிரகாம் தன் வாலிபரிடத் துக்குத் திரும்ப, அவர்களும் எழுந்து புறப்ப ட்டு ஏகமாய்ப் பேர்ஷேபாவுக்குப் போனார்க ள். ஆபிரகாம் பேர்ஷேபாவிலே வாசம்பண் ணினான்.

௨௰. இந்தக் காரியங்கள் நடந்த பின்பு,

ஒருவன் ஆபிரகாமிடத்தில் வந்து, மில்காளு ம், உன் சகோதரனாகிய நாகோருக்கு,

உக. அவனுடைய முதற்பேரான ஊத்சு, இவன் சகோதரனாகிய பூசு, அராமுக்குப் பி தாவாகிய கேமுவேல்,

உஉ. கேசேது, அசோவு, பில்தாஷ், இத் லாப்பு, பெத்துவேல் என்னும் பிள்ளைகளைப் பெற்றாளென்று அறிவித்தான்.

உங. அவ்வெட்டுப் பேரையும் மில்காள் ஆ பிரகாமுடைய சகோதரனாகிய நாகோருக்குப் பெற்றாள். பெத்துவேலும் ரிபெக்காளைப் பே ற்றாள்.

உச. ரேயுமாள் என்று பேர்கொண்ட அவ னுடைய மறுமனையாட்டியும் தேபாகையு ம், காகாமையும், தாகாஷையும், மாகாவை யும் பெற்றாள்.

## உஙு. அதிகாரம்.

*க. சாராள் மரணமடைதல், மக்பேலா என்னும் பிரே தவறையில் அடக்கம்பண்ணப்படல்.*

க. சாராள் நூற்றிருபத்தேழுவருஷஞ் சீவித் திருந்தாள். இவ்வளவே சாராளுடைய ஆ யுள்.

உ. கானான் தேசத்திலுள்ள எபிரோன் எ

ன்னுங் கீரியாத் அர்பாவிலே சாரள் மரணம
டைந்தாள்.

௩. ஆபிரகாம் வந்து சாராள் நிமித்தந் துக்
கித்துப் புலம்பினன்.

௪. பின்பு ஆபிரகாம் பிரேதத்தை விட்டே
ழுந்து, எத்தின் புத்திரருடனே சம்பாஷித்து,

௫. நான் உங்களுக்குள்ளே பரதேசியும்
புறவாசியுமாயிருக்கிறேன். என்னிடத்திலி
ருக்கிற சவத்தை நான் அடக்கம்பண்ணுகிற
தற்கு உங்களுக்குள்ளே எனக்குச் சொந்த
மாக ஒரு மயான ஸ்தானத்தைத் தரவேண்டு
மென்றான்.

௬. அதற்கு எத்தின்புத்திரர் ஆபிரகாமை
நோக்கி,

௭. ஆண்டவரே, கேளும், எங்களுக்குள்
ளே நீர் மகாபிரபு. எங்கள் பிரேதவறைகளி
ல் முக்கியமானதிலே பிரேதத்தை அடக்கம்
பண்ணும். எங்களில் ஒருவனகிலும் தன்
பிரேதவறையில் அந்தப் பிரேதத்தை அடக்
கம் பண்ணுவதற்குத் தடைசெய்யானென்று
சொல்ல,

௮. ஆபிரகாம் எழுந்து எத்தின் புத்திரராகி
ய தேசத்தாருக்குத் தலை குனிந்து, அவர்களு
டனே சம்பாஷித்து, என்னிடத்திலிருக்கிற
பிரேதத்தைக் காணுதபடி, நான் அடக்கம்ப

ண்ண நீங்கள் சம்மதித்தால், நீங்கள் எனக்குச்செவிகொடுத்து, சோகாருடைய புத்திரஞகிய எப்பிரோன்,

௯. தனது நிலத்தின் எல்லேயிலுள்ள மக்பேலா என்னுங் குகையை நான் சொந்த மயானஸ்தானமாக்கிகொள்ள, அது பெறும் பூரணவிலேக்குத் தரச்சொல்லி, என்னிமித்தம் அவரிடத்தில் வேண்டிக்கொள்வீர்களாகவே ன்று சொன்ஞன்.

௰. எப்பிரோன், எத்தின் புத்திரரோடே கூட இருந்தான். எத்தியஞகிய எப்பிரோன் தன் ஊர்வாசலிற் பிரவேசிக்கும் எத்தின்புத்திரரனேவருங் கேட்கத்தக்கதாக, ஆபிரகாமுக்கு உத்தரமாய்,

௰௧. அல்ல, என் ஆண்டவரே, கேளும். அந்த நிலத்தையும், உமக்குத் தருகிறேன். அதிலிருக்கிற குகையையுந் தருகிறேன். என் சனபுத்திரர் சாட்சியாக அதையுமக்குத் தருகிறேன். உம்மிடத்திலிருக்கிற பிரேதத்தை அடக்கம்பண்ணும் என்று சொன்ஞன்.

௰௨. ஆபிரகாம் அத்தேசத்தாரை வணங்கி,

௰௩. தேசத்துச் சனங்கள் கேட்கத்தக்கதாக எப்பிரோனே நோக்கி, அப்படியாஞல் என்னேக் கேள், நிலத்தின் விலேயைத் தருகிறேன். என்னிடத்தில் வாங்கிக்கொள். அவ்வி

டத்தில் அந்தப்பிரேதத்தை அடக்கம்பண்ணுவேனென்று சொன்னான்.

௰௪. அதற்கு எப்பிரோன் ஆபிரகாமை நோக்கி,

௰௫. என்னாண்டவனே கேளும். அந்த நிலம் நானூறு வெள்ளிக்காசுபேறும். அது எனக்கும் உமக்கும் எவ்வளவு? நீர் அந்தச்சவத்தை அடக்கம்பண்ணுமென்றுசொன்னான்.

௰௬. ஆபிரகாம் எப்பிரோனுடைய சொல்லைக்கேட்டு, எத்தின் புத்திரர்களுக்கு முன்பாக எப்பிரோன் சொன்னபடி, வியாபாரிகள் கொள்ளுகிற விலைப்படி, நானூறு வெள்ளிக்காசை அவனுக்கு நிறுத்துக்கொடுத்தான்.

௰௭. இந்தப்பிரகாரமாக மம்ரேக்கெதிரே மக்பேலாவிலுள்ள எப்பிரோனுடைய அந்த நிலமும், அதிலுள்ள குகையும், நிலத்தின் எல்லையெல்லாஞ் சூழ்ந்த மரங்கள்யாவும்,

௰௮. அவனூரின் வாசலிற் பிரவேசிக்கும் எத்தின் புத்திரர் எல்லாரும் அறியத்தக்கதாய், ஆபிரகாமுக்குச் சொந்தமாக உறுதிப்படுத்தப்பட்டன.

௰௯. அதற்குப் பின், ஆபிரகாம் தன்மனைவியாகிய சாராளை மம்ரேக்கு எதிரேயிருக்கிற மக்பேலாவென்னும் நிலத்தின் குகையில்

அடக்கம் பண்ணினான். இதுவே கானான் தேசத்திலுள்ள எப்பிரோன்.

உய. இப்படி எத்தின் புத்திரர்களால் அந்த நிலமும் அதிலுள்ள குகையும் ஆபிரகாமுக்குச் சொந்த மயானஸ்தானமாக உறுதிப்படுத்தப்பட்டன.

## உச. அதிகாரம்.

க. ஆபிரகாம் தன் பணிவிடைக்காரனை ஆணையிடுவித்தல் : ய. அப்பணிவிடைக்காரன் பிரயாணம்பண்ணுகையிற் பிரார்த்தித்தல் : யரு. ரிபெக்காளைக் கண்டு தேவனைத் துதித்தல் : உஅ. அவன் லாபானால் உபசரிக்கப்படல் : ௩ய. ரிபெக்காளைப் பணிவிடைக்காரன் மணம் பேசல் : லாபானும் பெத்துவேலும் உடன்படல் : ருரு. ரிபெக்காள் பணிவிடைக்காரனுடன் புறப்படல் : சுஉ. ஈசாக்கு வினிடத்திற் சேர்தல்.

க. ஆபிரகாம் விருத்தனாய் நீடிய ஆயுசு பெற்றிருந்தான். யேகோவா ஆபிரகாமைச் சகல காரியங்களிலேயும் ஆசீர்வதித்து வந்தார்.

உ. ஆபிரகாம் தன் வீட்டிலுள்ளவர்களுக்குள் வயதிலே முதிர்ந்தவனும், தனக்குண்டான எல்லாவற்றிற்கும் அதிகாரியுமாகிய தன் பணிவிடைக்காரனை நோக்கி,

௩. நான் சஞ்சரித்து வருகிற கானான் தேச

திலுள்ளவர்களின் குமாரத்திகளில், நீ என்கு மாரனுக்குப் பெண்கொள்ளாமல்,

ச. என் தேசத்திலிருக்கிற என் உறவின் முறையாரிடத்துக்குப் போய், என் குமாரனாகிய ஈசாக்குக்கு ஒரு பெண் கொள்ளு. அதற்கு உன் கையை என்தொடையின்கீழ் வைத்து, வானத்துக்குத் தேவனும், பூமிக்குத்தேவனுமாகிய யெகோவாவைக் கொண்டு, நீ ஆணையிடுவாயாகவென்று சொன்னான்.

ரு. அந்தப் பணிவிடைக்காரன், அவ்விடத்துப் பெண் என் பின்னாக இந்தத் தேசத்துக்கு வர மனதில்லாதிருந்தால், நீர் விட்டுவந்த அந்தத் தேசத்துக்கு உம்முடைய குமாரனை மீண்டும் அழைத்துப் போகலாமாவென்று அவனிடத்திற் கேட்க,

சா. ஆபிரகாம் அவனை நோக்கி, மீண்டும் என் குமாரனை அங்கே அழைத்துப் போகாதபடி எச்சரிக்கையாய் இரு.

எ. என்னை என் பிதாவின் வீட்டிலும்,என் சுற்றத்தார் இருக்கிற தேசத்திலும் இருந்து அழைத்து வந்தவரும், உன் சந்ததிக்கு இத்தேசத்தைத் தருவேன் என்று என்னோடே சம்பாஷித்து ஆணையிட்டவரும், வானத்துக்குத் தேவனுமாகிய யெகோவா, நீ அங்கே இருந்து என் குமாரனுக்கு ஒரு பெண்கொண்டுவ

ரும்படிக்குத் தமது தூதனை உனக்கு முன்பாக அனுப்புவார்.

அ. பெண், உனக்குப் பின்செல்ல மனதில்லாதிருந்தாளேயாகில், இவ்வாணைக்கு நீங்கலாய் இருப்பாய். ஆதலால் மீண்டும் என் குமாரனை மாத்திரம் அழைத்துப் போகப்படாதென்று சொன்னான்.

கூ. அந்தப்பணிவிடைக்காரன் தன்கையைத் தன் எசமானனாகிய ஆபிரகாமுடைய தொடையின் கீழ்வைத்து, அந்தக் காரியத்தைக்குறித்து அவனுக்கு ஆணையிட்டுக் கொடுத்தான்.

௰. பின்பு அந்தப் பணிவிடைக்காரன் தன் எசமானனுடைய ஒட்டகங்களிற் பத்து ஒட்டகங்களோடே, தன் எசமானனுடையவைகளாய்த் தன் வசத்தில் இருந்த பொருள்களில் வேண்டியவைகளைக் கைப்பற்றி எழுந்து புறப்பட்டுப் போய் அரமநகரீம் என்னும் தேசத்தில் நாகோருடைய ஊரிற் சேர்ந்து,

௰க. சாயங்காலம் ஸ்திரிகள் தண்ணீர்மொள்ளப் புறப்படும் வேளையிலே, ஊருக்குப் புறம்பாய் நீருள்ள ஒரு கிணற்றருகிலே ஒட்டகங்களை நிறுத்தி,

௰உ. என் எசமானன் ஆபிரகாமின் தேவனாகிய யெகோவாவே, இன்றைத்தினம் எனக்குக் காரியஞ் சித்திக்கப்பண்ணி, என் எச

மானஞகிய ஆபிரகாமின் மேல் தயை செய் தருளும்.

யங. நான் இந்த நீருள்ள கிணற்றருகிலே நி ற்கிறேன் ; அந்த ஊராருடைய பெண்கள் த ண்ணீர்மோள்ளப் புறப்பட்டு வருகிறுர்கள்.

யச. நான் பானம்பண்ண, உன் குடத்தை ச் சாயென்று சோல்லும்போழுது, நீர் உம்மு டைய தாசஞகிய ஈசாக்குக்கு, நியமித்த கன் னிகையே, பானம்பண்ணென்றும், உன் ஒ ட்டகங்கள் குடிக்க மோண்டு வார்ப்பேனே ன்றுஞ் சோல்லும்படி அருள்செய்யும். அத ஞல் என் எசமானனுக்கு அனுக்கிரகஞ்சேய் தீர் என்பது எனக்கு விளங்கும் என்ருன்.

யரு. அவன் இப்படிச் சோல்லி முடிக்கு முன்னே ஆபிரகாமுடைய சகோதரஞன நா கோருக்கும்,அவன்மனைவி மில்க்காளுக்கும், குமாரஞன பேத்துவேலுக்குப் பிறந்த ரிபே க்காள், தன் குடத்தைத் தன் தோழின் மேல் வைத்துக்கோண்டு புறப்பட்டு வந்தாள்.

யசு. அந்த ஸ்திரி மிகுந்த அழகுள்ளவளும் புருஷனை அறியாத கன்னிகையுமாய் இருந் தாள். அவள் கிணற்றில் இறங்கித் தன் குடத் தை நிறைத்துக்கோண்டு ஏறிவர,

யஎ. அந்தப்பணிவிடைக்காரன் ஒடி அவ ளை எதிர்கோண்டு, உன் குடத்திலிருக்கிற த

ண்ணீரிற் கொஞ்சம் நான் பானம்பண்ணத் தரவேண்டுமென்ருன்.

௰௮. அதற்கு அவள் என் ஆண்டவனே, பானம்பண்ணுமென்று தீவிரமாய்க் குடத்தைத் தன் கையில் இறக்கிக்கொண்டு, அவனுக்குப் பானம்பண்ணக் கொடுத்தாள்.

௰௯. கொடுத்து முடிந்தபின், உம்முடைய ஒட்டகங்களுங் குடித்துத் தீருமட்டும் அவைகளுக்குமொண்டு வார்ப்பேனென்றுசொல்லி,

௨௰. தீவிரமாய்த் தன் குடத்துத் தண்ணீரைத் தொட்டியில் ஊற்றிவிட்டு, பின்னும் மொண்டுகொள்ளக் கிணற்றுக்கு ஓடி, அவனுடைய ஒட்டகங்கள் எல்லாவற்றிற்கும் மொண்டு வார்த்தாள்.

௨௧. அந்த மனிதன் அவளைக்குறித்து ஆச்சரியப்பட்டுத் தன்பிரயாணத்தை யெகோவா அனுகூலப்படுத்தினரோ, இல்லையோவென்று அறியும் வண்ணம் மௌனமாயிருந்தான்.

௨௨. ஒட்டகங்கள் குடித்தொழிந்த பின், அந்த மனிதன் அரை ஷேக்கல் எடைகொண்ட பொற்ருேங்கணியையும் அவள் கைக்குப் பத்து ஷேக்கல் எடைகொண்ட இரண்டுபொற் சரிகளையும் எடுத்து,

௨௩. நீ ஆருடைய மகள்? அதை எனக்குச் சொல்லு; நாங்கள் உன் பிதாவின் வீட்டில்

இராத் தங்குவதற்கு இடமுண்டா என்றான்.

உச. அதற்கு அவள், நான் நாகோருக்கும் மில்க்காளுக்கும் புத்திரனாகிய பெத்துவேலின் மகள் என்று சொன்னது மன்றி,

உரு. எங்களிடத்தில் வைக்கோலும், உணவும், வேண்டிய அளவும் இருக்கின்றன. இராத் தங்குவதற்கு இடமும் உண்டென்றாள்.

உசூ. அந்த மனிதன் தலைவணங்கி யெகோவாவைத் தொழுதுகொண்டு,

உஎ. எனது பிரயாணத்திலே யெகோவா என்னை என் எசமானனுடைய வீட்டிற் சேர்வித்தார். அவர் என் எசமானனுக்குத் தயையுஞ் சத்தியமுங் காட்டுவதில் ஒழியவில்லை. என் எசமானன் ஆபிரகாமின்தேவனாகிய யெகோவா ஸ்தோத்திரிக்கப்படக் கடவரென்றான்.

உஅ. அந்தக் கன்னிகை ஓடித் தன் மாதாவின் வீட்டிலுள்ளவர்களுக்கு நடந்த காரியங்களை அறிவித்தாள்.

உகூ. ரிபெக்காளுக்கு ஒரு சகோதரன் இருந்தான். அவனுக்கு லாபான் என்றுபேர். அந்த லாபான் கிணற்றின் அருகே இருந்த அந்த மனிதனிடத்திற்கு ஓடினான்.

நய. அவன் தன் சகோதரி தரித்திருந்த அந்தத் தோங்கணியையும், அவள் கைகளில் இருந்த சரிகளையும் பார்த்து, அந்த மனிதன் எ

ன்னுடனே இப்படிப் பேசினனென்று தன் சகோதரி ரிபெக்காள் சொன்ன வார்த்தைகளைக் கேள்விப்பட்டமாத்திரத்தில், கிணற்றின் அருகே ஒட்டகங்களுக்குப் பக்கத்தில் நின்ற அந்த மனிதனிடத்திற் போய்ச் சேர்ந்து,

௩௧. யெகோவாவினால் ஆசீர்வதிக்கப்பட்டவனே, உள்ளே வா. நீ வெளியே நிற்கிறதென்ன? உனக்கு வீடும், ஒட்டகங்களுக்கு இடமும், நான் ஆயத்தம்பண்ணியிருக்கிறேனென்று சொல்ல,

௩௨. அந்த மனிதன் அவன் வீட்டிற் போனான். அவன் ஒட்டகங்களின் கட்டவிழ்த்து ஒட்டகங்களுக்கு வைக்கோலையும், உணவையுமிட்டு, இவனுடைய பாதங்களையும், இவனோடிருந்த மனிதரின் பாதங்களையுஞ் சுத்திசெய்வதற்குத் தண்ணீரைக் கொடுத்தான்.

௩௩. பின்பு தனக்கு முன்பாகப் போசனம் வைக்கப்பட்டபொழுது, இவன், நான் நினைத்துவந்த காரியத்தைச் சொல்லுமுன்னே புசிக்கமாட்டேனென்றான். அதற்கு அவன், சொல்லுமென்றான்.

௩௪. இவன் நான் ஆபிரகாமுடைய பணிவிடைக்காரன். யெகோவா என் எசமானனை மிகவும் ஆசீர்வதித்தார். அவன் பெரியவனானான்.

௩௫. யெகோவா அவனுக்கு ஆடுமாடுகளை

யும், வெள்ளியையும், பொன்னையும், பணி விடைக்காரரையும், பணிவிடைக்காரிகளை யும், ஒட்டகங்களையும், கழுதைகளையும் கொ டுத்திருக்கிறார்.

௩௬. அல்லாமலும் என் எசமானனுடைய மனைவியாகிய சாராள் முதிர்ந்த வயதானபொ ழுது, என் எசமானனுக்கு ஒரு புத்திரனைப் பெற்றாள். அவர் தமக்குண்டான யாவையு ம் அவனுக்குக் கொடுத்திருக்கிறார்.

௩௭. மேலும் அவர் என்னை நோக்கி, நான் சஞ்சரித்து வருகிற கானான் தேசத்தில் உள்ள வர்களின் குமாரத்திகளில், நீ என் குமாரனு க்குப் பெண்கொள்ளாமல்,

௩௮. என் பிதாவின் வீட்டிற்கும், என் உ றவின்முறையார் இடத்திற்கும், நீ போய், எ ன் குமாரனுக்குப் பெண் கொள்வாயாகவே ன்று சொல்லி, என் எசமானன் என்னிடத்தி ற் சத்தியம்பண்ணுவித்துக்கொண்டார்.

௩௯. அந்தக் கன்னிகை என் பின் வரா தே போனாலோ என்று என் எசமானனுட னே நான் சொன்னதற்கு,

௪௰. அவர் என்னை நோக்கி, நான் வழிபடு ம் யெகோவா தம்முடைய தூதனை உன்னு டனே அனுப்பி, உன் பிரயாணத்தை அனுகூ லப்படுத்துவார். என் உறவின்முறையாரிட

த்திலும், என் பிதாவின் வீட்டிலும், நீ என் குமாரனுக்கு ஒரு பெண்கொள்ளு.

சக. அவர்கள் உனக்குக் கொடாமலிருந்தாலும் ஆணைக்கு நீங்கலாய் இருப்பாய். நீ என் உறவின் முறையாரிடத்துக்குப் போனதுண்டானால், இவ்வாணைக்கு நீங்கலாய் இருப்பாயென்று சொன்னார்.

சஉ. நான் இன்று கிணற்றின் அருகில் வந்து, என் எசமானனாகிய ஆபிரகாமுடையதேவனான யெகோவாவே, என் பிரயாணத்தை நீர் இப்பொழுது அனுகூலப்படுத்தச் சித்தமானால்,

சங. என் எசமானனுடைய குமாரனுக்கு யெகோவா நியமித்த ஸ்திரி, நான் கிணற்றின் அருகே நிற்கையில், தண்ணீர் மொண்டுகொள்ள வரவும், நான் பானம்பண்ண, உன் குடத்தில் இருக்கிற தண்ணீரிற் கொஞ்சம் எனக்குத் தாவென்று கேட்க ;

சச. நீ பானம்பண்ணென்றும், உன் ஒட்டகங்களுக்கும் மொண்டு வார்ப்பேன் என்றும் என்னுடன் சொல்லும்படி அருள் செய்யும் என்றேன்.

சரு. இப்படி நான் சிந்தித்துக்கொண்டிருக்கையில், ரிபெக்காள் தன் குடத்தைத் தன் தோளின் மேல் வைத்துக்கொண்டவளாய்ப் புறப்பட்டுக் கிணற்றிலே வந்து மொண்டாள்.

நான் பானம்பண்ணத் தாவென்று இவளு டனே சொன்னேன்.

சகூ. இவள் தீவிரமாய்த் தன் குடத்தை இறக்கிப் பானம் பண்ணும். உமது ஒட்ட கங்களுங் குடிக்க மொண்டு வார்ப்பேன் என் று சொன்னாள். நான் பானம்பண்ணினேன். ஒட்டகங்களுங் குடிக்க வார்த்தாள்.

சஎ. நீ ஆருடைய குமாரத்தியென்று அவ ள் இடத்திற்கேட்க, அவள் மில்க்காளுக்கும், நாகோருக்கும் புத்திரனான பெத்துவேலினு டைய மகள் என்றாள். நான் அவளுடைய முகத்தில் தொங்கணியையும், அவள் கைக ளிற் சரிகளையும் இட்டு,

சஅ. தலை வணங்கி யேகோவாவைத்தொ ழுது, என்எசமானனுடைய குமாரனுக்கு அ வனுடைய சகோதரனின் குமாரத்தியைச் சேர்க்கும்படி என்னைச் செவ்வையான வழி யில் நடத்தினவரும், என் எசமானன் ஆபிர காமின் தேவனுமாகிய யேகோவாவைத் துதி த்தேன்.

சகூ. நீங்களும் என் எசமானனுக்குத் த யையும் உண்மையுமுடையவர்களாய் நடக் க மனதுள்ளவர்களானால் எனக்குச் சொல்லு ங்கள். இல்லையென்றால், அதையுஞ் சொல் லுங்கள். நான் வலப்புறத்தையாவது, இடப்

புறத்தையாவது, நோக்கிப் போவேன் என்றான்.

ருய. அதற்கு லாபானும் பெத்துவேலும், உத்தரமாக நடந்த காரியம் யெகோவாவினுலாயிற்று. ஆதலால் நாங்கள் உன்னுடனே இதற்கு மாறாக நன்மை தீமையொன்றுஞ் சொல்லக் கூடாது.

ருக. ரிபெக்காள் உனக்கு முன்பாக இருக்கிறாள்; அழைத்துக்கொண்டுபோ. யெகோவா சொன்னபடி இவள் உன்னுடைய எசமானனின் குமாரனுக்கு மனைவியாகக் கடவள் என்றார்கள்.

ருஉ. ஆபிரகாமுடைய பணிவிடைக்காரன் அவர்கள் வாக்குகளைக் கேட்டபொழுது, பூமிக்கு நேராய்த் தாழ்ந்து, யெகோவாவைத் தொழுது கொண்டான்.

ருரு. பணிவிடைக்காரன் வெள்ளியுடைமைகளையும், பொன்னுடைமைகளையும், வஸ்திரங்களையும் எடுத்து ரிபெக்காளுக்குக் கொடுத்த பின்பு, அவளுடைய சகோதரனுக்கும், மாதாவுக்கும், சில விசேஷித்த பொருள்களைக் கொடுத்தான்.

ருச. அவனும் அவனோடிருந்த மனிதரும் போசன பானம்பண்ணி, இராத் தங்கினார்கள். காலையில் எழுந்த பின், அவன் என் எச

மானனிடத்துக்கு என்னை அனுப்பி விடுங்க
ள் என்றான்.

௫௫. அவளுடைய சகோதரனும், மாதா
வும், பெண் இன்னும் பத்துநாளாகிலும் எ
ங்களுடனே இருக்கட்டும். பின்பு போகலா
மென்றார்கள்.

௫௬. அதற்கு அவன் அவர்களிடத்தில்,
யேகோவா என் பிரயாணத்தை அனுகூலப்
படுத்தினபடியால் எனக்குத் தடைசெய்யாதி
ருப்பீர்களாக. என் எசமானனிடத்துக்குப்
போம்படி என்னை அனுப்பி விடவேண்டுமெ
ன்று சொன்னான்.

௫௭. அவர்கள் பெண்ணைக் கூப்பிட்டு, அ
வளிடத்திற் கேட்போமென்று சொல்லி,

௫௮. ரிபெக்காளை அழைத்து நீ இந்த மனி
தனுடனே போகிறாயா என்றதற்கு, அவள்
போகிறேனென்றாள்.

௫௯. அவர்கள் தங்கள் சகோதரியாகிய ரி
பெக்காளை நோக்கி,

௬௰. எங்கள் சகோதரியே, நீ ஆயிரம் பதி
னாயிரம் பேருக்கு மாதாவாய் இருக்கக்கட
வாய். உன் சந்ததியார் தங்கள் பகைஞருடை
ய வாசல்களைச் சுதந்தரித்துக் கொள்ளக் கட
வர்களென்று வாழ்த்தி, ரிபெக்காளையும், அவ
ள் தாதியையும், ஆபிரகாமின் பணிவிடைக்

காரனையும், அவன் மனிதரையும் அனுப்பி விட்டார்கள்.

சூக. ரிபேக்காளும், அவளுடைய பணி விடைக்காரிகளும் எழுந்து, ஒட்டகங்கள் மேலேறி, அந்த மனிதனைப் பின் சென்றார்கள். அப்பணிவிடைக்காரன் ரிபேக்காளைக் கூட்டிக்கொண்டு போனான்.

சூஉ. ஈசாக்கு, தென்தேசத்திற் சஞ்சரித்திருக்கிறபடியால், இலகாய்ரோய் என்னுங் கிணற்றின் வழியாய் நடந்து வந்தான்.

சூஙூ. சாயங்காலத்தில் ஈசாக்கு தியானம் பண்ணும்படிக்கு வெளியிலே புறப்பட்டு வந்து, கண்களை ஏறிட்டுப் பார்த்தபொழுது, ஒட்டகங்கள் வரக் கண்டான்.

சூச. ரிபேக்காளும் பார்வை செலுத்திப் பார்த்து ஈசாக்கைக் கண்டபொழுது,

சூரு. அங்கே வெளியிலே நமக்கு எதிரே நடந்து வருகிறவர் யாரென்று பணிவிடைக்காரனிடத்திற் கேட்க; அவர் தாம் என் எசமானனென்று பணிவிடைக்காரன் சொன்னபொழுது, அவள் ஒட்டகத்தை விட்டு இறங்கி, முக்காடிட்டுக் கொண்டாள்.

சூசூ. பணிவிடைக்காரன் தான்செய்த சகல காரியங்களையும் ஈசாக்குக்கு விவரித்துச் சொன்னான்.

கூஎ. ஈசாக்கு ரிபெக்காளைத் தன் மாதாவாகிய சாராளுடைய கூடாரத்துக்கு அழைத்துப் போனான். அவன் அவளைத் தனக்கு மனைவியாகக் கொண்டு, அவள்மேல் அன்பாய் இருந்தான். ஈசாக்கு தன் மாதாவின்மேற் கொண்ட துக்கம் நீங்கி ஆறுதலடைந்தான்.

## உரு. அதிகாரம்.

*க. கேத்தூராள் என்பவள் வழியாய் வந்த ஆபிரகாமின் வமிசவரலாறு. அவன்மரித்து அடக்கம்பண்ணப்படல் : யக. ஈசாக்கைத் தேவன் ஆசீர்வதித்தல் : யஉ. இஷ்மாவேலின் வமிசவரலாறும் அவன் மரணமும் : யகூ. ஈசாக்குக்கு இரட்டைப் பிள்ளை பிறத்தல் : உஎ. ஏசாவு யாக்கோபென்னுமிவர்களுடைய தொழில் : உகூ. ஏசாவு தன் சேஷ்ட புத்திர அதிகாரத்தைத் தன் தம்பிக்கு விற்றல்.*

க. மேலும் ஆபிரகாம் கேத்தூராள் என்னும் பேர்கொண்ட ஸ்திரியையும் விவாகம் பண்ணியிருந்தான்.

உ. அவள் அவனுக்குச் சிம்ரானையும், யக்ஷானையும், மேதானையும், மீதியானையும், இஸ்பாக்கையும், ஷூகாவையும், பெற்றாள்.

ந. யக்ஷான் ஷேபாவையும், தேதானையும் பெற்றான். தேதானுடைய புத்திரர்கள் அஷூரீம், லெத்தூஷீம், லெயூமீம் என்பவர்கள்.

ச. மீதியானுடைய புத்திரர்கள் எப்பா, எப்பேர், ஆனேக், ஆபிதா, எல்தா என்பவர்கள். இவர்களெல்லாரும் கேத்தூராளின் சந்ததியார்.

ரு. ஆபிரகாம் தனக்குண்டானயாவையும் ஈசாக்குக்குக் கொடுத்தான்.

சு. வைப்பாட்டிகள் ஆபிரகாமுக்குப் பெற்ற பிள்ளைகளுக்கோ, ஆபிரகாம் தான் உயிரோடிருக்கையில், நன்கொடைகள் கொடுத்து அவர்களைத் தன் புத்திரனுகிய ஈசாக்கைவிட்டகல, கிழக்கே கீழ்த்தேசத்துக்கு அனுப்பிவிட்டான்.

எ. ஆபிரகாமின் ஆயுசுநாள்கள் நூற்றெழுபத்தைந்து வருஷம்.

அ. இப்படி ஆபிரகாம் வயது முதிர்ந்த விருத்தனும், பூரண ஆயுசுள்ளவனுமாய்ப் பிராணனை விட்டு, மரித்துத் தன் சனங்களுடனே சேர்க்கப்பட்டான்.

கூ. அவன் புத்திரராகிய ஈசாக்கும், இஷ்மாவேலும், எத்தியனுகிய சோகாரின் புத்திரன் எப்பிரோனுடைய நிலமாகிய மக்பேலாவிலுள்ள குகையில், அவனை அடக்கம்பண்ணினார்கள்.

ய. மம்ரேக்கு எதிரேயுள்ள அந்த நிலத்தை எத்தின் புத்திரரிடத்தில் ஆபிரகாம் வாங்கியி

ருந்தான்; அவ்விடத்தில் ஆபிரகாமும், அவன் மனைவி சாராளும், அடக்கம்பண்ணப்பட்டார்கள்.

௰க. ஆபிரகாம் மரணமடைந்தபின் தேவன் அவன் புத்திரனாகிய ஈசாக்கை ஆசீர்வதித்தார். லாகாயரோய் என்ற கிணற்றுக்குச் சமீபமாய் ஈசாக்கு வசித்தான்.

௰உ. சாராளுக்கு அடிமையும் எகிப்தியாளுமாகிய ஆகார் ஆபிரகாமுக்குப் பெற்ற புத்திரன் இஷ்மாவேலின் வமிசவரலாறும்,

௰௩. அவ் வமிச வரலாற்றின்படி இஷ்மாவேலின் புத்திரருடைய நாமங்களுமாவன; இஷ்மாவேலின் மூத்தமகன் நெபாயோத், பின்பு கேதார், அத்பியேல், மிப்சாம்,

௰௪. மிஷ்மா, தூமா, மாசா, ஆதாத், தேமா, எத்தூர், நாபீஷ், கேத்மா.

௰௫. இவர்கள் இஷ்மாவேலின் புத்திரர்.

௰௬. தங்கள் தங்கள் கிராமங்களிலும், அரணங்களிலும், வழங்கிவரும் நாமங்கள் இவையே. இப்பன்னிருவருந் தங்கள் தங்கள் சாதிகளுக்குப் பிரபுகள்.

௰எ. இஷ்மாவேல் நூற்று முப்பத்தேழு வயதில் பிராணனைவிட்டு மரித்துத் தன் சனங்களுடனே சேர்க்கப்பட்டான்.

௰அ. அவன் தன் சகோதரரேல்லாருக்கும்

முன்பாக இறந்தான். அவர்கள் அபிலா என்னுந் தேசமுதல், எகிப்துக்கு எதிராக அஷூருக்குப்போகிற வழியிலுள்ளஷூர்மட்டும் வாசம் பண்ணினார்கள்.

௰௯. ஆபிரகாமின் புத்திரனாகிய ஈசாக்கினுடைய வமிசவரலாறு. ஆபிரகாம் ஈசாக்கைப்பெற்றான்.

௨௰. பாதானாராம் என்னுந் தேசத்திலிருந்த ஷீரியாவின் பெத்துவேலுக்குப் புத்திரியும், ஷீரியாவின் லாபானுக்குச் சகோதரியுமாயிருந்த ரிபெக்காளை ஈசாக்கு விவாகம்பண்ணினபொழுது, அவனுக்கு நாற்பது வயது.

உக. தன் மனைவி மலடியானபடியால் ஈசாக்கு அவளைக் குறித்து யெகோவாவை நோக்கிப் பிரார்த்தனைபண்ணினான். அவன்பண்ணின பிரார்த்தனையை யெகோவா கேட்டு அருள்செய்தார். பின்பு அவன் மனைவியாகிய ரிபெக்காள் கருப்பவதியானாள்.

உஉ. சிசுக்கள் தன் வயிற்றில் ஒன்றோடொன்று நெருக்குண்ணும் பொழுது, அவள் அப்படியானால், எனக்கிப்படியிருப்பானேனென்று சொன்னாள். மேலும் யெகோவாவினிடத்திற்போய் உசாவினாள்.

உ௩. யெகோவா அவளை நோக்கி, இரண்டு சாதி உன் கருப்பத்திலிருக்கின்றன. இருவ

கைச் சனம் உன் உதரத்திலிருந்து வரும்; அவற்றில் ஒருவகைச் சனம் மற்றவகைச் சனத்திலும் பலங்கொண்டிருக்கும். மூத்தவன் இளையவனிடத்தில் சேவிப்பானென்று சொன்னர்.

உச. பிரசவகாலம் பூரணமான பொழுது அவளுடைய கருப்பத்தில் நின்றும் இரட்டைப் பிள்ளைகள் தோன்றின.

உரு. மூத்தவன் செந்நிறமுள்ளவனும், சருவாங்கமும் மயிருள்ள ஆடையைப்போலிருப்பவனுமாய்ப் பிறந்தான். அதினல் அவனுக்கு ஏசாவென்று பேரிட்டார்கள்.

உசூ. பின்பு அவன் சகோதரன் தன் கையினலே ஏசாவின் குதிங்காலைப் பிடித்துக்கொண்டு பிறந்ததினல், அவனுக்கு யாக்கோபென்று பேரிட்டார்கள். இவர்களை அவள்பெற்றபொழுது ஈசாக்குக்கு அறுபது வயது.

உஎ. பாலகராகிய அவர்கள் பெரியவர்களானபின்பு, ஏசா வேட்டையில் நிபுணனும் வனவாசியுமாயிருந்தான். யாக்கோபு சாதுள்ளவனும் கூடாரவாசியுமானன்.

உஅ. ஈசாக்கு தன்னுடைய வாய்க்கு உருசியானதை ஏசாவு வேட்டையாடிக்கொண்டு வருவதினலே அவன்மேற் பட்சமாயி

ருந்தான். ரிபெக்காள் யாக்கோபின்மேற் பட்சமாயிருந்தாள்.

உகூ. ஏசாவு வெளியிலிருந்து இளைப்பாய் வந்தபொழுது, யாக்கோபு கூழைச் சமைத்துக்கொண்டிருந்தான்.

௩௰. அதைக் கண்டு ஏசாவு யாக்கோபை நோக்கி, எனக்கிளைப்புண்டாயிருக்கிறது; இந்தச் சிவந்த உணவிலே நான் புசிக்கக் கொஞ்சந் தாவென்று சொன்னான். இதினாலே அவனுக்கு ஏதோம் என்றும் பேராயிற்று.

௩க. யாக்கோபு உன் சேஷ்ட புத்திர அதிகாரத்தை இன்று விலையாகத் தாவென்று சொன்னான்.

௩உ. அதற்கு ஏசாவு நான் மரிக்கிறேன்; இந்தச் சேஷ்ட புத்திர அதிகாரத்தினால் எனக்கு என்ன லாபமென்று சொன்னான்.

௩௩. அப்பொழுது யாக்கோபு, இன்று எனக்கு ஆணையிட்டுக் கொடு என்றான். அவன் இவனுக்கு ஆணையிட்டுத் தன் சேஷ்டபுத்திர அதிகாரத்தை யாக்கோபுக்கு விற்றான்.

௩௪. யாக்கோபு ஏசாவுக்கு அப்பத்தையும் பயற்றங் கூழையுங் கொடுத்தான். அவன் போசனபானம்பண்ணி எழுந்து போனான். இப்படி ஏசாவு தன் சேஷ்ட புத்திர அதிகாரத்தை அலட்சியம்பண்ணினான்.

## உசு. அதிகாரம்.

க. பஞ்சத்தினிமித்தம் ஈசாக்குக் கேராரிலே போயிருக்கையில் தன் மனைவியைத் தன் சகோதரியெனல்: யஉ. செல்வத்தை மிகப்பெறல்: யஎ. கிணற்றின் நிமித்தம் பணிவிடைக்காரருக்கு விவாதமுண்டாதல். பேர்ஷேபாவில் வசித்தல்: உரு. ஈசாக்குடன் அபிமேலேக்கு உடன்படிக்கை செய்தல்: ௬உ. ஆணைக்கிணறு தோண்டல்: ௬ச. ஏசாவின் விவாகத்தினிமித்தம் அவன் பிதாமாதா விசனமடைதல்.

க. முன்னே ஆபிரகாமின் நாள்களிலே உண்டான பஞ்சமேயன்றிப் பின்னும் ஒரு பஞ்சம் தேசத்தில் உண்டானபோழுது, ஈசாக்கு, பெலிஸ்தருக்கு இராசனாகிய அபிமேலேக்கினிடத்தில் கேராருக்குச் சென்றான்.

உ. யெகோவா அவனுக்குத் தரிசனையாகி அவனை நோக்கி, நீ எகிப்துக்குப் போகாதே; நான் உனக்குச் சொல்லுந் தேசத்திலே வாசம்பண்ணு.

௩. இந்தத் தேசங்கள் யாவையும், உனக்கும், உன் சந்ததிக்கும் நான் தந்து, உன் பிதாவாகிய ஆபிரகாமுக்கு நான் இட்ட ஆணையை நிறைவேற்றுவேன்; ஆதலால் இத்தேசத்திலே தங்கியிரு; நான் உன் பட்சமாயிருந்து உன்னை ஆசீர்வதிப்பேன்.

ச. ஆபிரகாம் என் வாக்குக்கமைந்து, என் கட்டளைகளையும், நியாயப்பிரமாணங்களையும், நியமங்களையும், வேதப்பிரமாணங்களையுங் கைக்கொண்டு நடந்தபடியால்,

ரு. நான் உன் சந்ததியை வானத்தின் நட்சத்திரங்களைப் போலப் பெருகப்பண்ணி, உன் சந்ததிக்கு இத் தேசங்கள் யாவையுங் கொடுப்பேன். உன் சந்ததியினாலே பூமண்டலத்திலுள்ள சமஸ்த சாதியாரும், ஆசீர்வதிக்கப்படுவார்களென்று சொன்னார்.

சூ. ஈசாக்கும் கேராரில் வாசம்பண்ணினான்.

எ. அவ்விடத்து மனிதர்கள் அவனுடைய மனைவியைக் குறித்து விசாரித்தார்கள். ரிபெக்காள் கண்ணுக்கு அழகுள்ளவளானபடியால் அவ்விடத்து மனிதர் அவள் நிமித்தம் தன்னைக் கொல்லுவார்களென்றெண்ணி, அவளைத் தன் மனைவியென்று ஈசாக்கு சொல்லப் பயந்து, அவள் என் சகோதரியென்றுசொன்னான்.

அ. அவன் அங்கே நெடுநாளாகத் தங்கி வருகையில், பெலிஸ்தருக்கு இராசனாகிய அபிமேலேக்கு, பலகணிவழியாய் ஈசாக்குத் தன் மனைவியாகிய ரிபெக்காளுடனே சரசஞ்செய்யக் கண்டான்.

கூ. அபிமேலேக்கு ஈசாக்கை அழைத்து, நிச்சயமாக அவள் உன் மனைவி. அப்படியிரு க்க, அவள் உன் சகோதரியென்று சொன்ன தென்னவென்றான். அதற்கு ஈசாக்கு அவள் நிமித்தம் எனக்கு மரணம் வராதபடிக்கு இ ப்படிச் சொன்னேனென்றான்.

ய. அபிமேலேக்கு எங்களிடத்தில் எதைக் கண்டு நீ இதைச் செய்தாய்? சனங்களுக்கு ள் ஆராகிலும் எளிதாய் உன் மனைவியுடனே சயனிக்கவும், உன் மூலமாக எங்களுக்குக் குற்றம்வரவும், கூடியதாயிருந்ததேயென்று சொன்னான்.

யக. அபிமேலேக்கு இந்தப் புருஷனையாகி லும் இவன் மனைவியையாகிலுந் தொடுகிறவ னெவனோ, அவன் நிச்சயமாய்க் கொலைசெய் யப்படுவானென்று எல்லாச் சனங்களுக்குங் கட்டளையிட்டான்.

யஉ. ஈசாக்கு அந்தத் தேசத்தில் விதைத்து, அவ்வருஷத்தில் நூறுமடங்கு பலனை அடை ந்தான்; யேகோவா அவனை ஆசீர்வதித்து வந் ததினால் அந்த மனிதன் மேன்மைபெற்று,

யரு. மிகவும் ஐசுவரியவானாகி, வரவர மி கவும் பெரியவனானான்.

யச. ஆட்டுக்கூட்டங்களும், மாட்டுக்கூட் டங்களும், அநேகம் பணிவிடைக்காரரும்

உடையவனுயிருக்கக்கண்டு, பெலிஸ்தர் அவன் மேற் பொருமை கொண்டார்கள்.

௰௫. அதினல் அவனுடைய பிதாவாகிய ஆபிரகாமின் நாள்களில் அவனுடைய பணிடைக்காரர் தோண்டின கிணறுகள் யாவையும் மண்ணினலே நிறைத்துத் தூர்த்து விட்டார்கள்.

௰௬. அபிமேலேக் ஈசாக்கினிடத்தில், எங்களிலும் நீ அதிக பலவானுய் இருக்கிருய்; ஆகையால் எங்களைவிட்டுப் போய்விடு என்று சொன்னன்.

௰௭. ஈசாக்கு அவ்விடம் விட்டுப் புறப்பட்டு கேராரின் தாழ்ந்த பூமியிலே கூடாரம்போட்டு அங்கே வாசம் பண்ணி,

௰௮. தன் பிதாவாகிய ஆபிரகாமுடைய நாள்களில் தோண்டப்பட்டவைகளும் ஆபிரகாம் மரணம் அடைந்த பின் பெலிஸ்தியரால் தூர்க்கப்பட்டவைகளுமான நீருள்ள கிணறுகளைத் திரும்பவுந் தோண்டி, தன் பிதா அவைகளுக்கிட்டிருந்தபேர்களையே அவைகளுக்குத் தானும் இட்டான்.

௰௯. ஈசாக்கின் பணிவிடைக்காரர் பின்னுந் தாழ்ந்த பூமியில் தோண்டி அங்கே நீர் சுரக்கும் ஊற்றுக் கண்ணைக் கண்டார்கள்.

உ௰. கேராரின் மேய்ப்பர் இந்த நீரூற்று எ

ங்களுடையதென்று சொல்லி ஈசாக்கின் மேய்ப்பருடனே வாக்குவாதம் பண்ணினார்கள். தன்னுடனே அவர்கள் வாக்கு வாதம் பண்ணினபடியால் அந்தக் கிணற்றுக்கு ஏசேக்கென்று பேரிட்டான்.

உக. வேறும் ஒரு கிணற்றைத் தோண்டினார்கள். அதற்காகவும் வாக்குவாதம்பண்ணினார்கள். ஆகையால் அதற்குச் சித்னாவென்று பேரிட்டான்.

உஉ. பின்பு அவ்விடத்தை விட்டுப் பெயர்ந்து போய் வேறும் ஒரு கிணற்றைத் தோண்டினான். அதற்கு அவர்கள் வாக்குவாதம் பண்ணாமல் இருந்தார்கள். அவன், இப்பொழுது யெகோவா நமக்கு இடம் அருளினார்; இத்தேசத்தில் நாம் பலுகியிருப்போம் என்று சொல்லி அதற்கு ரேகோபோத்தென்று பேரிட்டான்.

உ௩. அங்கேயிருந்து பேர்ஷேபாவுக்குப் போனான்.

உச. அன்றிரவிலே யெகோவா அவனுக்குத் தரிசனையாகி, நான் உன் பிதாவாகிய ஆபிரகாமுடைய தேவன். பயப்படாதே. நான் உன் பட்சமாயிருந்து, என் தாசனாகிய ஆபிரகாமின் நிமித்தம் உன்னை ஆசீர்வதித்து, உன் சந்ததியைப் பெருகப் பண்ணுவேன் என்றார்.

உரு. அங்கே அவன் வேதிகையை உண்டாக்கி, யேகோவாவுடைய நாமத்தைச் சொல்லிப் பிரார்த்தனை பண்ணினான். அவ்விடத்திலேயுந் தன் கூடாரத்தைப் போட்டான். ஈசாக்கின் பணிவிடைக்காரர் அங்கே ஒரு கிணற்றைத் தோண்டினார்கள்.

உசு. அபிமேலேக்கும் அவன் சிநேகிதரில் ஒருவனாகிய அகூசாத்தும் அவன் சேனாதிபதியாகிய பீகோலும் கேராரில் இருந்து அவ்விடத்துக்கு வந்தார்கள்.

உஎ. அவர்களை நோக்கி, ஈசாக்கு எதற்காக என்னிடத்தில் வந்தீர்கள்? நீங்கள் என்னைப் பகைத்து உங்களைவிட்டு நீங்கள் என்னை அனுப்பினீர்களேயென்று சொன்னான்.

உஅ. யேகோவா உமது பட்சமாயிருக்கிறாரென்று கண்டோம். நீர் யேகோவாவினால் ஆசீர்வதிக்கப்பட்டவர்.

உகூ. நாங்கள் உம்மைத் தொடாமல், நன்மையையே உமக்குச் செய்து உம்மைச் சமாதானத்துடனே அனுப்பிவிட்டபிரகாரம், நீரும், எங்களுக்குத் தீங்கு செய்யேன் என்பதற்கு, இருதிறத்தாராகிய நாம் ஒராணையிட்டுக் கொள்ளவும், உம்மோடே நாங்கள் ஒரு உடன்படிக்கையைச் செய்யவும் கருதி வந்தோம் என்று சொன்னார்கள்.

௩௰. அவன் அவர்களுக்குவிருந்துசெய்தான். அவர்கள் போசன பானம் பண்ணினார்கள்.

௩௧. அதிகாலையில் எழுந்து ஒருவருக்கொருவர் ஆணையிட்டுக்கொண்டார்கள். பின்பு ஈசாக்கு அவர்களை அனுப்பி விட்டான். அவர்கள் சமாதானத்துடனே அவனை விட்டுப் போனார்கள்.

௩௨. அந்நாளிலே ஈசாக்கின் பணிவிடைக்காரர் வந்து தாங்கள் தோண்டின கிணற்றின் செய்தியை அவனுக்கு அறிவித்துச் சலத்தைக் கண்டோமென்றார்கள்.

௩௩. அதற்கு ஷேபாவென்று பேரிட்டான்; ஆகையால் இந்நாள் வரைக்கும் அவ்வூர் பேர் ஷேபாவென்று பெயர் சொல்லப்பட்டு வருகின்றது.

௩௪. ஏசா நாற்பதாம் வயதிலே எத்தியனான பேயேரினுடைய குமாரத்தியாகிய யுத்தீத்தையும், எத்தியனான ஏலோனுடைய குமாரத்தியாகிய பஸ்மாத்தையும் விவாகம்பண்ணினான்.

௩௫. அவர்களாலே ஈசாக்கு ரிபேக்காள் என்பவர்களுக்கு மனக் கசப்புண்டாயிற்று.

# உஎ. அதிகாரம்.

க. மான் இறைச்சிக்காக ஈசாக்கு ஏசாவை அனுப்பல் : ரு. ரிபெக்காள் யாக்கோபுக்குத் துர்ப்புத்திசொல்லல் : யச. யாக்கோபு தனக்கு ரிபெக்காள் சொன்ன துர்ப்புத்தியினால் தன் பிதாவாகிய ஈசாக்கினிடத்திற் சூதாக ஆசீர்வாதம் பெறல் : ௩ய. மானிறைச்சியோடே வந்து ஏசாவு தன் பிதாவிடத்தில் ஆசீர்வாதம் வேண்டி, அது பெறுமையால் வருந்தல் : சக: ஏசாவு கோபங்கொண்டு யாக்கோபைக் கொலைசெய்ய எண்ணல்.

க. ஈசாக்கு விருத்தனாகிக் கண்கள் இருள் அடைந்ததினால் பார்வையற்றவனானான். அவன் தன் மூத்த குமாரனாகிய ஏசாவை என் மகனே, என்றழைத்தான். அதற்கு அவன் என்னவென்று கேட்க,

உ. அவன் நான் விருத்தனானேன். என் மரண நாளை அறியேன்.

௩. ஆதலால் நீ உன் ஆயுதங்களையும், அம்புக்கூட்டையும், வில்லையும் எடுத்துக்கொண்டு வெளிக்குப் போய், எனக்காக வேட்டையாடிவந்து;

ச. எனக்குப் பிரியமான சுவையுள்ள போசனத்தைச் சமைத்து, நான் புசிக்கவும், நான் மரணம் அடையுமுன்னே, என் ஆத்தும

ம் உன்னை ஆசீர்வதிக்கவும், என்னிடத்திற் கொண்டுவாவென்றான்.

ரு. ஈசாக்குத் தன் புத்திரனாகிய ஏசாவுக்குச் சொன்னதை ரிபெக்காள் கேட்டிருந்தாள். ஏசாவுவேட்டை யாடிக்கொண்டு வரும்படி வயல் வெளிக்குப் போனான்.

சூ. ரிபெக்காள் தன் புத்திரனாகிய யாக்கோபை நோக்கி, உன் பிதா உன் சகோதரனாகிய ஏசாவுடனே,

எ. நான் புசிக்கும்படி நீ வேட்டையாடிச் சுவையுள்ள போசனத்தைச் சமைத்துக்கொண்டு வாவென்றும், எனக்கு மரணம் வரு முன்னே யெகோவாவின் சந்நிதியில் உன்னை ஆசீர்வதிப்பேனென்றும் சொல்லக் கேட்டேன்.

அ. ஆதலால் என் மகனே, என் சொல்லைக் கேட்டு நான் இடும் கட்டளைப் பிரகாரஞ் செய்வாயாக.

கூ. நீ ஆட்டு மந்தைக்குப் போய் நல்லவெள்ளாட்டுக் குட்டிகள் இரண்டைக் கொண்டுவா; நான் அவைகளை உன் பிதாவுக்குப் பிரியமானபடி, சுவையுள்ள போசனமாகச் சமைப்பேன்.

ய. நீ அதை உன் பிதாவிடத்திற்குப் புசிக்கும்படி கொண்டுபோனால், அவர், தமக்கு

மரணம் வரு முன்னே, உன்னை ஆசீர்வதிப்பார் என்று சொன்னாள்.

௰க. அதற்கு யாக்கோபு தன் மாதாவாகிய ரிபெக்காளை நோக்கி, என் சகோதரனாகிய ஏசாவு உரோமமுள்ளவன் ; நான் உரோமம் இல்லாதவன்.

௰உ. என் பிதா என்னைத் தடவிப் பார்க்கவுங் கூடும். அப்பொழுது அவருக்கு நான் வஞ்சகனாய்த் தோன்றி ஆசீர்வாதத்தை அல்ல, சாபத்தையே என்மேல் வருவிப்பேன் என்று சொன்னான்.

௰௩. அவனுடைய மாதா என் மகனே, அந்தச் சாபம் என்மேல் வருவதாக. என் சொல்லை மாத்திரங் கேட்டு, நீ போய், என்னிடத்துக்குக் கொண்டுவாவென்று சொன்னாள்.

௰௪. அவன் போய்ப் பிடித்துத் தன் மாதாவிடத்திற் கொண்டுவந்தான். அவன் மாதா அவன் பிதாவுக்குப் பிரியமானபடி சுவையுள்ள போசனமாகச் சமைத்து,

௰௫. பின்பு ரிபெக்காள் வீட்டிலே தன்னிடத்தில் இருந்த தன் மூத்த மகனாகிய ஏசாவின் நல்ல வஸ்திரங்களை எடுத்துத் தன் இளைய மகனாகிய இயாக்கோபுக்கு உடுத்தி,

௰௬. வெள்ளாட்டுக் குட்டிகளின் தோல்களை அவன் கைகளிலேயும், உரோமம்

இல்லாத அவன் கழுத்திலேயும் இட்டு,

யஎ. தான் சமைத்த சுவையுள்ள போசன த்தையும், அப்பத்தையும், தன் புத்திரனுகிய யாக்கோபின் கையிலே கொடுத்தாள்.

யஅ. அவன் தன் பிதாவிடத்திற் சேர்ந்து, பிதாவே, என்று சொல்ல, இருக்கிறேன், என் மகனே, நீ யாரென்றான்.

யகூ. யாக்கோபு தன் பிதாவை நோக்கி, நா ன் உமது மூத்தமகனுன ஏசாவு. நீர் எனக்கு ச்சொன்னபடியே செய்தேன். உம்முடைய ஆத்துமம் என்னை ஆசீர்வதிக்கும் பொருட்டு நீர் எழுந்திருந்து, நான் வேட்டையாடிக்கொ ண்டு வந்ததைப் புசியுமென்று சொன்னான்.

உய. ஈசாக்கு, தன் புத்திரனுடனே, என் ம கனே, இது உனக்கு இத்தனை சீக்கிரமாய் எ ப்படி அகப்பட்டதென்று கேட்க; அவன் உ ம்முடைய தேவனுகிய யெகோவா எனக்கு நேரிடப் பண்ணினர் என்றான்.

உக. ஈசாக்கு யாக்கோபுடனே, என் மக னே, நீ என் புத்திரனுகிய எசாவுதானோ அல் லவோ என்று நான் உன்னைத் தடவிப் பார்க் கும்படி, சமீபித்து வாவென்று சொன்னான்.

உஉ. யாக்கோபு தன் பிதாவாகிய ஈசாக்கை ச் சமீபித்தான். அவன் இவனைத் தடவிப் பார்த்து, குரல், யாக்கோபினுடைய குரல்,

கைகள் ஏசாவினுடைய கைகள் என்று சொல்லியும்,

உரு. இவனுடைய கைகள் இவன் சகோதரனாகிய ஏசாவின் கைகளைப் போல உரோமம் உள்ளவைகளாய் இருந்தபடியால், இவனை அறியாமல் ஆசீர்வதித்தான்.

உச. அவன், நீ என் புத்திரனாகிய ஏசாவுதானோ என்றான். இவன், நான்தான் என்றான்.

உரு. அவன் என் குமாரனே, நீ வேட்டையாடிக் கொண்டுவந்ததை நான் புசித்து, என் ஆத்துமம் உன்னை ஆசீர்வதிக்கும்படி, அதை என் கிட்டக் கொண்டுவா என்றான். இவன் கிட்டக்கொண்டுபோக, அவன் புசித்தான். பின்னும் அவனுக்குத் திராட்ச ரசத்தைக் கொண்டுவந்து கொடுக்க, அவன் குடித்தான்.

உசு. இவன் பிதாவாகிய ஈசாக்கு, இவனுடனே, என் மகனே, நீ கிட்ட வந்து என்னை முத்தஞ்செய் என்று சொன்னான்.

உஎ. இவன் கிட்டப்போய் அவனை முத்தஞ் செய்தான். அவன் இவனுடைய வஸ்திரங்களின் வாசனையை, மோந்து, ஆ! என் புத்திரனுடைய வாசனை யெகோவாவின் ஆசீர்வாதம் பொருந்திய வயல் நிலத்தின் வாசனையைப்போல இருக்கின்றது.

உஅ. தேவன் வானத்திற் பனியோடே கொழுத்த பூமியையும், மிகுதியான தானியத்தையும், திராட்ச ரசத்தையும், உனக்கு அருளிச் செய்வாராக.

உகூ. பலவகைச் சனங்கள் உன்னிடத்திற் சேவிக்கவும், நாளு சாதிகளும் உன்னை வணங்கவுங் கடவர்கள். உன் சகோதரருக்குத் தலைவனாய் இருக்கக்கடவாய். உன் மாதாவின் புத்திரரும் உன்னை வணங்கக் கடவர்கள். உன்னைச் சபிக்கிறவன் ஒவ்வொருவனுஞ் சபிக்கப்படவும், உன்னை ஆசீர்வதிக்கிறவன் ஆசீர்வதிக்கப்படவுங் கடவர்கள் என்று சொல்லி, அவனை ஆசீர்வதித்தான்.

௩௰. ஈசாக்கு யாக்கோபை ஆசீர்வதித்து முடிந்தமாத்திரத்திலே, யாக்கோபு தன் பிதாவாகிய ஈசாக்கின் சமுகத்தை விட்டுப் புறப்படுகையில், அவன் சகோதரனாகிய ஏசாவு வேட்டையாடி வந்தான்.

௩க. அவனும் சுவையுள்ள போசனத்தைச் சமைத்து, தன் பிதாவினிடத்திற் கொண்டு வந்து, உம்முடைய ஆத்துமம் என்னை ஆசீர்வதிக்கும்படி என் பிதா எழுந்து உம்முடைய புத்திரனாகிய நான் வேட்டையாடிக் கொண்டு வந்ததைப் புசிப்பாராகவென்று தன் பிதாவை நோக்கிச் சொல்ல,

௩௨. அவன் பிதாவாகிய ஈசாக்கு, நீயார் என்ருன். நான் உமது மூத்த மகனுகிய ஏசாவு என்ருன்.

௩௩. ஈசாக்கு அதிக நடுக்கத்துடனே பதைபதைத்து, வேட்டையாடி ஒருவன் என்னிடத்திற் கொண்டுவந்த எல்லாவற்றிலும் நீ வரு முன்னே நான் புசித்தேன். அவன் எங்கே? அவன் யார்? அவனை ஆசீர்வதித்தேன். அவனே ஆசீர்வதிக்கப்பட்டவனுய் இருப்பான், என்ருன்.

௩௪. ஏசாவு தன் பிதாவின் வாக்குகளைக் கேட்டவுடனே மிகுந்த துக்கமாய் உரத்த சத்தத்தோடே அலறி, தன் பிதாவை நோக்கி, என் பிதாவே, என்னையும் ஆசீர்வதிக்கவேண்டும் என்று சொன்னுன்.

௩௫. அதற்கு அவன், உன் சகோதரன் சூதாய் வந்து, உனக்குரிய ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொண்டான் என்ருன்.

௩௬. அப்பொழுது அவன், இதனுடனே இரண்டுதரம் என்னை வஞ்சித்தான். என்சேஷ்டபுத்திர அதிகாரத்தையும் அபகரித்தான். இப்பொழுது எனக்குரிய ஆசீர்வாதத்தையும் பெற்றுக்கொண்டான். யாக்கோபு என்னும் நாமம் அவனுக்குத் தகும் அல்லவா என்று சொன்னதுமன்றி, என்னையும் ஆசீர்வதிப்பத

ற்கு இடம் இல்லையா என்றுஞ் சொன்னான்.

௩எ. ஈசாக்கு, ஏசாவுக்கு உத்தரமாக, நான் அவனை உனக்குத் தலைவனாக வைத்தேன். அவன் சகோதரர் எல்லாரும் அவனிடத்திற் சேவிக்க நியமித்து, தானியத்தையுந் திராட்ச ரசத்தையுங் கொடுத்து, அவனை ஆதரித்தேன். என் மகனே, இனி நான் உனக்கு என்ன செய்வேன் என்று சொன்னான்.

௩அ. ஏசாவு தன் பிதாவை நோக்கி, என் பிதாவே, இந்த ஒரே ஆசீர்வாதம் மாத்திர மோ உம்மிடத்தில் உள்ளது? என் பிதாவே, என்னையும் ஆசீர்வதியும் என்றான். ஏசாவு சத்தமிட்டு அழுதான்.

௩௯. அவன் பிதாவாகிய ஈசாக்கு அவனுக்கு உத்தரமாக, கேள், உன் வாசஸ்தலம் கொழுத்த பூமியோடும், உயர்ந்த வானத்துப் பனியோடும் இருக்கும்.

௪௰. உன் கத்தியைக்கொண்டு நீ சீவனம் பண்ணி, உன் சகோதரனிடத்தில் சேவிப்பாய். நீ மேற்கொள்ளுங் காலத்தில், உன் கழுத்தில் இருக்கும் அவனுடைய நுகத்தை ஒடித்துப்போடுவாய் என்று சொன்னான்.

௪௧. யாக்கோபுக்குத் தன் பிதா அளித்த ஆசீர்வாதத்தின் நிமித்தம் ஏசாவு யாக்கோபைப் பகைத்து, என் பிதாவுக்காகத் துக்கிக்கும்

நாள்கள் சமீபிக்கின்றன். அப்பொழுது நான் என் சகோதரனாகிய யாக்கோபைக் கொலைசெய்வேனென்று அபிப்பிராயங்கொண்டான்.

சஉ. ரிபெக்காளுக்கு மூத்த மகனாகிய ஏசாவின் வார்த்தைகள் அறிவிக்கப்பட்டன. அப்பொழுது அவள் தன் இளைய மகனாகிய யாக்கோபை அழைத்து, உன் சகோதரனாகிய ஏசாவு உன்னைக் கொலைசெய்ய நினைத்துத் தன்னைத் தேற்றுகிறான்.

சஙு. ஆகையால் என் மகனே, நான் சொல்வதைக் கேட்டு எழுந்து ஆரானில் இருக்கிற என் சகோதரனாகிய லாபானிடத்திற் போய்,

சச. உன் சகோதரனுடைய கோபந் தணிகிறவரைக்கும், சிலநாள் அவனிடத்திலே இரு.

சரு. உன் சகோதரன் உன்மேல் வைத்த கோபம் நீங்கி, நீ அவனுக்குச் செய்ததை அவன் மறந்த பின்பு, நான் ஆளனுப்பி அவ்விடத்தில் இருந்து உன்னை வரவழைப்பேன். ஒரே நாளில் உங்கள் இருவரையும் இழந்துபோகவேண்டுவதென்ன என்றாள்,

சசு. ரிபெக்காள் ஈசாக்கை நோக்கி, ஏத்தின் சந்ததியின் ஸ்திரிகள் நிமித்தம் என் ஆத்துமம் வியாகுலப்படுகின்றது. ஏத்தின் சந்ததியிலுள்ள குமாரத்திகளாகிய இத்தேசத்தின் குமாரத்திகளில் யாக்கோபு ஒரு பெண் கொண்

டால், என் சீவன் இருந்தென்ன என்று சொ ன்னுள்.

## உஅ. அதிகாரம்.

க. யாக்கோபு பதானாராமுருக்கு அனுப்பப்படல்; ௬. ஏசாவு இஷமாவேலின் புத்திரியை விவாகஞ் செய் தல்: ௰. யாக்கோபு பிரயாணஞ்செய்தலும், சொப் பனங் காணலும்; ௰அ. சொப்பன தரிசனமடைந் த ஸ்தலத்துக்குப் பெத்தேல் என்று பேரிடலும், சங்கற்பம் பண்ணலும்.

க. ஈசாக்கு யாக்கோபை அழைத்து, அவ னை ஆசீர்வதித்து, கானானியர் குமாரத்திகளி ற் பெண்கொள்ளாமல்,

உ. புறப்பட்டுப் பதானாராமில் இருக்கிற உன் மாதாவின் பிதாவாகிய பெத்துவேல் வீ ட்டாரிடத்திற் போய், அவ்விடத்தில் உன்மா தாவின் சகோதரனாகிய லாபானுடைய குமா ரத்திகளில் ஒரு பெண்ணை விவாகம்பண்ணி க்கொள் என்று கட்டளையிட்டதுமன்றி,

௩. சருவவல்லமையுள்ள தேவன் உன்னை ஆசீர்வதித்து, பற்பல சனசங்கமாகும்படி உ ன்னைப் பல்கிப் பெருகப்பண்ணுவாராக.

ச. ஆபிரகாமுக்குத் தேவன் அளித்ததும் நீ பரதேசியாய்த் தங்கி இருக்கிறதுமான இ த்தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும் பொரு

ட்டு, அவர் ஆபிராமுக்கு அருளிய ஆசீர்வாதத்தை உனக்கும் உன் சந்ததிக்கும் அருளிச்செய்யக் கடவரென்றுஞ் சொல்லி,

ரு. ஈசாக்கு யாக்கோபை அனுப்பிவிட்டான். அவன் பதானாராமில் இருந்த அராமியனாகிய பெத்துவேலுக்குப் புத்திரனும், தனக்கும் ஏசாவுக்கும் மாதாவாகிய ரிபெக்காளின் சகோதரனுமாய் இருந்த லாபானிடத்திற்குப் புறப்பட்டான்.

சு. ஈசாக்கு யாக்கோபை ஆசீர்வதித்து ஒரு பெண் கொள்ளும்படி அவனைப் பதானாராமுக்கு அனுப்பினதையும், அவனை ஆசீர்வதிக்கையில், நீ கானானியர் குமாரத்திகளில் பெண்கொள்ளல் ஆகாதென்று அவனுக்குக் கட்டளையிட்டதையும்,

எ. யாக்கோபு தன் பிதாவுக்கும், தன் மாதாவுக்கும் அமைந்து பதானாராமுக்குப் புறப்பட்டுப்போனதையும், ஏசாவுகண்டதினாலும்,

அ. தன் பிதாவாகிய ஈசாக்கு கானானியர் குமாரத்திகளிற் பிரியவீனமாய் இருப்பதை அறிந்ததினாலும்,

கூ. ஏசாவு இஷ்மாவேலிடத்திற்குப் போய்த் தனக்கு முன்னிருந்த மனைவிகளையன்றி, ஆபிரகாமுடைய புத்திரனாகிய இஷ்மாவேலின் புத்திரியும் நேபாயோத்தின் சகோதரியுமா

ன மகலாத்தையும் விவாகம்பண்ணினான்.

௰. யாக்கோபு பேர்ஷேபாவை விட்டு, ஆரானுக்கு நேராய்ப் பிரயாணம்பண்ணினான்.

௰க. சூரியன் அஸ்தமித்ததினால் தான் சேர்ந்த ஒரு இடத்தில் இராத் தங்கி, அங்குள்ள கற்களிலொன்றை எடுத்து, தன் தலையின் கீழ் வைத்து, அங்கே உறங்கும்படி படுத்துக்கொண்டான்.

௰உ. பின்பு சொப்பனத்தில், ஒரு ஏணி, பூமியில் நிறுத்தப்பட்டிருக்கிறதாகவும்; அதின் தலை வானத்தை அழாவியிருக்கிறதாகவும்; அதின் வழியாகத் தேவதூதர்கள் ஏறுகிறவர்களும், இறங்குகிறவர்களுமாய் இருக்கிறதாகவும்;

௰ங. அதற்கு மேலாய் யேகோவா நின்றுகொண்டு, யேகோவாவாகிய நான் உன் பிதாவாகிய ஆபிரகாமுடைய தேவனும், ஈசாக்கின் தேவனுமாயிருக்கிறேன். நீ படுத்திருக்கிற பூமியை உனக்கும், உன் சந்ததிக்கும் அளிப்பேன்.

௰ச. உன் சந்ததி பூமியின் மணலைப்போல விருத்தியாகும். நீ கிழக்கும், மேற்கும், வடக்கும், தெற்குமாகிய நான்கு திசையிலும் பரம்புவாய்; உன்னாலும், உன் சந்ததியாலும், பூமியிலுள்ள வமிசங்களெல்லாம் ஆசீர்வதிக்கப்படும்.

௰ரு. நான் உன் பட்சமாயிருந்து, நீ போகு மிடமெங்கும் உன்னைக் காப்பாற்றி, உன்னை இந்தத் தேசத்திற்குத் திரும்பி வரப்பண்ணு வேன். நான் உனக்குச் சொல்லியிருக்கிறதெ துவோ அதையெல்லாஞ் செய்வேன். உன் னைக் கைவிடேன் என்று சொல்லுகிறதாகவுங் கண்டான்.

௰சு. யாக்கோபு நித்திரைதெளிந்து விழித் த பொழுது, மெய்யாகவே யெகோவா இந்த ஸ்தலத்தில் இருக்கிறார்; அதை நான் அறியா திருந்தேன் என்று சொல்லிப் பயந்து,

௰எ. இந்தஸ்தலம் எவ்வளவு பயங்கரமா னது. இது தேவனுடைய வாசஸதலமே அ ன்றி வேறல்ல. இதுவே வானத்தின் வாச லென்றான்.

௰அ. அதிகாலையில் யாக்கோபு எழுந்து, த ன் தலையின் கீழ்த் தான் வைத்திருந்த கல்லை எடுத்து, அதைத் தூணாக நிறுத்தி, அதின்மே ல் எண்ணெயைச் சொரிந்தான்.

௰௯. அந்த ஸ்தலத்திற்குப் பெத்தேல் என் று பேரிட்டான். முற்காலத்தில் அவ்வூருக்கு லூஸ் என்று பேர்.

உ௰. பின்னும் யாக்கோபு, தேவனானவர் என்னோடேயிருந்து, நான் நடக்கிற இந்த வழி யில் என்னைக் காப்பாற்றுகிறதும், உண்ண ஆ

காரமும், உடுக்க வஸ்திரமும் எனக்குத் தரு கிறதுமன்றி,

௨௧. என்னை என் பிதாவின் வீட்டுக்குச் சமாதானத்தோடே திரும்பி வரவும் செய்வாராகில், யேகோவாவாகிய அவர் எனக்குத் தேவனென்றும்;

௨௨. நான் தூணாக நிறுத்தின இந்தக் கல், தேவாலயமாமென்றும், நீர் எனக்குத் தரும் எல்லாவற்றிலும் பத்திலொன்றை உமக்குச் செலுத்துவேனென்றுஞ் சொல்லிச் சங்கற்பம் பண்ணிக்கொண்டான்.

## ௨௯. அதிகாரம்.

௧. யாக்கோபு காரானிலுள்ள ஓர் வயல் வெளியைச் சேர்தல்: ௯. ராகேலைக் கண்டபின் லாபானால் உபசரிக்கப்படல்: ராகேலை மணஞ்செய்ய ஏழுவருஷம் ஏவல் செய்தல்: ௨௧. கபடமாய் ராகேலுக்குப் பிரதியாக லேயாளை மணஞ்செய்வித்தமையால் ராகேலைப் பெற மேலும் ஏழுவருஷம் ஏவல்செய்தல்; ௩௧. லேயாளின் மகப்பேறு.

௧. யாக்கோபு துரிதமாய்ப் பிரயாணஞ் செய்து, கீழ்த் திசையாரின் தேசத்திற்குப் போய்ச் சேர்ந்தான்.

௨. அவன் பார்க்கையில், அங்கே வயல்வெளியில் ஒருகிணற்றையும், அதினருகே மூன்று

மந்தை ஆடுகள் படுத்திருக்கிறதையுங் கண்டான். அந்தக் கிணற்றில் ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டுவார்கள். அந்தக் கிணறு ஒரு பெரிய கல்லினாலே மூடப்பட்டிருக்கும்.

௩. அவ்விடத்தில் ஆடுகளெல்லாஞ் சேர்ந்தபின், கிணற்றின் வாயிற் கல்லை, மேய்ப்பர் புரட்டி, ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டி, திரும்பவும், முன்னிருந்த பிரகாரம், கிணற்றின் வாயிலே கல்லை வைப்பார்கள்.

௪. யாக்கோபு அவர்களை நோக்கி, என் சகோதரரே, நீங்களெவ்விடத்தாரென்றான். நாங்கள் காரான் ஊரார் என்று சொன்னார்கள்.

௫. அதற்கு அவன் நாகோரின் புத்திரனாகிய லாபானை அறிவீர்களாவென்று கேட்க; அறிவோம் என்றார்கள்.

௬. அவன் சுகமாயிருக்கிறானாவென்று இவன் விசாரித்ததற்கு, சுகமாயிருக்கிறான்; அவன் குமாரத்தியாகிய ராகேல் ஆடுகளை ஓட்டிக்கொண்டு வருகிறாள், பார் என்றார்கள்.

௭. அப்பொழுது அவன், இன்னும் வெகு பொழுதிருக்கின்றது. இது ஆடுகளைச் சேர்க்கிற வேளையல்ல. ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டி, பின்னும் மேயவிடலாமென்றான்.

௮. அதற்கவர்கள் ஆட்டுமந்தைகளெல்லாஞ் சேருமுன்னே கூடாது; சேர்ந்தபின், கிண

ற்றின் வாயிலிருக்கிற கல்லைப் புரட்டுவார்கள்; அப்பொழுது ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டுவோமென்றார்கள்.

கூ. அவர்களுடனே அவன் சம்பாஷித்துக்கொண்டிருக்கையில் ஆடுகளை மேய்க்கிறவளாகிய ராகேல், தன் பிதாவின் ஆடுகளை ஓட்டிக்கொண்டு வந்தாள்.

௰. யாக்கோபு தன் மாதாவுக்குச் சகோதரனை லாபானுடைய புத்திரியாகிய ராகேலையும், அவனுடைய ஆடுகளையுங் கண்டபொழுது, யாக்கோபு போய்க் கிணற்றின வாயிலிருந்த கல்லைப் புரட்டி, தன் மாதாவுக்குச் சகோதரனாகிய லாபானுடைய ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டினான்.

௰க. பின்பு யாக்கோபு ராகேலை முத்தஞ்செய்து சத்தமிட்டழுதான்.

௰உ. நான், உன்னுடைய பிதாவுக்கு மருமகனென்றும், நான் ரிபெக்காளின் புத்திரனென்றும், யாக்கோபு ராகேலுக்குச் சொல்ல; அவள் ஓடிப்போய்த் தன் பிதாவுக்கு அறிவித்தாள்.

௰௩. லாபான் தன் சகோதரியினுடைய புத்திரனாகிய யாக்கோபின் வரவைக் கேள்விப்பட்டவுடனே, அவனுக்கெதிர்கொண்டோடி, அவனைத் தழுவி முத்தஞ்செய்து, தன் வீட்டுக்

கழைத்துக்கொண்டு போனான். அவன் லாபா னுக்கு உள்ள காரியங்கள் யாவற்றையும் வி வரமாய்ச் சொன்னான்.

௰ச. லாபான், மெய்யாய் நீ என் எலும்பும், என் மாமிசமுமானவன் என்றான். யாக்கோபு ஒருமாதகாலம் அவன்வீட்டிலே இருந்தான்.

௰ரு. பின்பு லாபான் அவனை நோக்கி, நீ எ னக்கு மருமகனாயிருப்பதினால், சும்மா எனக் கு வேலைசெய்யலாமா? சம்பளம் எவ்வளவு கேட்கிறாய்; அதை எனக்குச் சொல்லென்று சொன்னான்.

௰சூ. லாபானுக்கு இரண்டு புத்திரிகளிருந் தார்கள். மூத்தவளுக்கு லேயாள் என்று பெய ர்; இளையவளுக்கு ராகேலென்று பெயர்.

௰எ. லேயாள் கூசின பார்வையுள்ளவள்; ராகேல் ரூபவதியும்,சௌந்தரியுமாயிருந்தாள்.

௰அ. யாக்கோபு ராகேல்மேல் அன்புவைத் திருந்தான். அதினால் உம்முடைய இளையமக ளாகிய ராகேலின் நிமித்தம், உம்மிடத்தில் ஏ ழுவருஷஞ் சேவிப்பேன் என்றான்.

௰கூ. அதற்கு லாபான், நான் அவளை அன் னியனுக்குக் கொடுக்கிறதிலும் உனக்குத் த ருகிறது உத்தமம்; என்னுடனே தரித்திருவெ ன்றான்.

உ௰. அந்தப்படி யாக்கோபு ராகேலினிமித்

தம் ஏழு வருஷஞ் சேவித்தான். அவள் மேல் அவன் வைத்த அன்பின் நிமித்தம் அவை அவனுக்குக் கொஞ்சநாள்போலத் தோன்றின.

௨௧. பின்பு யாக்கோபு லாபானை நோக்கி, எனக்கு நியமித்த நாள்கள் நிறைந்தன. என் மனைவியோடே சேரும்படி அவளை எனக்கு ஒப்பிக்க வேண்டுமென்று சொன்னான்.

௨௨. அப்பொழுது லாபான் அவ்விடத்து மனிதரெல்லாரையுங் கூடிவரச் செய்து, விருந்துபண்ணினான்.

௨௩. அன்றிரவு அவன் தன் குமாரத்தியாகிய லேயாளை அழைத்துக்கொண்டு போய்விட, அவளை அவன் சேர்ந்தான்.

௨௪. மேலும் லாபான் தன் பணிவிடைக்காரியாகிய சில்பாளைத் தன் குமாரத்தியாகிய லேயாளுக்குப் பணிவிடைக்காரியாகக் கொடுத்தான்.

௨௫. காலமே யாக்கோபு அவள் லேயாளென்று கண்டு, லாபானை நோக்கி, என் இதை எனக்குச் செய்தீர்? ராகேலின் நிமித்தமல்லவோ உம்மிடத்துச் சேவித்தேன்; என்னை வஞ்சித்ததென்னவென்று கேட்க,

௨௬. லாபான் மூத்தவளிருக்க இளையவளைக் கொடுக்கிறது, எங்கள் ஊரிலே வழக்கமில்லை.

௨௭. நீ இவளுடைய வாரத்தை நிறைவே

ற்று. இன்னும் ஏழுவருஷம் என்னிடத்தில் சேவித்தால், அவளையும் உனக்குத் தருவே னென்றான்.

உஅ. அந்தப்பிரகாரம் யாக்கோபு இவளு டைய வாரத்தை நிறைவேற்றினன். அப்பொ ழுது அவன் தன் குமாரத்தியாகிய ராகேலையு ம் அவனுக்கு மனைவியாகக் கொடுத்தான்.

உகூ. மேலும் லாபான் தன் பணிவிடைக் காரியாகிய பில்க்காளைத் தன் குமாரத்தியாகிய ராகேலுக்குப் பணிவிடைக்காரியாகக் கொடு த்தான்.

ஙய. யாக்கோபு ராகேலையுஞ் சேர்ந்தான். லேயாளிலும் ராகேலின்மேல் அதிக அன்பு வைத்தான். பின்னும் ஏழு வருஷம் அவனிட த்திற் சேவித்தான்.

ஙக. லேயாள் அலட்சியமாக எண்ணப்ப ட்டாளென்று யெகோவா கண்டு, அவள் கரு ப்பந் தரிக்க அருள்செய்தார். ராகேலோ மல டியாயிருந்தாள்.

ஙஉ. லேயாள் கருப்பவதியாகி, ஒரு புத்திர னைப்பெற்று, இப்பொழுது என் புருஷன் என் மேல் அன்பு வைக்கும்படி யெகோவா என் சிறுமையைப் பார்த்தருளினரென்று சொல் லி, அவனுக்கு ரூபேன் என்று பேரிட்டாள்.

ஙங. மீண்டும் அவள் கருப்பவதியாகி ஒரு

புத்திரனைப் பெற்று, நான் அற்பமாயெண்ண ப்பட்டவளென்று யெகோவா என்னைக் கேட்டருளி, இவனையும் எனக்குத் தந்தாரென்று சொல்லி அவனுக்கு ஷிமியோன் என்று பேரிட்டாள்.

௩௪. மேலும் அவள் கருப்பவதியாகி ஒரு புத்திரனைப் பெற்று, இப்பொழுது என் புருஷனுக்கு மூன்று புத்திரரைப் பெற்றபடியால், அவர் இனி என்னுடனே சேர்த்திக்கையாயிருப்பாரென்று சொல்லி, அவனுக்கு லேவி என்று பேரிட்டாள்.

௩௫. பின்னும் அவள் கருப்பவதியாகி ஒரு புத்திரனைப் பெற்று, இப்பொழுது யெகோவாவைத் துதிப்பேனென்று சொல்லி, அவனுக்கு யூதா என்று பேரிட்டாள். அவளுடைய மக்கட்பேறு நின்றது.

## ௩௰. அதிகாரம்

க. லேயாள்மேல் ராகேல் பொறாமை கொள்ளல்: ௰௪. ராகேல் தூதாயீம் கனி சம்பாதித்தல்: ௰௭. லேயாள் ஈஷகாரையும், செபுலோனையும், தீனாளையும்பெறல்: ௰௯. லேயாள் மீண்டும் மகப்பெறல்: உஉ. ராகேல் யோசேப்பைப்பெறல்: உரு. யாக்கோபு தன்பிதாவின் வீட்டிற்குப்போக அபேட்சை கொண்டதினால் லாபான் அவனோடே உடன்படிக்

கை செய்தல் : ௩௭. யாக்கோபு பொருளீட்ட உபா யந்தேடல்.

௧. ராகேல் யாக்கோபினுல் தான் பிள்ளைப் பேறடையாததைக் கண்டு, தன் சகோதரியி ன்மேலேபொருமைகொண்டு, யாக்கோபை நோக்கி, எனக்கும் பிள்ளை தரவேண்டும்; இ ல்லாவிட்டால், நான் மரிக்கிறேனென்ருள்,

௨. அதினுல் ராகேலின்மேல் தனக்குக் கோபம்பற்றியெரிய, யாக்கோபு, உனக்குக் கருப்பக்கனியை அருளாத யெகோவாவுக்கு நான் பிரதியானவனு என்று சொல்ல;

௩. அவள், என்பணிவிடைக்காரியாகிய பி ல்க்காள் இருக்கிருள். அவள் என் மடியின் மேலிருக்கப் பிள்ளைகளைப் பெறவும், அவள் வழியாய் நான் சந்தான விருத்தி அடையவுந் தக்கதாக, நீர் அவளைச்சேருமென்று சொல்லி,

௪. அவனுக்குத் தன் பணிவிடைக்காரியா கிய பில்க்காளை மறுமனையாட்டியாகக் கொடு த்தாள். யாக்கோபு அவளைச்சேர்ந்தான்.

௫. பில்க்காள் கருப்பவதியாகி யாக்கோபு க்கு ஒரு புத்திரனைப் பெற்ருள்.

௬. ராகேல், தேவன் என் விண்ணப்பத் தையுங் கேட்டு எனக்கொரு புத்திரனையும் அ ளித்து, எனக்கு நியாயஞ் செய்தாரென்று சொ ல்லி, அவனுக்குத் தாண் என்று பேரிட்டாள்.

எ. பின்பு ராகேலுடைய பணிவிடைக்காரியாகிய பில்க்காள் கருப்பவதியாகி யாக்கோபுக்கு வேறொரு புத்திரனைப் பெற்றாள்.

அ. அப்பொழுது ராகேல், நான் மிகுந்த வலிமையாய் என் சகோதரியுடனே போராடி மேற்கொண்டேனென்று சொல்லி, அவனுக்கு நப்தாலி என்று பேரிட்டாள்.

௯. லேயாளும், மக்கட்பேறு தனக்கு நின்றுபோனதைக் கண்டு, தன்பணிவிடைக்காரியாகிய சில்ப்பாளை அழைத்து, அவளை யாக்கோபுக்கு மறுமனையாட்டியாக அளித்தாள்.

௰. லேயாளின் பணிவிடைக்காரியாகிய சில்ப்பாள் யாக்கோபுக்கு ஒரு புத்திரனைப் பெற்றாள்.

௰௧. அதினாலே லேயாள் ஒரு தண்டு வருகின்றதென்று சொல்லி, அவனுக்குக் காத் என்று பேரிட்டாள்.

௰௨. பின்னும் லேயாளின் பணிவிடைக்காரியாகிய சில்ப்பாள் யாக்கோபுக்கு வேறொரு புத்திரனைப்பெற்றாள்.

௰௩. அப்பொழுது லேயாள், ஸ்திரிகள் என்னை வாழ்வுடையவளென்று சொல்வார்கள். நான் வாழ்வுடையவளேயென்று சொல்லி, அவனுக்கு ஆஷேர் என்று பேரிட்டாள்.

௰௪. கோதுமை அறுப்புநாள்களில் ரூபேன்

வயல்வெளியிலே போய்த் தூதாயீம் கனிகளை
க்கண்டெடுத்து, அவைகளைத் தன் மாதாவாகி
ய லேயாளிடத்துக்குக் கொண்டுவந்து கொடு
த்தான். அப்பொழுது ராகேல் லேயாளை நோ
க்கி, உன் புத்திரன் கொண்டுவந்த தூதாயீம்
கனிகளில் எனக்குக் கொஞ்சந்தாவென்று கே
ட்க;

௰௫. அவள் நீ என் புருஷனைக் கைவசப்ப
டுத்திக்கொண்டது அற்பகாரியமா? என் புத்தி
ரனுடைய தூதாயீம் கனிகளையுங் கவரவே
ண்டுமாவென்றாள். அதற்கு ராகேல் உன் புத்
திரனுடைய தூதாயீம் கனிகளின் நிமித்தம் அ
வன் இன்றிரவு உன்னுடனே சயனிப்பான்
என்றாள்.

௰௬. சாயங்காலத்தில் யாக்கோபு வயல்வே
ளியிலிருந்து வருகையில், லேயாள் புறப்பட்
டு அவனுக்கு எதிர்கொண்டுபோய், என் புத்தி
ரனுடைய தூதாயீம் கனிகளால் உம்மைப்
பெற்றுக்கொண்டேன். ஆதலால் நீர் என்னைச்
சேரவேண்டுமென்று சொல்ல; அவன் அன்றி
ரவு அவளுடனே சயனித்தான்.

௰௭. தேவன் லேயாளுக்கு அருள்செய்ய,
அவள் கருப்பவதியாகி யாக்கோபுக்கு ஐந்தாம்
புத்திரனைப் பெற்றாள்.

௰௮. லேயாள், நான் என் பணிவிடைக்கா

ரியை என் புருஷனுக்கு அளித்ததினால் தேவன் எனக்குப்பலன் அருளினாரென்று சொல்லி அவனுக்கு ஈஷகார் என்று பெயரிட்டாள்.

௰௯. பின்னும் லேயாள் கருப்பவதியாகி யாக்கோபுக்கு ஆறாம் புத்திரனைப் பெற்றாள்.

௨௰. லேயாள், தேவன் எனக்கு நல்ல சீதனத்தை அருளினார். என் புருஷனுக்கு நான் ஆறு புத்திரரைப் பெற்றபடியால், இனி அவர் என்னுடனே சகவாசமாய் இருப்பாரென்று சொல்லி, அவனுக்குச் செபுலோன்என்று பெயரிட்டாள்.

௨௧. பின்பு அவள் ஒரு புத்திரியையும் பெற்று, அவளுக்குத் தீனாளென்றுபெயரிட்டாள்.

௨௨. தேவன் ராகேலையும் நினைந்தருளினார். அவளுக்குத் தேவன் செவிகொடுத்து, அவள் கருப்பந்தரிக்க அருள் செய்தார்.

௨௩. அவள் கருப்பவதியாகி ஒரு புத்திரனைப் பெற்று, தேவன் என் அவமானத்தை நீக்கினாரென்றும்,

௨௪. இன்னும் யெகோவா எனக்கொரு புத்திரனை அருள்வாரென்றுஞ் சொல்லி, அவனுக்கு யோசேப்பு என்று பெயரிட்டாள்.

௨௫. ராகேல் யோசேப்பைப் பெற்றபின்பு யாக்கோபு லாபானை நோக்கி, நான் உமக்குப் பண்ணின சேவகத்தை அறிவீர். என்னைப்

போகவிடும். நான் உம்மிடத்துச் சேவித்துப் பெற்ற என் மனைவிகளையும், பிள்ளைகளையுந்த ந்து, நான் என் ஸ்தானத்திற்கும், தேசத்திற்கு ம் போக என்னை அனுப்பிவிடவேண்டும். நா ன் போகிறேனென்று சொன்னான்.

௨௭. அதற்கு லாபான், என்மேல் உனக்கு த் தயையுண்டானால், இன்னும் இரு.

௨௭. உன்நிமித்தம் யேகோவா என்னை ஆ சீர்வதித்தாரென்பதை நான் அநுபவத்தால் அ றிந்தேன்.

௨௮. உனக்குச் சம்பளம் இவ்வளவுவே ண்டுமென்று எனக்குச் சொன்னால், நான் தரு வேனென்று சொல்ல,

௨௯. இவன், நான் உம்மிடத்துச் சேவித்த விதமும், உமதுஆட்டுக்கூட்டம் என்னிடத்தி ல் இருந்த விதமும், நீர் அறிவீர்.

௩௰. நான்வருமுன்னமே உமக்கிருந்ததுகொ ஞ்சம்; நான் வந்தபின் யேகோவா உம்மை ஆசீர்வதித்ததினால், அது மிகவும் பெருகியிருக் கின்றது. இனி நான் என் குடும்பத்திற்கு எப் பொழுது சம்பாதித்துக்கொள்வேனென்றான்.

௩௧. அதற்கவன் நான் உனக்கு என்ன தர வேண்டுமென்று சொல்ல; யாக்கோபு, நீர் எ னக்கு ஒன்றுந் தரவேண்டுவதில்லை. இன் றைக்கு நான் போய் உமது ஆடுகளுக்குள்ளே

உலாவி அவைகளில் புள்ளியும், வரியும், கறு ப்புமுள்ள செம்மறி ஆடுகள் யாவையும், வரி யும், புள்ளியுமுள்ள வெள்ளாடுகளையும் பிரித் தெடுப்பேன். அவையே எனக்குச் சம்பளம்.

௩௨. என் சம்பளமாகிய இவற்றை நீர் பா ர்வையிடும்பொழுது, புள்ளியும், வரியுமில்லா த வெள்ளாடுகளும், கறுப்பான செம்மறி ஆ டுகளும், என் வசத்திலிருந்தால், அவையெல் லாம் என்னால் திருடிக்கொள்ளப்பட்டனவா யிருக்கும். இனிமேல் என் நீதி இவ்விதமா ய் விளங்கும்.

௩௩. நான் சொல்லுகிறபடி நீர் எனக்குச்செ ய்தால்தான், உமது ஆட்டுக்கூட்டத்தை இன் னும் மேய்த்துக் காப்பாற்றுவேனென்றான்.

௩௪. அதற்கு லாபான், நீ சொல்லிய பிரகா ரம் ஆகக்கடவதென்று சொல்லி,

௩௫. அந்நாளிற் பொதுநிறமும் வரிகளுமு ள்ள வெள்ளாட்டுக்கடாக்களையும், புள்ளியும் வரியுமுள்ள வெள்ளாடுகள் யாவையும், சற்று வெண்மையும், கருமையுமுள்ள செம்மறி ஆ டுகள் யாவையும் பிரித்து, தன்னுடைய புத்தி ரரிடத்தில் ஒப்பித்து, தனக்கும் யாக்கோபுக் கும், இடையிலே மூன்றுநாள் பிரயாணதூர மிருக்க நியமித்தான்.

௩௬. லாபானுடைய மற்ற ஆடுசளை யாக்கோபு மேய்த்தான்.

௩௭. பின்பு யாக்கோபு பசிய புன்னைமரத்திலும், உலூசென்னுமரத்திலும், அர்மோன் என்னுமரத்திலும், கொப்புக்களைவெட்டி, இடையிடையே வெண்மை தோன்றும்படி, பட்டையை உரித்து,

௩௮. ஆடுகள் தண்ணீர் குடிக்க வரும்பொழுது பொலிவதற்கு, தான் உரித்த கொம்புகளை ஆடுகள் தண்ணீர் குடிக்க வருங் கால்வாய்களிலும், தொட்டிகளிலும், ஆடுகளுக்கு முன்பாக வைத்தான்.

௩௯. ஆடுகள் அந்தக் கொம்புகளுக்கு முன்பாகப் பொலிந்தபடியால், அவை போதுநிறமும், புள்ளியும், வரியுமுள்ள குட்டிகளை ஈன்றன.

௪௰. அந்த ஆட்டுக்குட்டிகளை யாக்கோபு பிரித்துக்கொண்டான். மேலும் லாபானுடைய ஆடுகளின் முகத்தைப் போதுநிறமும், கறுப்புமுள்ளவைகளுக்கு எதிராக நிறுத்துவதுமன்றித் தன் ஆடுகளை லாபானுடைய ஆடுகளோடே சேர்த்துக்கொள்ளாமல், வேறாகவும் வைத்தான்.

௪௧. அல்லாமலும் பலத்த ஆடுகள் மாத்திரம் பொலியும்பொழுது, அந்தக் கொப்புகளு

க்கு எதிரே கருத்தரிக்கும்படி, யாக்கோபு அவைகளை அந்த ஆடுகளின் கண்களுக்கு முன்பாகக் கால்வாய்களில் வைப்பான்.

சஉ. பலமற்ற ஆடுகள் பொலியும்பொழுது அவைகளைப் போடாமலிருப்பான். இதனுற் பலமற்றவைகள் லாபானையும், பலமுள்ளவைகள் யாக்கோபையுஞ் சேர்ந்தன.

சங. இப்படியே அந்த மனிதன் விருத்தியடைந்து, திரளான ஆடுகளும் பணிவிடைக்காரிகளும், பணிவிடைக்காரரும், ஒட்டகங்களும், கழுதைகளும், உடையவனுனன்.

## ஙக. அதிகாரம்.

க. யாக்கோபு லாபானை விட்டுத் தப்பியோடல்: யள: ராகேல் லாபானின் விக்கிரகங்களைத் திருடல். உஉ. யாக்கோபு தப்பியோடினதை லாபான் அறிதல்: உரு. லாபான் அவனைத் தொடர்தல்: ஙய. கூடாரத்தில் விக்கிரகங்களைத் தேடுதல்: ஙசு. லாபானை யாக்கோபு சோபித்தல்: சரு யாக்கோபுடனே லாபான் ஓர் உடன்படிக்கை செய்தல்.

க. பின்பு, எங்கள் பிதாவுக்குண்டான யாவையும் யாக்கோபு தன் வசமாக்கிக்கொண்டு, எங்கள் பிதாவின் பொருளினுலே இந்தச் செல்வமெல்லாம் பெற்றிருக்கிறுனென்று

லாபானுடைய புத்திரர் சொன்னதைக் கேட்டதுமன்றி,

௨. லாபானுடைய முகமுந் தன்னுடனே முன்னிருந்ததற்கு வேறுபட்டிருப்பதையும், யாக்கோபு கண்டான்.

௩. யெகோவா யாக்கோபை நோக்கி, உன் பிதாக்களுடைய தேசத்திற்கும், உன் சுற்றத்தாரிடத்திற்கும், நீ திரும்பிப்போ; நான் உன் பட்சமாயிருப்பேனென்று சொல்ல;

௪. யாக்கோபு ராகேலையும், லேயாளையும், வெளியிலே தன் மந்தையிடத்தில் அழைப்பித்து,

௫. அவர்களை நோக்கி, உங்கள் பிதாவின் முகம் என் மேல் முன்னிருந்ததுபோல இருக்கவில்லையென்று எனக்குத் தோன்றுகின்றது. ஆனாலும் என் பிதாவுடைய தேவன் என் பட்சமாயிருக்கிறார்.

௬. நான் என்னால் இயன்றமாத்திரம் உங்கள் பிதாவிடத்தில் சேவித்தேனென்பது உங்களுக்குத் தெரியும்.

௭. அப்படியிருந்தும், உங்கள் பிதா என்னை வஞ்சித்து, என் சம்பளத்தைப் பத்துமுறை மாற்றினான். ஆகிலும் அவன் எனக்குத் தீமைசெய்யத் தேவன் விடவில்லை.

௮. அவன், புள்ளிபுள்ளவைகள் உனக்கு

ச் சம்பளமென்று சொன்னால், ஆடுகளெல்லாம் புள்ளியுள்ள குட்டிகளை ஈனும். போது நிறமுள்ளவைகள் உனக்குச் சம்பளமென்று சொன்னால், ஆடுகளெல்லாம் போதுநிறமுள்ள குட்டிகளை ஈனும்.

கூ. இவ்விதமாய்த் தேவன் உங்கள் பிதாவுடைய ஆடுகளை எடுத்து, எனக்குத் தந்தார்.

ய. ஆடுகள் பொலியுங்காலத்தில், நான் கண்ட சொப்பனத்தில் கண்ணேறிட்டுப் பார்த்து ஆடுகளோடே பொலியுங் கடாக்கள் போதுநிறமும், புள்ளியும், வரியுமுள்ளவைகளாயிருக்கக் கண்டேன்.

யக. அன்றியும் தேவதூதனொருவர் சொப்பனத்தில் யாக்கோபே, என்றுசொல்ல, இங்கே இருக்கிறேனென்றேன்.

யஉ. அப்பொழுது அவர், லாபான் உனக்குச் செய்கிற யாவையுங் கண்டேன். நீ கண்ணேறிட்டுப்பார். ஆடுகளோடே பொலியுங் கடாக்களெல்லாம் கறுப்புநிறமும், புள்ளியும், வரியுமுள்ளவைகளாயிருக்கின்றன.

யஙூ. நீ தூணுக்கு அபிஷேகஞ் செய்து, எனக்கொரு சங்கற்பத்தைப் பண்ணின பெத்தேலிலே உனக்குத் தரிசனமான தேவன் நானே. இப்பொழுது நீ எழுந்து இந்தத் தேசத்தை விட்டுப் புறப்பட்டு, உன் சுற்றத்தார் இ

ருக்கிற தேசத்திற்குத் திரும்பிப்போவென்று சொன்னாரென்றான்.

௰௪. அதற்கு உத்தரமாய் ராகேலும், லேயாளும், எங்கள் பிதாவின் வீட்டிலே இனி எங்களுக்குப் பங்குஞ் சுதந்தரமுமுண்டா?

௰௫. அவரால் நாங்கள் அந்நியராய் எண்ணப்படவில்லையா? அவர் எங்களை விற்று எங்கள் பணம் யாவையும் புட்சித்தார்.

௰௬. தேவன் எங்கள் பிதாவினிடத்திலிருந்து எடுத்த ஐசுவரியமெல்லாம், நமக்கும், நம்முடைய பிள்ளைகளுக்கும் உரியன. ஆதலால் தேவன் உமக்குச் சொல்லிய பிரகாரம் செய்யக்கடவீரென்று சொன்னார்கள்.

௰௭. அப்பொழுது யாக்கோபு எழுந்து தன் பிள்ளைகளையும், தன் மனைவிகளையும் ஒட்டகங்கள் மேல் ஏற்றி,

௰௮. தான் பதானாராமிலே சம்பாதித்த ஆட்டுக் கூட்டங்கள் அனைத்தையும், தன் பொருள் யாவையுஞ் சேர்த்துக்கொண்டு கானான் தேசத்தில் இருக்கிற தன் பிதாவாகிய ஈசாக்கின் இடத்துக்குப் போகப் புறப்பட்டான்.

௰௯. அக்காலத்தில் லாபான் தன் ஆடுகளுக்கு மயிர் கத்தரிக்கப் போய் இருந்தான். ராகேல் தன் பிதாவினுடைய தேராபீன்களைத் திருடிக்கொண்டாள்.

உ0. இப்படியே இயாக்கோபு தனக்குண் டான யாவையுங் கொண்டு, தான் ஓடிப்போ கிறதை அராமியனாகிய லாபானுக்கு அறிவியா மல்,

உக. ஒளித்துப் புறப்பட்டு ஆற்றைக் கடந்து கிலியாத்துமலையை நோக்கி ஓடிப்போனான்.

உஉ. இயாக்கோபு ஓடிப்போனது மூன்று ம்நாளிலே லாபானுக்கு அறிவிக்கப்பட்டது.

உங. அவன் தன் சகோதரரைக் கூட்டிக் கொண்டு, ஏழுநாட்பிரயாண பரியந்தம் அவ னைத் தொடர்ந்து, கிலியாத்து மலையில் அவ னைக் கண்டு பிடித்தான்.

உச. அப்பொழுது தேவன் இரவில் அராமி யனாகிய லாபானுக்குச் சொப்பனத்தில் தோ ன்றி, நீ இயாக்கோபுடனே நன்மையை அன் றித் தீமை பேசாதபடிக்கு எச்சரிக்கையாய் இரு என்றார்.

உரு. லாபான் இயாக்கோபினிடத்திற் சேர் ந்தான். இயாக்கோபு மலையினருகே தன் கூ டாரத்தைப் போட்டிருந்தான். லாபானுந் த ன் சகோதரருடனே கிலியாத்து மலையினருகே கூடாரம் போட்டான்.

உசா. பின்பு லாபான் யாக்கோபை நோக்கி, நீ என்னை வஞ்சித்துக் கட்கங்கொண்டு சிறை ப்பிடிக்கிற பிரகாரம் என் குமாரத்திகளைக்

கொண்டுவந்தது என்ன செய்கை? எதினாலே நீ எனக்கு ஒன்றுஞ் சொல்லாமல்,

௨௭. ஒளித்து இரகசியமாய் ஓடிவந்தாய்? நான் உன்னைச் சந்தோஷமாய்ச் சங்கீத மேள தாள கின்னர முழக்கத்துடனே அனுப்புவேனே.

௨௮. என் புத்திர புத்திரிகளை முத்தஞ்செய்ய விடாததேன்ன? இந்தச் செய்கையைப் பேதைமையாய்ச் செய்தாய்.

௨௯. உங்களை வருத்த எனக்கு வல்லமையுண்டு. ஆகிலும் உங்கள் பிதாவினுடைய தேவன், நீ யாக்கோபுக்கு நன்மையையன்றித் தீமை செய்யாதபடிக்கு எச்சரிக்கையாய் இரு என்று இராத்திரி என்னுடனே சொன்னார்.

௩௰. மேலும், உன் பிதாவின் வீட்டார்மேல் நீ கொண்ட வாஞ்சையினால் நீ புறப்பட்டு வருகிற பொழுது என் தெய்வங்களைத் திருடிக்கொண்டதேன்ன என்று கேட்டான்.

௩௧. அதற்கு யாக்கோபு உம்முடைய புத்திரிகளை என்னிடத்திலிருந்து பறித்துக்கொள்வீரென்று அஞ்சினேன்.

௩௨. உம்முடைய தெய்வங்களை வைத்திருக்கிறவனெவனோ அவன் சீவித்திருக்கத் தகான். உமது பொருள் என் வசத்திலுண்டானால், அதை நீர் நம்முடைய சகோதாருக்கு

முன்பாகப் பார்த்தறிந்து அதை எடுத்துக்கொள்ளுமென்றான். ராகேல் அவைகளைத் திருடினதை யாக்கோபு அறியவில்லை.

௩௩. அப்பொழுது லாபான் யாக்கோபின் கூடாரத்திலும், லேயாளின் கூடாரத்திலும், இரண்டு பணிவிடைக்காரிகளின் கூடாரத்திலும்போய் அவைகளைக் கண்டுபிடிக்கவில்லை. பின்பு லேயாளின் கூடாரத்திலிருந்து புறப்பட்டு, ராகேலின் கூடாரத்திற்குப் போனான்.

௩௪. ராகேல் அந்தத் தேராபீன்களையெடுத்து ஒட்டகச் சேணத்தின்கீழ் வைத்து, அதின் மேலிருந்தாள். லாபான் கூடாரமெங்குந் தடவிப் பார்த்தும் அவைகளைக் கண்டுபிடிக்கவில்லை.

௩௫. அவளுந் தன் பிதாவை நோக்கி, நான் இல்லிலக்கமானவள். என் ஆண்டவனாகிய உமக்கு முன்பாக எழுந்திராததைக் குறித்துக் கோபங்கொள்ளாதிருப்பீராகவென்று சொன்னாள். இப்படி அவன் அந்தத் தேராபீன்களைத் தேடியுங் காணவில்லை.

௩௬. அப்பொழுது யாக்கோபு கோபங்கொண்டு லாபானுடனே வாக்குவாதம்பண்ணினான். யாக்கோபு லாபானிடத்தில், நீர் அதிக உக்கிரமாய் என்னைத் தொடர்ந்து வரும்படிக்கு, நான்செய்த குற்றமும் பாவமும் என்ன?

௩௭. என் பொருள் யாவையும் பரிசோதித்தீரே. உமதுவீட்டின் தட்டுமுட்டுக்களில் எதைக் கண்டீர்? அதை என்னுடைய சகோதரருக்கும், உம்முடைய சகோதரருக்கும் முன்பாக இங்கே வைக்கவேண்டும். அவர்கள் எனக்கும் உமக்கும் நடுத்தீர்க்கக்கடவர்கள்.

௩௮. இருபது வருஷம் நான் உம்மிடத்திலிருந்தேன். உம்முடைய செம்மறியாடுகளும், வெள்ளாடுகளுஞ் சினை அழியவில்லை. உமது மந்தையிலுள்ள கடாக்களை நான் தின்னவில்லை.

௩௯. பீறுண்டதை உம்மிடத்திற்குக் கொண்டுவராமல், அதை நானே ஏற்றுக்கொண்டேன். பகலில் களவுபோனதையும், இரவில் களவுபோனதையும், நீயே கொடுக்கவேண்டுமென்று கேட்டீர்.

௪௰. பகலிலே வெயிலும், இரவிலே பனியும், என்னைப் பட்சித்தன. நித்திரை என் கண்களுக்குத் தூரமாயிற்று.

௪௧. இப்படியாக இருபதுவருஷம் உம்முடைய வீட்டிலிருந்தேன். பதினாலு வருஷம் உம்முடைய இரண்டு குமாரத்திகள் நிமித்தமும், ஆறு வருஷம் உமது ஆடுகளுக்காகவும், உம்மிடத்திற் சேவித்தேன். பத்துமுறை என் சம்பளத்தை மாற்றினீர்.

௪௨. என் பிதாவின் தேவனும், ஈசாக்கின் பயபத்திக்கிடமானவரும், ஆபிரகாமின் தேவனுமாயிருக்கிற தேவன், என் பட்சத்திலிராவிட்டால், நீர் இப்பொழுதும் என்னை வெறுமையாய் அனுப்பிவிடுவீர். தேவன் என் சிறுமையையும், என் கைப்பிரயாசத்தையும் பார்த்து இராத்திரி உம்மைக் கடிந்துகொண்டாரென்று சொன்னான்.

௪௩. லாபான் யாக்கோபை நோக்கி, இந்தக் குமாரத்திகள் என்னுடைய குமாரத்திகள். இந்தப் பிள்ளைகள் என்னுடைய பிள்ளைகள். இந்த ஆடுகள் என்னுடைய ஆடுகள். நீ காண்கிற யாவும் என்னுடையவைகள். என்னுடைய குமாரத்திகளாகிய இவர்களையும், இவர்கள் பெற்ற பிள்ளைகளையும், இப்பொழுது நான் என்னசெய்யலாம் ?

௪௪. இனி எனக்கும், உனக்கும், ஒரு திருஷ்டாந்தமாயிருக்கும் பொருட்டு, நானும், நீயும், ஒரு உடன்படிக்கை பண்ணிக்கொள்ளக்கடவோமென்று சொன்னான்.

௪௫. அதனால் யாக்கோபு ஒரு கல்லை எடுத்து, அதைத் தூணாக நிறுத்தினான்.

௪௬. பின்னும் யாக்கோபு கல்லுக்களைச் சேர்த்துக்கொண்டு வாருங்களென்று தன் சகோதரருக்குச் சொல்ல, அவர்கள் கல்லுக்களை எடு

த்துவந்து குவித்து, அந்தக் கற்குவியலின் மேல் போசனம்பண்ணினார்கள்.

௪௭. அதற்கு லாபான், ஏகார்சக்துாத்தாஎன்று பேரிட்டான். யாக்கோபு, அதற்குக் கலேயேத்தேன்று பெயரிட்டான்.

௪௯. நாம் ஒருவரை ஒருவர் விட்டு மறைந்த பின்பு, நீ என் குமாரத்திகளைத் துயரப்படுத்தி, அவர்களையன்றி வேறே ஸ்திரிகளை விவாகம்பண்ணினால், யேகோவா எனக்கும், உனக்கும், நடுநின்று விசாரிப்பாராக.

௫௰. நம்முடனே ஒருவருமில்லை. தேவனே உனக்கும் எனக்கும் சாட்சி, பாரென்று லாபான் சொன்னபடியால், அவ்விடத்துக்கு மிஸ்பாவென்னும் பெயரும்,

௫௰. இந்தக் கற்குவியலே எனக்கும் உனக்கும் சாட்சியென்று இவன் சொன்னபடியால் கலேயேத்தேன்னும் பேரும், அவற்றிற்கு இடப்பட்டன.

௫௧. மேலும், லாபான் யாக்கோபை நோக்கி, இந்தக் கற் குவியலையும், எனக்கும் உனக்கும் நடுவாக நிறுத்தின கல்லையும் பார்.

௫௨. உனக்குத் தீமைசெய்ய நான் இந்தக் கற்குவியலைக் கடந்து வராமலும், எனக்குத் தீமைசெய்ய நீ இந்தக் கற் குவியலையும், இந்தத் தூணையுங் கடந்து வராமலுமிருப்போம்

என்பதற்கு, இந்தக் கற்குவியலுஞ் சாட்சி; நி றுத்தின இந்தத் தூணுஞ் சாட்சி.

௫௩. ஆபிரகாமுடைய தேவனும், நாகோருடைய தேவனும், அவர்கள் பிதாக்களுடைய தேவனுமாயிருக்கிறவர், நமக்குள்ளே மத்தியஸ்தராயிருக்கக் கடவரென்று சொன்னான். அப்பொழுது யாக்கோபு, தன் பிதாவாகிய ஈசாக்கின் பயபத்திக்கிடமானவரைக்கொண்டு ஆணையிட்டான்.

௫௪. பின்பு யாக்கோபு மலையின்மேற் பலியிட்டு, போசனம்பண்ணும்படி தன் சகோதரரை அழைத்தான். அவர்கள் போசனஞ் செய்து, மலையில் இராத் தங்கினார்கள்.

௫௫. லாபான் அதிகாலையிலெழுந்து தன் புத்திர புத்திரிகளை முத்தமிட்டு, அவர்களை ஆசீர்வதித்தான். பின்பு லாபான் புறப்பட்டு, தனது இடத்துக்குத் திரும்பினான்.

## ௩௨. அதிகாரம்.

*௧. யாக்கோபு தரிசனை பெறல்: ஏசாவுக்கு நயமொழி கூறியனுப்பல்: ௬. தூதர் திரும்பி வரல்: யாக்கோபு பிரார்த்தித்தல்: காணிக்கையை ஆயத்தப்படுத்தல்: ௰௩. அதை அனுப்பல்: ௨௪. யாக்கோபு தேவ தூதரோடும் மல்லயுத்தஞ்செய்தல்: ௩௧. பெனியேலைக் கடத்தல்.*

௧. பின்பு யாக்கோபு பிரயாணம் பண்ணு

கையில் தேவதூதர்கள் அவனைச் சந்தித்தார்கள்.

௨. யாக்கோபு அவர்களைக் கண்டபொழுது, இது தேவனுடைய சேனையென்று சொல்லி, அந்த ஸ்தானத்துக்கு மக்னாயிம் என்று பேரிட்டான்.

௩. யாக்கோபு தூதர்களை அழைத்து, நீங்கள் என் ஆண்டவனாகிய ஏசாவினிடத்துக்குப் போய், நான் இதுவரைக்கும் லாபானிடத்தில் தங்கி இருந்தேனென்றும்,

௪. எனக்கு எருதுகளும், கழுதைகளும், ஆடுகளுமன்றிப் பணிவிடைக்காரரும், பணிவிடைக்காரிகளும், உண்டென்றும், உமது தயவு எனக்குக் கிடைக்கத்தக்கதாக, என் ஆண்டவனாகிய உமக்கு அறிவிக்கும்படி செய்தி அனுப்பினேனென்றும் ; உம்முடைய தாசனாகிய யாக்கோபு சொல்லச் சொன்னானென்கிறதாய்ச் சொல்லும்படி, கட்டளையிட்டு ;

௫. ஏதோம் நாட்டிலுள்ள சேயீர்என்னும் ஊரிலிருக்கிற தன் சகோதரனாகிய ஏசாவினிடத்திற்கு அவர்களைத் தனக்குமுன்னே அனுப்பினான்.

௬. அந்தத் தூதர்கள் யாக்கோபினிடத்திற்குத் திரும்பி வந்து, நாங்கள் உம்முடைய சகோதரனாகிய ஏசாவினிடத்திற்குப் போய் வ

ந்தோம்; அவரும் நானூறு பேருடனே உம்மை எதிர்கொள்ள வருகிறார் என்றார்கள்.

எ. அப்பொழுது யாக்கோபு மிகவும் பயந்து வியாகுலப்பட்டு, ஏசாவு ஒரு பகுதியைமுறிய அடித்தாலும், மற்றப்பகுதி தப்பும்படி,

அ. தன்னிடத்திலிருந்த சனங்களையும், ஆடு மாடுகளையும், ஒட்டகங்களையும் இரண்டு பகுதியாகப் பிரித்தான்.

கூ. பின்பு யாக்கோபு என் பிதாவாகிய ஆபிரகாமின் தேவனும், என் பிதாவாகிய ஈசாக்கின் தேவனுமாயிருக்கிறவரே, உன் தேசத்திற்கும், உன் சுற்றத்தாரிடத்திற்கும், நீ திரும்பிப்போ, உனக்கு நன்மைசெய்வேன் என்று என்னுடனே சொல்லியிருக்கிற யேகோவாவே,

௰. அடியேனுக்கு நீர் காட்டிய எந்தத் தயைக்கும், சத்தியத்திற்கும் நான் பாத்திரனல்ல; நான் என் கோலோடே இந்தயோர்தான் நதியைக் கடந்து போனேன். இப்பொழுது இவ்விரு பகுதிப் பரிவாரங்களையும் உடையவனானேன்.

௰க. என் சகோதரனாகிய ஏசாவு வந்து என்னையும், பிள்ளைகளையும், தாய்மார்களையும் முறிய அடிப்பான் என்று அஞ்சுகிறேன். ஆதலால் அவனுடைய கையில் நின்றும் என்னை இரட்சித்துக்கொள்ளும்.

௰௨. நான் உனக்கு மெய்யாகவே நன்மை செய்து, மிகுதியினால் எண்ணிறந்த கடற்கரை மணலைப் போல உன் சந்ததியைப் பெருகப் பண்ணுவேன் என்று சொன்னீரே என்றான்.

௰௩ அன்றிரவில் அவன் அங்கே தங்கி, தன் சகோதரனாகிய ஏசாவுக்கு வெகுமதியாக, தன் கைவசத்திலுள்ளவற்றில்,

௰௪. இருநூறு வெள்ளாடுகளையும், இருபது வெள்ளாட்டுக் கடாக்களையும், இருநூறு செம்மறியாடுகளையும், இருபது ஆட்டுக் கடாக்களையும்,

௰௫. பால் கொடுக்கும் முப்பது ஒட்டகங்களையும், அவைகளின் கன்றுகளையும், நாற்பது கடாரிகளையும், பத்துக் காளைகளையும், இருபது பெட்டைக் கழுதைகளையும், பத்துக் கழுதைக் குட்டிகளையும் பிரித்து,

௰௬. தன் பணிவிடைக்காரர் ஒவ்வொருவரிடத்தில் ஒவ்வொரு கூட்டத்தை ஒப்பித்து, நீங்கள் கூட்டத்துக்கும் கூட்டத்துக்கும், இடைவெளி விட்டு, என் முன்னேநடத்திக்கொண்டு போங்கள் என்று அவர்களுடனே சொன்னான்.

௰௭. அன்றியும் முன்னே போகிறவனை நோக்கி, என் சகோதரனாகிய ஏசாவு உனக்கு எதி

ர்ப்பட்டு, நீ யாருடையவன்? எங்கே போகிறு ய்? உனக்கு முன் போகிறவை யாருடைய வை என்று உன்னிடத்திற் கேட்டால்,

௰அ. நீ இவை உமதடியானுகிய யாக்கோ பினுடையவை. இவை என் ஆண்டவன் ஏ சாவுக்கு அனுப்பப்பட்டிருக்கிற வெகுமதி. பாரும், அவனும் எங்கள் பின்னே வருகிறுன் என்று சொல்லும்படி கட்டளையிட்டான்.

௰கூ. பின்பு இரண்டாம் பகுதியில் போகிற வனையும், மூன்ரும் பகுதியில் போகிறவனையு ம், கூட்டங்களின் பின்னே போகும் அனைவ ரையும் நோக்கி, நீங்களும் ஏசாவைக் காணு ம் பொழுது,

உ௰. உமதடியானுகிய யாக்கோபு எங்கள் பின்னே வருகிறுன் பாரும் என்று சொல்லி, முன் குறித்த அந்தப் பிரகாரமுஞ் சொல்லுங்க ள் என்று கட்டளையிட்டான். முன்னே வெ குமதியை அனுப்பி, அவனைச் சாந்தப்படுத்தி ப் பின்பு அவனுடைய முகத்தைக் காண்பே ன். அப்பொழுது அவன் என்னை அங்கிகரிக்க வுங் கூடுமென்று சொன்னுன்.

உக. அந்தப்படி வெகுமதி அவனுக்கு மு ன் போயிற்று. அவனே அன்றிரவு பாளயத்தி ல் தங்கினுன்.

உஉ. பின்பு அன்றிரவிலே தானே எழுந்து,

தன் இரண்டு மனைவிகளையும், தன்னிரண்டு பணிவிடைக்காரிகளையும், தன்னுடைய பதினொருபுத்திரரையுங் கூட்டிக்கொண்டு, யாப்போக்கு ஆற்றின் துறையைக் கடந்தான்.

௨௩. அவர்களையுஞ் சேர்த்து ஆற்றுக்கப்புறப்படுத்தினதுமன்றி, தனக்குண்டானவற்றையும் அக்கரைப்படுத்தினான்.

௨௪. யாக்கோபு தனியேயிருந்தான். ஒருவர், பொழுது விடியுமளவும், அவனுடனே மல்லயுத்தஞ் செய்து, அவனைச்செயிக்கக் கூடாதென்று கண்டு, அவனுடைய இடுப்புச் சந்தைத் தட்டினார்.

௨௫. இவ்வண்ணம், அவருடனே போராடுகையில், யாக்கோபின் இடுப்புச்சந்து சுளுக்கிற்று.

௨௬. பின்பு அவர், என்னைப் போகவிடு. பொழுது விடிகின்றதென்றுசொல்ல, இவன், நீர் என்னை ஆசீர்வதித்தாலொழிய, உம்மைப் போகவிடேனென்றான்.

௨௭. அவர், உன்பெயர் என்னவென்றுகேட்க, இவன் யாக்கோபு என்றான்.

௨௮. அவர், நீ ஒரு பிரபுவைப்போல தேவனைச் செயித்ததுமன்றி, மனிதனையுஞ் செயிப்பாய். ஆதலால் உன்பெயர் இனி யாக்கோ

பேன்று வழங்கப்படாமல், இஸ்ரவேல் என்று வழங்கப்படுமேன்றார்.

உகூ. யாக்கோபு, உமது நாமத்தை எனக்கு அறிவிக்க வேண்டுமேன்றுகேட்க, அவர் நீ என் நாமத்தைக் கேட்பானேன் என்று சொல்லி, அங்கே அவனை ஆசீர்வதித்தார்.

௩௰. யாக்கோபு, நான் முகமுகமாயத் தேவனைத் தரிசித்தேன்; என்சீவன் இரட்சிக்கப்பட்டதேன்று சொல்லி, அந்தஸ்தானத்துக்குப் பெனியேல் என்று பேரிட்டான்.

௩க. பெனியேலை அவன்கடநதுபோகையில், சூரியன் உதயமாயிற்று. அவன் இடுப்புச்சந்துவாங்கலாயிருந்தான்.

௩உ. அவர் யாக்கோபினுடைய இடுப்பின்சந்து நரம்பைத்தொட்டபடியால், இஸ்ரவேல்சந்ததியார், இந்நாள் வரைக்கும், இடுப்பின் சந்திலிருக்கிற நரம்பைப் புசியாதிருக்கிறார்கள்.

## ௩௩. அதிகாரம்.

*க. யாக்கோபு ஏசாவைச் சந்தித்தல்: ௰௬. யாக்கோபு சுக்கோத்திற் சேர்தல்: ௰௮. யாக்கோபு ஷிகேம் ஊரில் ஓர் நிலம் வாங்கி அங்கே வேதிகையையுண்டாக்கல்.*

க. யாக்கோபு கண்ணேறிட்டுப் பார்த்து,

ஏசாவு நானூறுபேருடனே வருவதைக் கண்டான். அப்பொழுது அவன் பிள்ளைகளை, லேயாளிடத்திலும், ராகேலிடத்திலும், இரண்டு பணிவிடைக்காரிகளிடத்திலும் பிரித்துவைத்து,

௨. பணிவிடைக்காரிகளையும், அவர்கள் பிள்ளைகளையும், முதலிலும்; லேயாளையும், அவள் பிள்ளைகளையும், இடையிலும்; ராகேலையும், யோசேப்பையும், கடைசியிலும் நிறுத்தி,

௩. தான் அவர்களுக்கு முன்பாக நடந்துபோய், பூமிக்கு நேராக ஏழுதரந் தாழ்ந்து வணங்கி, தன் சகோதரனைச் சமீபித்தான்.

௪. ஏசாவு எதிர்கொண்டோடிவந்து, அவனைத் தழுவி, அவனுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு முத்தஞ்செய்தான். இருவரும் அழுதார்கள்.

௫. அவன் பார்வை செலுத்திப்பார்த்து, ஸ்திரிகளையும், பிள்ளைகளையுங் கண்டு, உன்னுடனே வந்த இவர்கள் ஆரென்றான். அதற்கு இவன் தேவன் உமதடியானுக்கருளிய பிள்ளைகளென்றான்.

௬. பின்பு பணிவிடைக்காரிகளும், அவர்கள் பிள்ளைகளுஞ் சேர்ந்து வணங்கினார்கள்.

௭. லேயாளும் அவள் பிள்ளைகளுஞ் சேர்

ந்து வணங்கினார்கள். பின்பு யோசேப்பும் ராகேலும் சேர்ந்து வணங்கினார்கள்.

அ. அப்பொழுது அவன், எனக்கெதிரே வந்த கூட்டமெல்லாங் கண்டேன். இது என்னவென்றான். அதற்கு இவன், என் ஆண்டவனாகிய உமது தயை பெறும்படியாகவென்றான்.

கூ. ஏசாவு என் சகோதரனே, எனக்குள்ளது எனக்குப் போதும். உன்னுடையது உன்னிடத்தில் இருக்கட்டும் என்றான்.

ய. அதற்கு யாக்கோபு அப்படியல்ல; உமது தயை என்மேலுண்டானால், என் வெகுமதியை என் கையிலிருந்து ஏற்றுக்கொள்ளும். நீர் என்மேல் அன்பாயிருக்கிறீர். நான் உமது முகத்தைத் தரிசித்தது, தேவனுடைய முகத்தைத் தரிசித்ததுபோலாயிற்று.

யக. உமக்குக் கொண்டுவரப்பட்ட என் வெகுமானத்தை ஏற்றுக்கொள்ளும். தேவன் எனக்கு அருள் செய்திருக்கிறாரே. சம்பூரணமாய் எனக்கிருக்கிறதேயென்று சொல்லி மிகவும் அவனை வருந்திக் கேட்டுக்கொண்டான். அதனால் அவன் அதை ஏற்றுக்கொண்டான்.

யஉ. பின்பு அவன், புறப்பட்டுப்போவோம். நான் உனக்கு முன் நடப்பேனென்றான்.

௰௩. அதற்கு இவன் பிள்ளைகள் சிறுவரே ன்றும், கறவையான ஆடுமாடுகள் என்னிடத் திலுண்டென்றும், என் ஆண்டவனாகிய நீர் அ றிந்திருக்கிறீர்; அவைகளை ஒரு தினமாத்திரத் தில் வேகமாய் ஓட்டினால், ஆடுமாடுகளெல் லாஞ் செத்துப்போம்.

௰௪. என் ஆண்டவனாகிய நீர், உமதடியா னுக்கு முன்னேதான் போவீராக. நான் சே யீருக்கு என் ஆண்டவனாகிய உம்மிடத்தில் வருமளவும், எனக்கு முன் போகிற கூட்டங் களுடைய நடைக்கும், பிள்ளைகளுடைய ந டைக்குந்தக்கதாக, மெள்ள அவைகளை நட த்திக்கொண்டு வருகிறேனென்று சொன்னான்.

௰௫. ஏசாவு என்னிடத்திலிருக்கிற சனங்க ளிற் சிலரை நான் உன்னிடத்தில் விடுகிறே னென்று சொல்ல, அவன் அப்படிச் செய்ய வேண்டியதென்ன? என் ஆண்டவனாகிய உ மது தயை என்மேலுண்டானாற் போதுமே ன்றான்.

௰௬. ஏசாவு அந்தத் தினத்தில் திரும்பித் தா ன் வந்த வழியே சேயீருக்குப் போனான்.

௰௭. யாக்கோபு சுக்கோத்தென்னும ஸ்தல த்திற் போய், தனக்கொரு வீடு கட்டினதுமன் றி, தன் ஆடுமாடுகளுக்குக் குடிசைகளையும் உண்டுபண்ணினான்; அதினால் அந்த ஸ்தலத்

துக்குச் சுக்கோத்தென்று பெயரிடப்பட்டது.

௰௮. யாக்கோபு, பதானாராமை விட்டு வந்த பின் கானான் தேசத்திலுள்ள ஷாலேம் என்னுஞ் ஷிகேமினுடைய பட்டணத்திற் கருகே சென்று, அதற்கெதிரே கூடாரத்தைப் போட்டான்.

௰௯. தான் கூடாரம்போட்ட வெளியிலே ஷிகேமின் பிதாவாகிய காமோர் புத்திரரிடத்திலே நூறு வெள்ளிக்காசுக்கு ஒரு நிலத்தை வாங்கினான்.

௨௰. அவ்விடத்தில் ஒரு வேதிகையை உண்டாக்கி, அதற்கு எல் எலோகே இஸ்ரவேலென்று பேரிட்டான்.

## ௩௪. அதிகாரம்.

க. ஷிகேம் என்பவனோடே தீனாள் நெறிகேடாயொழுகல்: விருத்தசேதனத்துக் குடன்படும்படி பேசல்: ௨௰. காமோரும் ஷிகேமும், சனங்களிடத்தில் பேசினமையால் அவர்கள் விருத்தசேதனத்துக் குடன்பட்டல்: ௨௫. சனங்கள் விருத்தசேதனத்தினால் வாதையாயிருக்கையில் யாக்கோபின் புத்திரர் இருவரும் அவர்கள் மேல் விழுந்து கோல்லலும் கொள்ளையாடலும்: ௩௰. யாக்கோபு ஷிமியோனையும் லேவியையுங் கண்டித்தல்.

க. யாக்கோபுக்கும், லேயாளுக்கும், புத்தி

ரியாகிய தீனாள் அந்தத் தேசத்துக் கன்னிகை களைக் காணப் புறப்பட்டாள்.

௨. அவளை ஈவியனான காமோர் என்னும் அந்தத் தேசத்து அதிபதியின் புத்திரனாகிய ஷிகேம் கண்டு, அபகரித்து, அவளுடனே சயனித்து, அவளை மானபங்கப்படுத்தினான்.

௩. அவனுடைய மனம் யாக்கோபின் புத்திரி தீனாளின் மேல் பதிந்திருந்தது. அவன் அந்தப் பெண்ணை நேசித்து அவள் மனதுக்கு இங்கிதமாகப் பேசிக்கொண்டுவந்தான்.

௪. மேலும் ஷிகேம் தன் பிதாவாகிய காமோரை நோக்கி, இந்தப் பெண் எனக்கு மனைவியாயிருக்கும்படி செய்யவேண்டுமென்று சொன்னான்.

௫. யாக்கோபு தன் புத்திரியாகிய தீனாளை அவன் அசுசிப்படுத்தினதைக் கேள்விப்பட்டான். அப்பொழுது அவன் புத்திரர் வயல் வெளியில் அவனுடைய மந்தையினிடத்திலிருந்தார்கள். அவர்கள் வருமளவும் யாக்கோபு பேசாமலிருந்தான்.

௬. அத்தருணத்தில் ஷிகேமின் பிதாவாகிய காமோர் புறப்பட்டு யாக்கோபோடே பேசும்படி அவனிடத்தில் வந்தான்.

௭. யாக்கோபின் புத்திரரும் நடந்ததைக் கேள்விப்பட்டமாத்திரத்தில், வயல் வெளி

யை விட்டுவந்தார்கள். அவன் யாக்கோபின் புத்திரியோடே இஸ்ரவேலுக்கு விரோதமாய்ப் பலாற்காரமாய்ச் சயனித்து, செய்யத்தகாத துர்ச்செய்கையைச் செய்ததைக்குறித்து அந்த மனிதர் மனம் நொந்து மிகவுங் கோபங்கொண்டார்கள்.

அ. காமோர் அவர்களோடே சம்பாஷித்துக்கொண்டு, என்புத்திரனாகிய ஷிகேமினுடைய மனது உங்கள் புத்திரியைப் பற்றிக்கொண்டிருக்கின்றது. ஆகையால் அவளை அவனுக்கு மனைவியாகக்கொடுக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.

கூ. உங்கள் குமாரத்திகளை எங்களுக்குள்ளே கொடுத்தும், எங்கள்குமாரத்திகளை உங்களுக்குள்ளே கொண்டும், இப்படி எங்களுடனே சம்பந்தமாயிருங்கள்.

௰. எங்களுடனே வாசம்பண்ணுங்கள். இந்தத்தேசம் உங்கள்முன்பாக இருக்கின்றது. இதில் வாசம்பண்ணி வியாபாரஞ்செய்து, பொருளைச் சேர்த்துக்கொள்ளுங்களென்றுசொன்னான்.

௰௧. ஷிகேமும், அவளுடைய பிதாவையும், அவள் சகோதரரையும்நோக்கி, உங்கள்தயை எனக்குக்கிடைக்கவேண்டும். நீங்கள் என்னிடத்தில் எதைக்கேட்டாலுந் தருவேன்.

௰௨. பரிசமும், நன்கொடையும் நீங்கள் என்னிடத்தில் எவ்வளவுகேட்டாலும், உங்கள்சொற்படி தருவேன்: அந்தப்பெண்ணை எனக்கு மனைவியாகக் கொடுக்கவேண்டுமென்று சொன்னான்.

௰௩. யாக்கோபின் புத்திரர் தங்கள் சகோதரியாகிய தீனாளை, ஷிகேம் அசுசிப்படுத்தினதினிமித்தம், அவனுக்கும், அவன்பிதாவாகிய காமோருக்கும் சூதான மறுமொழியாக,

௰௪. விருத்தசேதனமில்லாத மனிதனுக்கு எங்கள் சகோதரியை நாங்கள்கொடுக்கிறது எங்களாலாகாது. அது எங்களுக்கு நிந்தையாயிருக்கும்.

௰௫. நீங்களும், உங்களுக்குள்ளிருக்கிற ஆண்மக்களனைவரும், விருத்தசேதனம் பண்ணப்பட்டு, எங்களைப்போலாவீர்களாகில், நாங்கள் சம்மதித்து,

௰௬. உங்களுக்கு எங்கள் குமாரத்திகளைக் கொடுத்தும், உங்கள் குமாரத்திகளை நாங்கள் கொண்டும், ஒரேகூட்டமாக வாசம்பண்ணுவோம்.

௰௭. விருத்தசேதனம் பண்ணிக்கொள்வதற்கு எங்கள் சொற்கேளாமல் போவீர்களாகில், நாங்கள் எங்கள் குமாரத்தியை அழைத்து

க் கொண்டுபோய்விடுவோமென்று சொன்னார்கள்.

௰௮. அவர்களுடைய வாக்கினாலே காமோரும், காமோரின் புத்திரனாகிய ஷிகேமும், சந்தோஷப்பட்டார்கள்.

௰௯. அந்த வாலியன் யாக்கோபினுடைய குமாரத்தியை மிகவும் விரும்பினதினால், அவன் அதைச்செய்வதில் தாமதப்படவில்லை. அவன் தன் பிதாவின் குடும்பத்தாரனைவருக்குள்ளும் அதிக மேன்மையுள்ளவன்.

௨௰. காமோரும் அவன்புத்திரன் ஷிகேமும், தங்கள் பட்டணவாசலிற்சென்று, தங்கள் பட்டணத்து மனிதருடனே சம்பாஷித்துக் கொண்டு,

௨௧. அந்தமனிதர் நம்முடனே சமாதானமாயிருக்கிறார்கள். ஆகையால் அவர்கள் இந்த் தேசத்தில் வாசம்பண்ணி இதிலே வியாபாரஞ் செய்வார்களாக. இந்தத் தேசம் அவர்களும் வசித்திருக்க விஸ்தாரம்போதுமே. அவர்களுடைய குமாரத்திகளை நமக்குமனைவிகளாக்கிக்கொள்ளவும், நம்முடைய குமாரத்திகளை அவர்களுக்குக் கொடுக்கவுங்கடவோம்.

௨௨. விருத்தசேதனத்தையுடைய அந்தமனிதரைப்போல, நம்மிலுள்ள ஆண்மக்களனைவரும், விருத்தசேதனம் பண்ணப்பட்டா

ல், அவர்கள் நம்முடனே ஒரே சனமாக வாசம் பண்ணுவதற்குச் சம்மதிப்பார்கள்.

௨௩. அவர்களுடைய பொருள்கள் ஆடுமாடுகள் மிருகசீவன்கள்யாவும், நமக்குங் கிடைக்குமல்லவா? அவர்களுக்குச் சம்மதித்தோமாகில், நம்முடனே வாசம்பண்ணுவார்களென்றூர்கள்.

௨௪. அப்பொழுது காமோரின் பட்டணவாசலிற் புறப்பட்டுவரும் அனைவரும், அவனுடைய சொல்லையும், அவன்புத்திரனுகிய ஷிகேமின் சொல்லையுங் கேட்டு, ஆண்மக்கள் யாவரும் விருத்தசேதனம் பண்ணப்பட்டார்கள்.

௨௫. மூன்றும் நாளில் யாக்கோபின் புத்திரரும் தீனளின் சகோதரருமான ஷிமியோன், லேவி, என்னுமிவ்விருவரும், தன் தன் கத்தியையெடுத்துக்கொண்டு, துணிகரமாய் அந்தப் பட்டணத்துக்குள்ளேபுகுந்து, அந்தப்புருஷர் வருத்தமாயிருக்கையில், அவர்கள் யாவரையுங்கொன்றூர்கள்.

௨௬. காமோரையும், அவன் குமாரன் ஷிகேமையும், கத்திவாயினலே கொலைசெய்து, ஷிகேமின் வீட்டிலிருந்த தீனளை அழைத்துக்கொண்டு போனூர்கள்.

௨௭. மேலும் யாக்கோபின் புத்திரர் தங்கள் சகோதரியை அசுசிப்படுத்தினதின் நிமித்தம்,

உ௭. வெட்டுண்டவர்களிடத்திற் சேர்ந்து, பட்டணத்தைக் கொள்ளையிட்டார்கள்.

உகூ. அவர்களுடைய பட்டணத்திலும் வயல்வெளியிலுமுள்ள ஆடுமாடுகளையும், கழுதைகளையுங்கவர்ந்து, அவர்களுடைய குழந்தைகளையும், ஸ்திரிகளையுஞ் சிறைபிடித்து, பொருள் முழுவதையும், வீட்டிலுள்ள சகலத்தையுங் கொள்ளையிட்டார்கள்.

௩௰. அப்பொழுது யாக்கோபு ஷிமியோனையும், லேவியையும்நோக்கி, இந்தத் தேசத்திலுள்ள கானானியருக்குள்ளும், பெரீசியருக்குள்ளும்,நீங்கள் என்னைஒர்துர்க்கந்தம்போலாக்கினதினால் என்னைக் கலங்கப்பண்ணினீர்கள். என்னைச்சேர்ந்த சனங்கள் சிலரென்று, எனக்கு விரோதமாயெழும்பிக் கூட்டங்கூடி, நானும் என்குடும்பமும் அழியும்படி, என்னைச் சேதிப்பார்களென்று சொன்னான்.

௩க. அதற்கு அவர்கள் எங்கள் சகோதரியை, அவர்களொரு வேசையைப்போல, நடத்தலாமா, என்றார்கள்.

## ௩ரு. அதிகாரம்.

க. தேவன் யாக்கோபைப் பெத்தேலுக்கு அனுப்பல்: உ. அவன் தன் குடும்பத்திலுள்ள விக்கிரகங்களை அகற்றல்: ௩. அங்கே ஓர் வேதிகையை உண்டாக்க

ல்: தெபோராளின் மரணம்: ௯. தேவன் பெத்தே லிலே யாக்கோபை ஆசீர்வதித்தல்: ௰௬. மிகவும் பிரசவ வேதனைப்பட்டு ராகேல் மரித்தல்: ௨௧. யா க்கோபின் வமிச வரலாறு: ௨௭. ஈசாக்கு மரித்து அடக்கம் பண்ணப்படல்.

௧. தேவன் யாக்கோபை நோக்கி, நீ எழுந்து பெத்தேலுக்குப் போய்த் தங்கி, முன்னே நீ உன் சகோதரனாகிய ஏசாவின் முகத்துக்குத் தப்பி ஓடின காலத்தில், உனக்குத் தரிசனமா ன தேவனுக்கு அங்கே ஒரு வேதிகையை உ ண்டுபண்ணென்று சொன்னார்.

௨. அப்பொழுது யாக்கோபு தன் குடும்பத் தாரையும், தன்னிடத்தில் உள்ள மற்ற யாவ ரையும் நோக்கி, உங்களுக்குள்ளிருக்கிற அந் நிய தெய்வங்களை அகற்றி, உங்கள் வஸ்திரங் களை மாற்றி, உங்களைச் சுத்திசெய்யுங்கள்.

௩. நாம் எழுந்து பெத்தேலுக்குப் போவோ ம் வாருங்கள். எனக்கு ஆபத்து நேரிட்ட நா ளில், என் பிரார்த்தனையைக் கேட்டு, நான் ந டந்த வழியில் என் பட்சமாயிருந்த தேவனு க்கு ஒரு வேதிகையை உண்டுபண்ணுவேன் என்று சொன்னான்.

௪. அவர்கள் தங்கள் கைவசத்திலுள்ள அ ந்நிய தெய்வங்கள் யாவையும், தங்கள் காது களின் அணியாகிய குழைகளையும் யாக்கோபி ன் வசம் ஒப்பித்தார்கள். அவைகளை யாக்

கோபு ஷிகேமின் பட்டணத்தருகே நின்ற ஒ ரு அல்லோன் மரத்தின் கீழே புதைத்தான்.

ரு. பின்பு அவர்கள் பிரயாணமாய்ப் புறப் பட்டார்கள். நான்கு திசையில் இருக்கிற ப ட்டணங்களில் உள்ளவர்கள் தேவனால் பய மடைந்ததின் நிமித்தம், யாக்கோபின் புத்திர ரைத் தொடராதிருந்தார்கள்.

சு. யாக்கோபு தன்னுடனிருந்த சனங்கள் யாவரோடும், கானான் தேசத்திலுள்ள பெத் தேலாகிய லூசூரிலே சேர்ந்தான்.

எ. அங்கே அவன் ஒரு வேதிகையை உண் டாக்கி, தான், தன் சகோதரன் முகத்திற்குத் தப்பி ஓடின பொழுது, அங்கே தனக்குத் தே வன் தரிசனமானபடியால், அத்தலத்துக்கு எ ல்பெத்தேல் என்று பேரிட்டான்.

அ. ரிபெக்காளின் தாதியாகிய தெபோரா ள் மரித்து, பெத்தேலுக்குச் சமீபமான ஒரு அல்லோன் மரத்தின் கீழ் அடக்கம் பண்ணப் பட்டாள். அதினால் அதற்கு அல்லோன்பாகு த்து என்னும் பேராயிற்று.

கூ. யாக்கோபு பதானாராமிலிருந்து வருகை யில், தேவன் திரும்பவும் தரிசனமாகி, அவ னை ஆசீர்வதித்தார்.

௰. அன்றியுந் தேவன் அவனை நோக்கி, இ ப்பொழுது உன் பேர் யாக்கோபு. இனி உன்

பேர் யாக்கோபென்று வழங்காமல், இஸ்ரவே லென்று வழங்குமென்று சொல்லி, அவனுக் கு இஸ்ரவேலென்னும் நாமஞ் சூட்டினார்.

௰க. பின்பு தேவன் அவனை நோக்கி, நான் சருவ வல்லமையுள்ள தேவன். நீ பல்கிப் பெருகுவாயாக. ஒரு சாதியார் மாத்திரமல்ல, பல சாதியாரும் உன்னில் இருந்து தோன்றுவா ர்கள். இராசாக்களும் உன் வழியாய்ப் பிறப் பார்கள்.

௰உ. நான் ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், அளித்த தேசத்தை உனக்கும் அளிப்பேன். உன் பின் சந்ததிக்கும் இத்தேசத்தை அளிப் பேன் என்று சொன்னார்.

௰௩. தேவன் அவனுடனே சம்பாஷித்த ஸ்த லத்தில் நின்று அவனை விட்டு எழுந்தருளினார்.

௰௪. அப்பொழுது யாக்கோபு தன்னுடனே அவர் சம்பாஷித்த ஸ்தலத்தில், ஒரு கற்றூணை நிறுத்தி, அதின் மேற் பானபலியைச் சொரிந் ததுமன்றி, எண்ணெய்யையும் ஊற்றினான்.

௰௫. யாக்கோபு தேவன் தன்னுடனே சம் பாஷித்த அந்த ஸ்தலத்துக்குப் பெத்தேலென் று பேரிட்டான்.

௰௬. பின்பு அவர்கள் பெத்தேலை விட்டுப் பிரயாணமாய்ப் போனார்கள். எப்ருத்தாவுக் குச் சற்றுத் தூரமாகிய ஒரு இடத்தில், ராகே

ல் பிரசவித்தபோழுது, மிகவும் வேதனைப்ப
ட்டாள்.

யஎ. பிரசவகாலத்தில், அவளுக்கு மிகுந்த
வேதனையுண்டாயிருக்கையில், மருத்துவிச்சி
அவளுடனே நீ பயப்படவேண்டாம். இந்த
முறையும் புத்திரனைப்பெறுவாயென்று சொ
ன்னாள்.

யஅ. மரணகாலத்தில், அவள் ஆத்துமம் பிரி
யுமளவில், அவள் அவனுக்குப் பெனோனி எ
ன்று பேரிட்டாள். அவனுடைய பிதாவோ அ
வனுக்குப் பேன்யாமீன் என்று பேரிட்டான்.

யகூ. ராகேல் மரித்துப் பெத்லகேம் என்ற
எப்ருத்தூருக்குப் போகிற வழியில் அடக்க
ம்பண்ணப்பட்டாள்.

உய. யாக்கோபு அவள் பிரேதக்குழியில் ஒ
ரு தூணை நிறுத்தினான். அதற்கு இந்நாள்வ
ரைக்கும் ராகேலின் பிரேதக்குழித்தூண் என்
னும் பேர் வழங்கி வருகின்றது.

உக. இஸ்ரவேல் பிரயாணமாய்ப் போய்,
ஏதேர் என்னுங் கோபுரத்துக்கு அப்புறத்தே
தன் கூடாரத்தைப் போட்டான்.

உஉ. இஸ்ரவேல் அந்தத் தேசத்திலே தங்கி
இருக்கையில், ரூபேன் தன் பிதாவின் மறு
மனையாட்டியாகிய பில்க்காளுடனே சயனித்
தான். அதை இஸ்ரவேல் கேள்விப்பட்டான்.

௨௩. யாக்கோபின் புத்திரர் பன்னிருவர். யாக்கோபுக்குச் சேஷ்ட புத்திரனான ரூபேனும், ஷிம்யோனும், லேவியும், யூதாவும், ஈஷகாரும், செபுலோனுமாகிய இவர்கள் லேயாள் பெற்ற புத்திரர்.

௨௪. யோசேப்பு, பேன்யாமீன் என்னும் இவர்கள் ராகேல் பெற்ற புத்திரர்.

௨௫. தாண், நப்தாலி, என்னும் இவர்கள் ராகேலுடைய பணிவிடைக்காரியாகிய பில்க்காள் பெற்ற புத்திரர்.

௨௬. காத்து, ஆஷேர் என்னுமிவர்கள் லேயாளின் பணிவிடைக்காரியாகிய சில்ப்பாள் பெற்றபுத்திரர். பதானாராமில் யாக்கோபுக்கு பிறந்தபுத்திரர் இவர்களே.

௨௭. பின்பு யாக்கோபு, ஆபிரகாமும், ஈசாக்குந் தங்கி வந்த எபிரோன் என்னும் அர்பாவினுடைய ஊராகிய மம்ரேயிலிருந்த தன் பிதாவான ஈசாக்கினிடத்திற் சேர்ந்தான்.

௨௮. ஈசாக்கு விருத்தாப்பியமும், பூரணாயுசுமுள்ளவனாகி, நூற்றெண்பது வருஷஞ் சீவித்திருந்து,

௨௯. பிராணனை விட்டு மரித்துத் தன் சனங்களுடனே சேர்க்கப்பட்டான். அவனுடைய புத்திரராகிய ஏசாவும், யாக்கோபும், அவனை அடக்கம்பண்ணினார்கள்.

## ௩௬. அதிகாரம்.

*க. ஏசாவினுற்ற்ரேன்றிய காஞனியர் வமிசவரலாறு: சூ. சேயீர் மலக்குப்போய்த் தங்கல்: கூ. சேயீர் மலையிலுள்ள அவன் வமிசவரலாறு: ௰௫. அவன் புத்திரர் வழியாய்த்தோன்றிய இராசாக்களின் நாமங்கள்: உ௰. சேயீர் என்பவனுடைய வமிசவரலாறு: ௩௧. ஏதோமி இராசாக்களின் நாமங்கள்: ஏசாவினுற் ரேன்றிய இராசாக்களின் நாமங்கள்.*

க. ஏதோம் என்னும் இராசாவின் வமிசவரலாறு.

உ. ஏசாவு காஞனியர் குமாரத்திகளில் ஏத்தியஞன எலோனுக்குப் புத்திரியாகிய ஆதாளையும், ஈவியஞகிய சிபியோனுக்குப் பாட்டியும், ஆஞகின் புத்திரியுமான அகோலிபாமாளையும்,

௩. இஷ்மாவேலின் புத்திரியும் நெபாயோத்தின் சகோதரியுமான பஸ்மாத்தையும், விவாகம்பண்ணியிருந்தான்.

௪. ஆதாள், ஏசாவுக்கு எலீபாசைப்பெற்ருள். பஸ்மாத்து, ரேகுவேலைப்பெற்ருள்.

௫. அகோலிபாமாள், எயூஷையும், யாலாமையும், கோராகையும், பெற்ருள். இவர்களே காஞன்தேசத்திலே ஏசாவுக்குப்பிறந்தபுத்திரர்.

௬. அவர்களுக்குண்டான பொருள் மிகுதி

யாயிருந்ததினுல் சேர்ந்து குடியிருக்கக்கூடாமற்போயிற்று. ஆடுமாடுகளினிமித்தமும், அவர்கள் சஞ்சரித்த பூமி அவர்களைத் தாங்கக்கூடாததாயிருந்தது.

௭. ஆதலால் ஏசாவு தன் மனைவிகளையும், தன் புத்திரரையும், தன் புத்திரிகளையும், தன் வீட்டிலுள்ளயாவரையும், தன் ஆடுமாடுகளையும், மற்றச் சீவசெந்துக்கள் யாவையும், தான் கானன்தேசத்திற்சம்பாதித்த பொருள்களெல்லாவற்றையுஞ் சேர்த்துக்கொண்டு, தன் சகோதரனுகிய யாக்கோபின் முகத்துக்கு விலகி, அந்நிய தேசத்திற்குப் புறப்பட்டான்.

௮. இப்படியே ஏசாவு, சேயீர் மலையில் வாசம்பண்ணுகிறவனுனுன்.

௯. ஏசாவுக்கு ஏதோம் என்றும்பேர் சேயீர் மலையில் வசிக்கும் ஏதோமியருடைய பிதாவாகிய ஏசாவின் வமிச வரலாறும், ஏசாவின் புத்திரருடைய நாமங்களுமாவன:

௰. ஏசாவின் மனைவியாகிய ஆதாளுடைய புத்திரனுக்கு எலீபாசென்றுபேர். ஏசாவின்மனைவியாகிய பஸ்மாத்தின் புத்திரனுக்கு ரேகுவேல் என்றுபேர்.

௰௧. எலீபாசின் புத்திரர் தேமான், ஓமார், செப்போ, காக்தாம், கேனுஸ், என்பவர்கள்.

௰௨. திம்னுள், ஏசாவின் புத்திரனுகிய எ

லீபாசுக்கு வைப்பாட்டியாயிருந்து, அவள் எலீபாசுக்கு அமலேக்கைப்பெற்ருள். இவர்களே ஏசாவின் மனேவியாகிய ஆதாளின் பௌத்திரர்.

௰௩. ரேகுவேலுடைய புத்திரர் நாகாத்து, சேராக், ஷம்மா, மீசா, என்பவர்கள். இவர்களே ஏசாவின் மனேவியாகிய பஸ்மாத்தின் பௌத்திரர்.

௰௪. சிபியோனுடைய பாட்டியும், ஆனுகினுடைய புத்திரியுமான அகோலிபாமாள் என்னும் ஏசாவின் மனேவி எயூஷ், யாலாம், கோராகு என்னும்புத்திரரை ஏசாவுக்குப் பெற்ருள்.

௰௫. ஏசாவின் புத்திரரில் தோன்றிய பிரபுகள் இவர்களே. ஏசாவுக்குச் சேஷ்ட புத்திரனுகிய எலீபாசினுடைய புத்திரர் தேமான் பிரபு, ஓமார் பிரபு, செப்போ பிரபு, கேனுஸ் பிரபு,

௰௬. கோராகு பிரபு, காத்தாம் பிரபு, அமலேக்கு பிரபு, என்பவர்கள். இந்தப் பிரபுகள் ஏதோம் தேசத்தில் எலீபாசின் சந்ததியும், ஆதாளின் பௌத்திரருமாயிருந்தார்கள்.

௰௭. ஏசாவின் புத்திரனுகிய ரேகுவேலின் புத்திரர், நாகாத்து பிரபு, சேராகு பிரபு, ஷம்மாபிரபு, மீசா பிரபு என்பவர்கள். இந்தப் பி

ரபுகள் ஏதோம் தேசத்தில் ரேகுவேலின் சந்ததியும் ஏசாவின் மனைவியாகிய பஸ்மாத்தின் பௌத்திரருமாயிருந்தார்கள்.

௰௮. ஏசாவின் மனைவியாகிய அகோலிபாமாளின் புத்திரர், எயுஷ்பிரபு, யாலாம் பிரபு, கோராகு பிரபு, என்பவர்கள். இந்தப் பிரபுகள் ஆனாகினுடைய புத்திரியும், ஏசாவின் மனைவியுமான அகோலிபாமாளின் புத்திரர்.

௰௯. இவர்களே ஏதோம் என்னும் ஏசாவின் சந்ததி. அவர்களின் பிரபுகளும் இவர்களே.

௨௰. அத்தேசத்தாராகிய ஓரியரில் சேயீரின் புத்திரர், லோத்தான் ஷேபால், சிபியோன், ஆனாகு,

௨௧. தீஷோன், எட்சர், தீஷான் என்பவர்கள். இவர்களே ஏதோங் தேசத்தில் ஓரியருடைய சந்ததியும் சேயீரின் புத்திரருமான பிரபுகள்.

௨௨. ஓரி, எமாம் என்பவர்கள் லோத்தானுடைய புத்திரர். திம்னாள் லோத்தானுடைய சகோதரி.

௨௩. அல்வான், மானகாத்து, எபால், ஷெப்போ, ஓனாம் என்பவர்கள் சேபாவின் புத்திரர்.

௨௪. ஆயா, ஆனா என்பவர்கள் சிபியோனு

டைய புத்திரர். ஆனு என்னும் இவன் தன் பிதாவாகிய சிபியோனுடைய கழுதைகளை மேய்க்கையில் வனாந்தரத்திலே நீரூற்றுக்களைக் கண்டடைந்தான்.

உரு. தீஷோனும், அகோலிபாமாளும், ஆனுவினுடைய பிள்ளைகள். அந்த அகோலிபாமாள், ஆனுவின் புத்திரி.

உசு. எம்தான், எஸ்பான் ஈத்தரான், கிரூன் என்பவர்கள் தீஷோனுடைய புத்திரர்.

உஎ. பில்க்கான், சவான், ஆக்கான் என்பவர்கள் எத்சேருடைய புத்திரர்.

உஅ. ஊத்ஸ், ஆரான் என்பவர்கள் தீஷோனுடைய புத்திரர்.

உகூ. ஓரியருடைய சந்ததியில் தோன்றிய பிரபுகள், சேயீர் தேசத்துப் பிரபுகளுக்குள் பிரபுகளாயிருந்தார்கள். ஓரியருடைய சந்ததியில் தோன்றிய பிரபுகள் இவர்கள். லோத்தான் பிரபு, சேபால் பிரபு, சிபியோன் பிரபு, ஆனு பிரபு,

௩௰. தீஷோன் பிரபு, எத்சேர் பிரபு, திஷான் பிரபு என்பவர்கள்.

௩க. இஸ்ரவேல் சந்ததியார்மேல் இராசாக்கள் அரசாளுவதற்கு முன்னே ஏதோம்தேசத்தை ஆண்ட இராசாக்கள் இவர்களே.

௩உ. பேயோருடைய புத்திரனாகிய பேலா

ஏதோமில் அரசாண்டான். அவனுடைய நக ரத்திற்கு, தின்காபா என்று பேர்.

௩௩. பேலா மரித்தபின் போதஸ்ரு நகரத் தானும் சேராகின் புத்திரனுமான யோவாப் அவனுடைய பட்டத்திற்கு வந்தான்.

௩௪. யோவாப் மரித்தபின் தேமானின் தே சத்தானாகிய ஊஷாம் அவனுடைய பட்டத் திற்கு வந்தான்.

௩௫. ஊஷாம் மரித்தபின் மோவாபின்நா ட்டிலே மீதியானியரை முறிய அடித்துப் பே தாத்தின் புத்திரனாகிய ஆதாத் அவனுடைய பட்டத்திற்கு வந்தான். அவனுடைய நகரத் திற்கு ஆவீத் என்றுபேர்.

௩௬. ஆதாத் மரித்தபின் மஸ்ரேக்கா என் னும் பட்டணத்தானாகிய சம்லா அவனுடை ய பட்டத்துக்கு வந்தான்.

௩௭. சம்லா மரித்தபின் அங்கே இருக்கிற நதிக்குச் சமீபமான ரேகோபோத் என்னும் நகரத்தானாகிய சவுல் அவனுடைய பட்டத்தி ற்கு வந்தான்.

௩௮. சவுல் மரித்தபின் அக்போருடைய புத்திரனாகிய பாகால் ஆனான் அவனுடைய பட்டத்திற்கு வந்தான்.

௩௯. அக்போருடைய புத்திரனாகிய பாகா ல் ஆனான் மரித்தபின் ஆதார் அவனுடைய ப

ட்டத்திற்கு வந்தான். அவனுடைய நகரத்தி ற்குப் பாகுவென்றுபேர். மதரேத்தினுடை ய புத்திரியும், மேசகாவினுடைய பௌத்திரி யுமான மெகேதாபேல் அவனுடையமனைவி.

சய. வமிசமும், ஸ்தானமும், நாமமும், வெவ்வேருயுள்ள ஏசாவின் சந்ததியில் பிரபு களின் நாமங்களாவன திம்ஞபிரபு, அல்வாபி ரபு, எத்தேத்பிரபு,

சக. அகோலிபாமாபிரபு, ஏலாபிரபு,

சஉ. பீநோன்பிரபு, கேனஸ் பிரபு, தேமா ன் பிரபு, மிப்சார்பிரபு,

சங. மக்தியேல் பிரபு, ஈராம் பிரபு, என்ப னவே. இவர்களே தாங்கள் ஆண்டுவருந் தே சத்து இராசதானியில் வசிக்கும் ஏதோம் சந்த தியின்பிரபுகள். ஏசாவே ஏதோமியரின் பிதா.

## ௩௭. அதிகாரம்.

*க. யோசேப்பின்மேல் அவன் சகோதரர் பொருமை கொள்ளல் : ரு. யோசேப்பு கனவுகாண்டல் : கூ. யாக்கோபு யோசேப்பை அவன் சகோதரரிடத்தில் அனுப்பல் : யஉ. ஷீகேமிலே அவர்களை அவன் தேடல். யரு. அவர்களை அவன் காணல் : யஅ. யோசேப்பைக் கோல்லத் துராலோசனைசெய்தல்: உரு. இஷமாவேலரிடத்தில் அவனை விற்றல் : உகூ. யோசேப்பின் வஸ்திரத்தை இரத்தத்திற் ரேய்த்து யாக்கோபுக்குக் காட்டி அவனைத் துக்கத்தில் அமி*

ழ்த்தல் : ௩௬. எகிப்திலுள்ள போத்திபாரிடத்தில் விற்கப்படல்.

௧. யாக்கோபு தன் பிதாத் தங்கிவந்த கானான் தேசத்தில் வாசம்பண்ணினான்.

௨. யாக்கோபின் வமிச வரலாறு, யோசேப்பு, பதினேழு வயதளவிலே தன் சகோதரருடனே ஆடுகளை மேய்த்து வருவான். அந்தவாலிபன் தன் பிதாவுடைய மனைவிகளாகிய பில்காள் சில்ப்பாள் என்பவர்களின் புத்திரருடனே இருந்து, தான் அவர்களுடைய தீமையைத் தன் பிதாவுக்குத் தெரிவித்து வருவான்.

௩. தன் முதிர்ந்த வயதில் யோசேப்பு பிறந்ததினால் இஸ்ரவேல், தன் புத்திரர் எல்லாரிலும், அவனை அதிகமாய் நேசித்து, பலவர்ண வஸ்திரத்தை அவனுக்குச் செய்து கொடுத்தான்.

௪. அவன் சகோதரர் தங்களிலும், பிதா அவனை நேசித்திருப்பதைக் கண்டு, அவனைப் பகைத்து, பட்சமாய் அவனோடே பேசாதிருந்தார்கள்.

௫. யோசேப்பு ஒரு சொப்பனங் கண்டு அதைத் தன் சகோதரருக்குத் தெரிவித்தான்.

௬. அதினால் அவர்கள் அவனை அதிகமாய் வெறுத்தார்கள்.

௭. அவன் அவர்களை நோக்கி, நான் கண்ட சொப்பனத்தைக் கேளுங்கள். நாம் வயலில்

அறுத்த அரிகளைக் கட்டிக்கொண்டிருக்கையில், என் அரிக்கட்டு நிமிர்ந்ததாகவும், உங்கள் அரிக்கட்டுக்கள் என் அரிக்கட்டைச் சுற்றி வணங்கினவாகவும் கண்டேன் என்றான்.

அ. அதற்கு அவன் சகோதரர்கள் அவனை நோக்கி, நீ நிச்சயமாய் எங்களை ஆளுவாயா? நீ நிச்சயமாய் எங்கள் மேல் அரசாட்சி செலுத்துவாயா என்று சொன்னார்கள். இப்படியே அவன் சொப்பனத்தின் நிமித்தமும், சொற்களின் நிமித்தமும், மேலும் அதிகமாய் அவனை வெறுத்தார்கள்.

கூ. பின்னும் அவன் வேறொரு சொப்பனத்தைக் கண்டு, தன் சகோதரரை நோக்கி, கேளுங்கள். சூரியனுஞ், சந்திரனும், பதினொரு நட்சத்திரங்களும், என்னை வணங்கிக் கொண்டனவாக, ஒரு சொப்பனத்தைக் கண்டேன் என்று தெரிவித்தான்.

ய. இதை அவன் தன் பிதாவுக்கும், சகோதரருக்குஞ் சொல்லுகையில், அவனுடைய பிதா நீகண்ட இந்தச் சொப்பனம் என்ன? நானும் உன் மாதாவும் உன் சகோதரரும் பூமிக்கு நேரே தாழ்ந்து வணங்க வருவோமா என்று அவனைக் கடிந்தான்.

யக. அவனுடைய சகோதரர் அவன் மேற் பொறாமைகொண்டார்கள். அவன் சொன்ன

தைப் பிதாவோ சிந்தையில் வைத்தான்.

௰உ. பின்பு அவன் சகோதரர் தங்கள் பிதாவினுடைய ஆடுகளை மேய்க்க ஷிகேமுக்குப் போனார்கள்.

௰௩. அப்பொழுது இஸ்ரவேல் யோசேப்பை நோக்கி, உன் சகோதரர் ஷிகேமில் அல்லவோ மேய்க்கிறார்கள். உன்னை அவர்களிடத்துக்கு அனுப்பப்போகிறேன் வாவென்றதற்கு, அவன் அடியேனென்றான்.

௰௪. அவன் நீ போய் உன் சகோதரருடைய சுகச்செய்தியையும், ஆடுகளுடைய செழிப்பையும், பார்த்து எனக்கு அறிவியென்றுசொல்லி, தாழ்ந்த பூமியாகிய எபிரோனிலிருந்து அனுப்பினான். அவனும் ஷிகேமில் சேர்ந்தான்.

௰௫. அவன் வெளியிலே திரிகிறதை ஒரு மனிதன் கண்டு, என்ன தேடுகிறாயென்று அவனிடத்திற் கேட்க;

௰௬. அவன் என் சகோதரரைத் தேடுகிறேன்; அவர்கள் எங்கே ஆடு மேய்க்கிறார்கள். அதை எனக்கு அறிவிக்கவேண்டுமேன்றான்.

௰௭. அந்த மனிதன் அவர்கள் இவ்விடத்தில் நின்றும் போய்விட்டார்கள். தோத்தானுக்குப் போவோமென்று அவர்கள் சொல்லக் கேட்டேன் என்றான். யோசேப்பு, தன் ச

கோதரரைத் தொடர்ந்துபோய் அவர்களைத் தோத்தானில் கண்டான்.

௰அ. அவர்கள் அவனைத் தூரத்தில் வரக்கண்டு, அவன் தங்களுக்குச் சமீபமாய்ச் சேருமுன்னமே, அவனைக் கொலைசெய்யத் துராலோசனைசெய்தார்கள்.

௰கூ. ஒருவரை ஒருவர் நோக்கி, சொப்பனக்காரன் வருகிறான், பாருங்கள் ;

உ௰. நாம் அவனைக் கொன்று அந்தக் குழிகளில் ஒன்றில் போட்டு ; ஒரு துஷ்ட மிருகம் அவனைப் பட்சித்ததென்று சொல்லுவோம் வாருங்கள் ; அவனுடைய சொப்பனங்கள் எப்படியாகும் என்று பார்ப்போமென்றார்கள். ரூபேன் அதைக் கேட்டு,

உக. அவனை அவர்கள் கைக்குத் தப்புவித்து ; பிதாவிடத்திற்குத் திரும்பவுங் கொண்டுபோக மனதுள்ளவனாய்,

உஉ. அவர்களை நோக்கி, அவனைக் கொலைசெய்யப்படாது. நீங்கள் இரத்தஞ் சிந்தவேண்டாம் ; நீங்கள் அவன்மேற் கைவையாமல், இவ்வனத்திலுள்ள அந்தக் குழியில் போடுங்களென்று சொன்னான். இப்படி ரூபேன் அவர்கள் கையில் நின்று அவனைத் தப்புவித்தான்.

உ௩. யோசேப்பு, தன் சகோதரரிடத்திற்

சேர்ந்தபொழுது, யோசேப்புத் தரித்திருந்த பல வர்ண வஸ்திரத்தை அவர்கள் கழற்றி,

௨௪. அவனைப் பிடித்து ஒரு குழியில் இறக்கினார்கள். அது வெறுங்குழியாயிருந்தது. அதில் சலமில்லை.

௨௫. பின்பு அவர்கள் போசனஞ்செய்யும்படியிருக்கையில், கண்ணேறிட்டுப் பார்த்து, அங்கே கீலியாத்திலிருந்து இஷ்மாவேலரின் கூட்டம் எகிப்துதேசத்திற்குப் போகும்படி, பல சுகந்த திரவியத்தையும், குங்குலியத்தையும், வெள்ளைப் போளத்தையும், சுமந்த ஒட்டகங்களுடனே வரக்கண்டார்கள்.

௨௬. யூதா, தன்சகோதரரைநோக்கி, நம்முடைய சகோதரனைக்கொன்று, அவனுடைய இரத்தத்தை மறைப்பதினால் இலாபமென்ன?

௨௭. அவனை இந்த இஷ்மாவேலருக்கு விற்போம். நமது கையால் அவனைத்தொடப்படாது. அவன் நம்முடைய சகோதரன், நம்முடைய மாமிசமுள்ளவன் என்றுசொன்னான். அதற்கு அவனுடைய சகோதரர் சம்மதித்தார்கள்.

௨௮. அப்பொழுது அந்த வர்த்தகரான மீதியானியர் கடந்துபோகையில், இவர்கள் அந்தக் குழியிலிருந்த யோசேப்பைத் தூக்கியெடுத்

து, அவனை இஷ்மாவேலர்கையில் இருபதுவெள்ளிக்காசுக்கு விற்றார்கள். அவர்கள் யோசேப்பை எகிப்துதேசத்திற்குக் கொண்டுபோனார்கள்.

௨௯. பின்பு ரூபேன் அந்தக்குழியினிடத்திற்குத் திரும்பிப்போனபொழுது, யோசேப்பு அதிலே இல்லையென்றுகண்டு, தன்வஸ்திரங்களைக்கிழித்துக்கொண்டு,

௩௰. தன் சகோதரரிடத்திற்குத்திரும்பிப்போய், பிள்ளையில்லையே! ஐயோ! நான் எங்கேபோவேன் என்று புலம்பினான்.

௩௧. அவர்கள் யோசேப்பினுடைய அங்கியையெடுத்து, ஒருவெள்ளாட்டுக்கடாவை அடித்து, அவ்வங்கியை இரத்தத்திலே தோய்த்து,

௩௨. பலவர்ணமான அவ்வங்கியைத் தங்கள் பிதாவினிடத்திற்கு அனுப்பினார்கள். கொண்டுபோனவர்கள், இதை நாங்கள் கண்டெடுத்தோம்; இது உம்முடைய புத்திரன் அங்கியோ, அல்லவோ, பாருமென்றுசொன்னார்கள்.

௩௩. அவன் அதைக்கண்டறிந்து, இது என் புத்திரனுடைய அங்கிதான்; ஒரு துஷ்டமிருகம், அவனைப்பட்சித்தது; யோசேப்பு நிச்சயமாய்ப் பீறுண்டுபோனானென்று புலம்பி,

௩௪. தன் வஸ்திரங்களைக்கிழித்து, தன் அ

ரையில் இரட்டைக்கட்டிக்கொண்டு, தன்புத்திரன் நிமித்தம் அநேகநாள் துக்கித்துக் கொண்டிருந்தான்.

௩௫. அவனுடையகுமாரர் குமாரத்திகளெல்லாரும் வந்துநின்று, அவனுக்கு ஆறுதல்சொல்லியும், ஆறுதலடையாமல், துக்கத்தால் நானும் என் புத்திரனிடத்தில் மரித்தோர் ஸ்தலத்திற்குப் போகிறேனென்றான். இப்படி அவன் பிதா அவன் நிமித்தம் அழுதுகொண்டிருந்தான்.

௩௬. அந்த மீதியானியர் யோசேப்பை எகிப்திலே பார்வோனுடைய பிரதானியும் மெய்க்காவலருக்குத் தலைவனுமான போத்திபாருக்கு விற்றார்கள்.

## ௩௮. அதிகாரம்.

*௧. யூதாவின் புத்திரராகிய ஏர், ஓனான், ஷேலா என்னும் இம்மூவரின் விருத்தாந்தம்: ௰௨. தன் ஸ்திரி மரித்த பின் யூதா திம்னா ஊரிற் செல்லல்: ௰௫. அவன் தன் புத்திரனுக்கு நியமித்த ஸ்திரியிடத்திற் சேர்தல்: ௨௪. அவன் குற்றம் வெளிப்படல்: ௨௭. அந்தஸ்திரி பேரேஸ் சேரா என்பவர்களைப்பெறல்.*

௧. அக்காலத்திலே யூதா, தன் சகோதரரை விட்டு, அதுல்லாமியனாகிய ஈராவென்னும் ஒருவனிடத்திற்குப் போய்ச் சேர்ந்தான்.

உ. யூதா அவ்விடத்திலே ஹ்வா என்னும் பேர்கொண்ட கானானியன் ஒருவனுடைய கன்னிகையைக் கண்டு அவளைச் சேர்த்துக்கொண்டு, அவளோடே சேர்ந்தான்.

௩. அவள் கருப்பவதியாகி, ஒருபுத்திரனைப் பெற்றாள். அவனுக்கு ஏர் என்றுபேரிட்டான்.

௪. திரும்பவும் அவள் கருப்பவதியாகி ஒரு புத்திரனைப்பெற்று, அவனுக்கு ஓனான் என்று பேரிட்டாள்.

௫. பின்னும் அவள் கருப்பவதியாகி ஒருபுத்திரனைப் பெற்று, அவனுக்கு ஷேலா என்று பேரிட்டாள். அவள் இவனைப் பெற்றபோழுது, அவன் கேசீபிலேயிருந்தான்.

௬. பின்பு யூதா தாமார் என்னும் பேர்கொண்ட ஒரு கன்னிகையை, தன் மூத்த மகனாகிய ஏர் என்பவனுக்கு விவாகம் பண்ணுவித்தான்.

௭. யூதாவின் மூத்த மகனாகிய ஏர் யெகோவாவின் பார்வைக்குத் துட்டனாயிருந்ததினால் யெகோவா அவனைச் சங்கரித்தார்.

௮. அப்பொழுது யூதா, ஓனானை நோக்கி, உன்தமையனுடைய மனைவியைச் சேர்ந்து, உன் தமையனுக்குச் சந்ததி யுண்டாகச் செய்யென்று சொன்னான்.

௯. ஓனான் அந்தச் சந்ததி, தன் சந்ததியாயி

ராதேன்பதையெண்ணி, அவன் தன் தமைய னுடைய மனைவியைச் சேரும்பொழுது, தன் தமையனுக்குத் தன்னாலே சந்ததி யுண்டாகா தபடி, அதைத் தரையிலே விழவிட்டுக் கெடுத் தான்.

௰. அவன் செய்த அந்தக் காரியம், யெகோ வாவின் பார்வைக்குத் தீங்காயிருந்ததினால் அவர் அவனையுஞ் சங்கரித்தார்.

௰௧. யூதா தன், புத்திரனாகிய ஷேலாவும் அவன் சகோதரர் மரித்த பிரகாரம் மரிக்கக் கூடுமென்றஞ்சி,தன் மருமகளாகிய தாமாரை நோக்கி, என் புத்திரனாகிய ஷேலா பிராயமுள் ளவனாகும் வரைக்கும், உன் பிதாவின் வீட் டிலே விதைவையாய்த் தங்கியிரு என்று சொ ன்னான். அந்தப்பிரகாரம் தாமார் போய்த் த ன் பிதாவின் வீட்டிலே தங்கினாள்.

௰௨. அநேக நாட்சென்றபின் ஷூவாவின் பு த்திரியாகிய யூதாவின் மனைவி மரித்தாள். தா ன் ஆறுதலடைந்தபின், யூதா அதுல்லாமியனா கிய தன் சிநேகிதன் ஈராவுடனே திம்னாவில், தன் ஆடுகளின் மயிரைக் கத்தரிக்கிறவர்களி டத்திற்குப் போனான்.

௰௩. உன் மாமன், தன் ஆடுகளின் மயிரை க் கத்தரிக்கத் திம்னாவுக்குப் போகிறானென் று தாமாருக்கு அறிவிக்கப்பட்டது.

௰௪. ஷேலா பருவமடைந்துந் தான் அவனுக்கு மனைவியாக அளிக்கப்படவில்லையென்று அவள் கண்டதினால், விதவைக்குரிய தன் வஸ்திரங்களைக் களைந்து, முக்காடிட்டுத் தன்னை மூடிக்கொண்டு, திம்னாவுக்குப் போகிற வழியிலிருக்கிற ஏனாயிமின் வாசலில் இருந்தாள்.

௰௫. யூதா அவளைக் கண்டு, அவள் முகத்தை மூடியிருந்ததினால், அவளைத் தன் மருமகளென்றறியாமல், அவளை ஒரு வேசையென்றெண்ணி,

௰௬. வழியிலிருந்த அவளிடத்துக்குப் போய் அவளை நோக்கி, நான் உன்னைச் சேரவாவென்று சொல்ல, அவள், நீர் என்னை சேர எனக்கென்ன தருவீரென்றாள்.

௰௭. அவன் ஒரு வெள்ளாட்டுக் குட்டியை மந்தையிலிருந்து அனுப்புவேனென்றான். அதற்கு அவள் நீர் அதை அனுப்புமளவும், ஒரு ஈடு தந்தால் ஆகுமென்றாள்.

௰௮. அப்பொழுது அவன் உனக்கு ஈடாக நான் என்ன தரவேண்டுமென்று கேட்க, அவள் உமது மோதிரத்தையும், உமது ஆரங்களையும், உமது கைக்கோலையுந் தரவேண்டுமென்றாள். அவன் அவைகளை அவளுக்குக் கொடு

த்து, அவளைச் சேர்ந்தான். அவள் அவனாலே கருப்பவதியானாள்.

௰கூ. அவள் எழுந்து போய்த் தன் முக்காட்டைக் களைந்து, விதவைக் குரிய தன் வஸ்திரங்களைத் தரித்துக் கொண்டாள்.

உ௰. யூதா அந்த ஸ்திரியினிடத்திலிருந்த ஈட்டை மீட்டுக்கொள்ளும்படி, அதுல்லாமியனாகிய தன் சிநேகிதனிடத்தில் ஒரு வெள்ளாட்டுக்குட்டியைக் கொடுத்தனுப்பினான்.

உக. இவன் அவளைக் காணாமல் ஏனாயிம் என்னுமிடத்திலிருந்த வேசை எங்கேயென்று அங்குள்ள மனிதரிடத்திற் கேட்க, அவர்கள் இங்கே வேசையில்லையென்றார்கள்.

உஉ. அவன் யூதாவினிடத்தில் திரும்பிப் போய் அவளைக் காணேன். அங்கே வேசையில்லையென்று, அவ்விடத்து மனிதர் சொன்னார்கள் என்றான்.

உங. யூதா நான் இந்த ஆட்டுக் குட்டியை அனுப்பினேன். நீயும் அவளைக் காணாமற் போனாய். நமக்கு இலச்சை வராதபடிக்கு, அவள் அவைகளை எடுத்துக்கொண்டு போனால், போகட்டுமேன்றான்.

உச. ஏறக்குறைய மூன்றுமாதஞ் சென்ற பின்பு ஒருவன் யூதாவை நோக்கி, உன் மருமகளாகிய தாமார் விபசாரஞ்செய்து அந்த விப

சாரத்தினால், கருப்பவதியானாளென்று அறிவி த்தான். யூதா அவளைவெளியிலே கொண்டுவா ருங்கள். அவள் சுட்டெரிக்கப்பட வேண்டு மென்றான்.

உரு. வெளியிலே கொண்டுவரப்பட்டபோ ழுது, அவள் இந்தப் பொருள்களையுடையவ னெவனோ, அவனாலே நான் கருப்பவதியா னேன். ஆகையால் மோதிரமும், காப்பும், கோலுமாகிய இவைகள் ஆருடைய பொருள் கள், பாருங்களென்று சொல்லி, தனது மாம னிடத்துக்கு அனுப்பினாள்.

உசா. யூதா அவைகளைப் பார்த்தறிந்து, அவ ளை என் புத்திரனாகிய ஷேலாவுக்கு அளியாத தினால் என்னிலும் அவள் நீதியுள்ளவளென்றா ன். பின்பு அவன் அவளைச் சேரவில்லை.

உஎ. அவளுக்குப் பிரசவகாலமானபொழு து, அவளுடைய கருப்பத்தில் இரட்டைப்பி ள்ளைகளிருந்தன.

உஅ. அவளுடைய பிரசவகாலத்தில், ஒன் று கைநீட்ட, மருத்துவிச்சி அந்தக் கையைப் பிடித்து, அதில் சிவப்புநூலைக்கட்டி, இது மு தலாவது வெளிப்பட்டதென்றாள்.

உகூ. அது தன் கையைத் திரும்ப உள்ளே வாங்கிக்கொண்டபொழுது, அதின் சகோதர ன் வெளிப்பட, அவள், நீ மீறிவந்ததென்ன?

இந்த மீறுதல் உன்மேல் நிற்குமென்றாள். அதினாலே அவனுக்குப் பேரேசென்று பேரிடப்பட்டது.

௩௰. பின்பு கையில் சிவப்புநூல் கட்டியிருந்த அவனுடைய தம்பி வெளிப்பட்டான். அவனுக்குச் சேராவென்று பேரிடப் பட்டது.

## ௩௯. அதிகாரம்.

*௧. யோசேப்புப் போத்திப்பாரின் வீட்டில் மேன்மை பெறல் : ௭. போத்திப்பாரின் மனைவி தான் யோசேப்பின்மேல் வைத்த ஆசை சித்தியாகாததினால் பொய் சொல்லி அவனைச் சிறைச்சாலையில் வைப்பித்தல் : ௨௧. தேவன் அவனோடிருத்தல்.*

௧. யோசேப்பு எகிப்துக்குக் கொண்டுபோகப்பட்டான். பார்வோனுடைய பிரதானியும், மெய்க்காவலருக்குத் தலைவனும், எகிப்துத் தேசத்தானுமான போத்திப்பார், அவனை அவ்விடத்திற் கொண்டுபோன இஷ்மாவேலரிடத்திலே விலைக்குக் கொண்டான்.

௨. யெகோவா யோசேப்பின் பட்சமாயிருந்ததினால் அவன் வாழ்வுடையவனாய் எகிப்தியனாகிய தன் எசமானனுடைய வீட்டிலே வாசம்பண்ணினான்.

௩. யெகோவா அவனுடைய பட்சமாயிருக்கிறாரென்பதையும், அவன் செய்யும் யாவை

யும் யேகோவா சித்தியாக்குகிறாரென்பதையு ம், அவன் எசமானன் கண்டு,

௪. யோசேப்பின்மேற் கடாட்சம் வைத்து, அவனைத் தனக்குப் பணிவிடைக்காரனும், த ன் குடும்பத்திற்கு அதிகாரியுமாக்கித் தனக்கு ண்டான யாவையும், அவனிடத்தில் ஒப்பித் தான்.

௫. அவனை, அவன் தன் வீட்டுக்குந் தனக் குண்டான எல்லாவற்றிற்கும் அதிகாரியாக்கி ன பின், இந்த யோசேப்பின் நிமித்தம் யே கோவா அந்த எகிப்தியனுடைய குடும்பத்தை ஆசீர்வதித்தார். வீட்டிலும், வெளியிலும், அ வனுக்குள்ள எல்லாவற்றின்மேலும், யேகோ வாவினுடைய ஆசீர்வாதம் தங்கிற்று.

௬. ஆகையால் அவன் தான் புசிக்கும் ப தார்த்தத்தையன்றி, தனக்குள்ள ஒன்றையும் விசாரியாமல், தனக்குண்டான எல்லாவற் றையும் யோசேப்பு வசம் ஒப்பித்தான்.

௭. யோசேப்போ சுரூபியும், காட்சிக்குச் சௌந்தரியமுள்ளவனுமாயிருந்தான். அதினா ல் அவன் எசமானனுடைய மனைவி யோசே ப்பின்மேற் கண் போட்டு, என்னுடனே சய னியென்றாள்.

௮. அதற்கு அவன் எசமானனுடைய ம னைவியை நோக்கி, வீட்டில் என்னிடத்திலி

ருக்கிற யாதொன்றையும் என் ஆண்டவன் விசாரியாமல், தமக்குண்டான எல்லாவற்றையும், என் கையில் ஒப்பித்தாரே.

௯. இந்த வீட்டில் என்னிலும் மேலானவனில்லை, நீர் அவருடைய மனைவியானபடியால், உம்மைமாத்திரம் தவிர்த்திருப்பதன்றி, வேறொன்றையும், அவர் எனக்கு, விலக்கிவைக்கவில்லை ; நான் இத்தனை பெரிதான தீங்குக்குடன்பட்டு, தேவனுக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்வதெப்படியென்று, அவளுடைய சொல்லை மறுத்தான்.

௰. அவள் தினந்தினம், யோசேப்புடனே பேசிவந்தும், அவன் அவளுடனே சயனிக்கவும், அவளுடனே இருக்கவும் சம்மதிக்கவில்லை.

௰௧. ஒருநாள், யோசேப்புத் தன் பணிவிடையை நடத்துவதற்கு வீட்டுக்குள் போனான். அப்பொழுது வீட்டுமனிதர் ஒருவரும் வீட்டில் இல்லை.

௰௨. அவள் அவன் வஸ்திரத்தைப் பற்றி அவனை இழுத்து என்னுடனே சயனியென்றாள். அதினால் அவன் வஸ்திரத்தை அவள் கையில் விட்டு, வெளியேபுறப்பட்டு ஓடிப்போனான்.

௰௩. அவன் தன் வஸ்திரத்தைத் தன் கை

யில் விட்டுவிட்டு, வெளியே ஓடிப்போன தை அவள் கண்டு,

௰௪. தன் வீட்டுமனிதரைக் கூப்பிட்டு, அவர்களுடனே, பாருங்கள், எபிரேய மனிதன் நம்முடனே சரசம்பண்ணும்படி, அவர் அவனை நமக்குள் கொண்டுவந்து வைத்தார். அவன் என்னுடனே சயனிக்கும்படிக்கு என்னிடத்தில் வந்தான். நான் மிகவும் சத்தமிட்டேன்.

௰௫. நான் சத்தமிட்டதை அவன்கேட்டுத் தன்வஸ்திரத்தை என்னிடத்தில் விட்டு, வெளியேபுறப்பட்டு ஓடிப்போனானென்று சொன்னாள்.

௰௬. அவள் அவனுடைய எசமானன் வீட்டுக்கு வருமளவும் அவனுடைய வஸ்திரத்தை வைத்திருந்து அவனைநோக்கி,

௰௭. நீர் எங்களுக்குள் கொண்டுவந்துவைத்த அந்த எபிரேயப் பணிவிடைக்காரன் என்னுடனே சரசம்பண்ணும்படிக்கு என்னிடத்தில்வந்தான்.

௰௮. அந்நேரம் நான்சத்தமிட அவன் தன் வஸ்திரத்தை என்னிடத்தில்விட்டு, வெளியே ஓடிப்போனானென்று அவனுக்குச் சொன்னாள்.

௰௯. உம்முடைய பணிவிடைக்காரன் எ

ன்னை இப்படிச்செய்தானென்று, தன் மனை
வி தன்னுடனே சொன்ன வாக்குகளை, அவ
னுடைய எசமானன் கேட்டபோழுது, அவ
னுக்கு மிகவும் கோபம் மூண்டது.

௨௰. யோசேப்பின் எசமானன் அவனைப்
பிடித்து இராசாவினாலே காவலில் வைக்கப்
பட்டவர்களிருக்குஞ் சிறைச்சாலையில் அவ
னை வைத்தான். அந்தச் சிறைச்சாலையில் அ
வன் இருந்தான்.

௨௧. அங்கேயும் யேகோவா யோசேப்பின்
பட்சமாய் இருந்து, அவன்மேற் கடாட்சம்
வைத்து, சிறைச்சாலைத் தலைவனுடைய த
யை அவனுக்குக் கிடைக்கப்பண்ணினார்.

௨௨. சிறைச்சாலைத் தலைவன் சிறைச்சா
லையில் வைக்கப்பட்ட யாவரையும் யோசே
ப்பின் வசம் ஒப்பித்தான். அங்கே அவர்கள்
செய்பவைகள் எல்லாவற்றையும் யோசேப்
பு நடப்பிப்பான்.

௨௩. யேகோவா அவன் பட்சத்தில் இருந்
தபடியினாலும், அவன் செய்ததெதுவோ அ
தை யேகோவா சித்தியாக்கினபடியினாலும்,
அவன் கைவசமாயிருந்த யாதொன்றையும் சி
றைச்சாலைத் தலைவன் விசாரிக்கவில்லை.

## சய. அதிகாரம்.

க. பார்வோனுடைய பானபாத்திரமேந்துவோனும் சுயம்பாகிகளின் தலைவனும் யோசேப்பினுடன் காவலில் வைக்கப்படல்: ரு. அவ்விருவருங் கண்ட சொப்பனத்தின் தாற்பரியம் யோசேப்பினால் தெரிவிக்கப்படல்: உய. யோசேப்பின் சொற்படி சொப்பனஞ் சித்தியாதல். பானபாத்திரமேந்துவோன் செய்நன்றிமறத்தல்.

க. இக்காரியங்கள் நடந்தபின்பு, எகிப்து இராசாவின் பானபாத்திரக்காரனும், சுயம்பாகியும், தங்கள் ஆண்டவனாகிய எகிப்து இராசாவுக்குக் குற்றஞ்செய்தார்கள்.

உ. பார்வோன் தன் தலைவரில் பானபாத்திரக்காரரின் தலைவனும், சுயம்பாகிகளின் தலைவனுமாகிய இருவர்மேலும் உக்கிரகோபங்கொண்டு,

ஈ. யோசேப்பு, கட்டுண்டிருந்த இடமுஞ் சேனாபதியின் வீடுமாகிய சிறைச்சாலையில் அவர்களைக் காவல்பண்ணுவித்தான்.

சு. அவர்களை விசாரணை பண்ணும்படி, மெய்க்காவலருக்குத் தலைவன், யோசேப்புக்குக் கட்டளையிட்டான். அவன் அவர்களுக்குப் பணிவிடைசெய்து வந்தான். அவர்கள் சிலநாட் காவலிலிருந்தார்கள்.

ரு. பின்பு சிறைச்சாலையிற் காவல்பண்ணப்பட்ட எகிப்துஇராசனுடைய பானபாத்திரக்காரனும், சுயம்பாகியுமான அவ்விருவரும் ஒரே இரவிலே, வெவ்வேறு பொருள்கொண்ட சொப்பனங்களைக் கண்டார்கள்.

சு. விடியற்காலத்தில் யோசேப்பு அவர்களிடத்திற் போனபொழுது, அவர்கள் துக்கங்கொண்டிருக்கிறதைக் கண்டான்.

எ. அதினல் அவன் தன் ஆண்டவனுடைய வீட்டிலே தன்னேடே காவல்பண்ணப்பட்டிருந்த பார்வோனுடைய காரியத்தலைவரை நோக்கி, உங்கள் முகங்கள் இன்று வாடியிருக்கிறதென்ன என்று கேட்டான்.

அ. அதற்கவர்கள் சொப்பனங் கண்டோம். அதின் தாற்பரியத்தைத் தெரிவிக்கிறவர் ஒருவரும் இல்லைஎன்றார்கள். யோசேப்பு அவர்களுடனே தாற்பரியத்தைத் தெரிவிப்பது தேவனுக்கு ஆதீனமல்லவா! அவைகளை எனக்கு விவரித்துச் சொல்லுங்களேன்றான்.

கூ. அதற்குப் பானபாத்திரத்தலைவன் யோசேப்பை நோக்கி, ஒரு திராட்சக் கொடி என் முன்பாக இருக்கவும்;

ய. அந்தத் திராட்சக் கொடியில் மூன்று கிளைகளிருக்கவும், அது தளிர்த்ததாயிருக்கவும்,

அதிலே பூக்கள் மலர்ந்திருக்கவும், அதின் குலைகள் நன்றாய்ப் பழுத்திருக்கவும்;

யக. பார்வோனுடைய பாத்திரம் என் கையிலேயிருக்கவும், நான் அந்தப் பழங்களைப் பறித்து, அவைகளைப் பார்வோனுடைய பாத்திரத்திலே பிழிந்து, அந்தப் பாத்திரத்தைப் பார்வோனுடைய கையிற் கொடுக்கவும், சொப்பனங் கண்டேனென்று தன் சொப்பனத்தைச் சொன்னான்.

யஉ. அதற்கு யோசேப்பு அந்த மூன்றுகிளைகள் மூன்று நாளேயாம்.

யங. மூன்று நாளுக்குள்ளே பார்வோன் உன் நியாயத்தை விசாரித்து, உன் உத்தியோகத்தில் மீண்டும் உன்னை ஏற்படுத்துவார். நீ முன்னே அவருக்குப் பானங்கொடுத்துவந்த முறைமையின்படி, பார்வோனுடைய பாத்திரத்தை அவர் கையிற் கொடுப்பாய். இதுதான் தாற்பரியமென்று சொன்னதுமன்றி,

யச. நீ வாழ்வடைந்திருக்கும்பொழுது என்னை நினைத்து, என்மேல் தயைவைத்து, என்காரியத்தைப் பார்வோனுக்கு அறிவித்து இந்தவீட்டிலிருந்து என்னை விடுதலையாக்க வேண்டும்.

யரு. நான் எபிரேயருடைய தேசத்திலிருந்து களவாய்க்கொண்டு வரப்பட்டேன். என்

ஸ்ா இந்தச் சிறைச்சாலேயில் வைக்கும்படி நான் இவ்விடத்திலே ஒன்றுஞ் செய்யவில் லேயென்றுஞ் சொன்ஞன்.

யசூ. தாற்பரியம் நல்லதென்று சுயம்பாகிக ளின் தலேவன்கண்டு யோசேப்பைநோக்கி, மூன்று வெண்மையான கூடைகள் என்தலே மேலிருக்கவும்,

யஎ. பார்வோனுக்குச் சுயம்பாகி பாகம்ப ண்ணின சகலவித போசனபதார்த்தங்களிலு ஞ் சில மேற்கூடையிலிருக்கவும், என் தலே யின்மேற் கூடையிலிருந்தவைகளேப் பறவை களேடுத்துப்பட்சிக்கவும், நானும் சொப்பன ங்கண்டேனென்று சொன்ஞன்.

யஅ. யோசேப்பு அந்த மூன்றுகூடைகள், மூன்றுநாளேயாம்.

யகூ. இனி மூன்றுநாளேக்குள்ளே, பார் வோன் நியாயம்விசாரித்து, உன்தலேமையை நீக்கி மரத்திலே உன்னேத்தூக்குவிப்பார். அ ப்பொழுது பறவைகள் உன்மேலிருந்து உன் மாமிசத்தைத்தின்னும். இதுதான் அதின்தா ற்பரியமென்று உத்தரஞ் சொன்ஞன்.

உய. அதற்கு மூன்ரும்நாள் பார்வோனு டைய சென்மதினமானதிஞல், அவன் தன் பணிவிடைக்காரர் யாவருக்கும் விருந்துபண் ணி, பானபாத்திரக்காரரின் தலேவனும், சுய

ம்பாகிகளின் தலைவனுமாகிய இருவருடைய நியாயத்தையும், தன் பணிவிடைக்காரரின் முன்பாக விசாரித்தான். பின்பு யோசேப்பு அவர்களுக்குச் சொல்லிய தாற்பரியத்தின்படி,

உக. பானபாத்திரக்காரரின் தலைவனை மீண்டும் பானங்கொடுக்கிற உத்தியோகத்தில் ஏற்படுத்தினுன். அவனும் பார்வோனுடைய கையிற் பாத்திரத்தைக் கொடுத்தான்.

உஉ. சுயம்பாகிகளின் தலைவனைத் தூக்குவித்தான்.

உ௩. பானபாத்திரக்காரரின் தலைவனோ, யோசேப்பை நினைத்ததில்லை. அவனைமறந்துவிட்டான்.

## ௪க. அதிகாரம்.

க. பார்வோன் கனவு காண்டல்: உரு. யோசேப்பு இராசாவினுடைய சொப்பனத்தின் தாற்பரியத்தைத் தெரிவித்துப் புத்தி சொல்லல்: ௩எ. யோசேப்பு மேன்மைபெறல்: ருய. யோசேப்புக்குப் புத்திரர் இருவர் உற்பவித்தல்: ரு௩. பஞ்சம்ஆரம்பித்தல்.

க. இரண்டு வருஷஞ்சென்றபின் பார்வோனும் தான் நதியோரத்திலே நிற்கவும்,

உ. அழகும் புஷ்டியுமுள்ள ஏழு பசுக்கள், அந்த நதியில் நின்றும் ஏறி, மைதானத்தில் புல்லைமேயவும்,

௩. அவைகளின் பின் அழகும் புஷ்டியுமி ல்லாது வேறு ஏழு பசுக்கள் நதியில் நின்றும் ஏறி, நதியோரத்திலே அந்தப்பசுக்களருகே நி ற்கவும்,

௪. அழகும் புஷடியுமில்லாத பசுக்கள், அழகும் புஷ்டியுமுள்ள அவ்வேழுபசுக்களை யும் பட்சிக்கவும், ஒரு சொப்பனங்கண்டு வி ழித்தான்.

௫. திரும்பவும், அவன் நித்திரையடைந் து, ஒரேதாளிலே நல்ல செழுமையான ஏழு க திர்கள் ஈனப்படவும், பின்பு கீழ்காற்றினலே தீயப்பட்டவைகளுஞ் சாவியுமாய், ஏழுகதிர் கள் ஈனப்படவும், சாவியான கதிர்கள், செ ழுமையும் பூரணமுமான ஏழு கதிர்களையும் வி ழுங்கவும், இரண்டாந்தரஞ் சொப்பனங் க ண்டான்.

௬. பார்வோன் நித்திரை தெளிந்து எழுந் தான். இவையோ சொப்பனமென்றறிந் தான்.

௭. விடியற்காலத்தில் அவனுடைய மன ம் மிகவுங் கலங்கிற்று.

௮. அப்பொழுது அவன் எகிப்திலுள்ள சக ல மாந்திரிகரையும், சகல வித்துவான்களையு ம் அழைத்து அவர்களுக்குத் தன் சொப்ப னங்களையும் விவரித்தான். அவைகளின் தா

ற்பரியத்தைப் பார்வோனுக்கு ஒருவராலுஞ் சொல்லக்கூடாமற் போயிற்று.

௯. அப்பொழுது பானபாத்திரக்காரரின் தலைவன் பார்வோனிடத்திலே, இன்று என் குற்றமும் என் நினைவில் வருகின்றது.

௰. பார்வோன் அவருடைய பணிவிடைக்காரர்மேல் உக்கிரகோபங்கொண்டு, என்னையும், சுயம்பாகிகளின் தலைவனையும், மெய்க்காவலருக்குத் தலைவனுடைய வீடாகிய சிறைச்சாலையில் வைத்திருந்த காலத்தில்,

௰க. நானும் அவனும் ஒரு இரவிலே வெவ்வேறு பொருள்கொண்ட சொப்பனங்களைக் கண்டோம்.

௰உ. மெய்க்காவலருக்குத் தலைவனுடைய பணிவிடைக்காரனாகிய எபிரேய வாலிபனொருவனும், அங்கே எங்களுடனே இருந்தான். அவனுக்கவைகளைச் சொல்ல; அவன் எங்கள் இருவருடைய வெவ்வேறு சொப்பனத்தின் தாற்பரியங்களையுந் தெரிவித்தான்.

௰௩. அவன் எங்களுக்குச் சொல்லிய தாற்பரியத்தின்படி நடந்தது. என்னைத் திரும்பவும், என் உத்தியோகத்தில் வைத்து, அவனைத் தூக்குவித்தாரென்று சொன்னான்.

௰௪. பார்வோன் ஆளனுப்பி, யோசேப்பை அழைப்பித்தான். அவனை விரைவாய்ச்

சிறைச்சாலையில் நின்றுங் கொண்டுவந்தார்க ள். அவன் சௌரம்பண்ணிக்கொண்டு வே றுவஸ்திரங்களுந் தரித்து, பார்வோனிடத்தில் வந்தான்.

௰௫. பார்வோன், யோசேப்பை நோக்கி, ஒரு சொப்பனங் கண்டேன்; அதின் தாற்ப ரியத்தைத் தெரிவிக்க ஒருவருமில்லை. நீயே சொற்பன தாற்பரியத்தைத் தெரிவிக்க அறி வாயென்று சொல்லக் கேள்விப்பட்டேனே ன்று சொன்னான்.

௰௬. அதற்கு யோசேப்பு, நானல்ல, தேவ னே பார்வோனுக்கு மங்கள உத்தரம் அரு ளிச்செய்வாரேன்று சொல்ல;

௰௭. பார்வோன் யோசேப்பை நோக்கி, நா ன் நதியோரத்திலே நிற்கவும்,

௰௮. புஷ்டியும் அழகுமுள்ள ஏழுபசுக்க ள் நதியில் நின்றும் ஏறி, மைதானத்திற் புல் லை மேயவும்,

௰௯. அவைகளின் பின்பு, எகிப்துதேசத் தில் எங்கும் என்றும் நான் காணாத அவலட் சணமுள்ளவைகளாய், புஷ்டியுஞ் சற்றுகிலு ம் அழகுமில்லாத வறட்சியான வேறேழு ப சுக்கள் ஏறிவரவும்,

௨௰. புஷ்டியும் அழகுமில்லாத பசுக்கள் புஷ்டியான முந்தின ஏழு பசுக்களையும் பட்

சிக்கவும், இவைகள் அவைகளின் வயிற்று க்குட்பட்டும்,

உக. வயிற்றுக் குட்பட்டதென்பது தெரியாமல் முன் போலவே அவலட்சணமுள்ளவைகளாயிருக்கவும், ஒரு சொப்பனங்கண்டு விழித்தேன்.

உஉ. பின்னும் நான் ஒரேதாளில் நல்ல செழுமையான ஏழு கதிர்கள் ஈனப்படவும்,

உ௩. அவைகளின் பின் கீழ்காற்றினலே தீந்தனவும், சாவியும் பதருமான கதிர்கள் ஈனப்படவும்,

உச. பதரான கதிர்கள் நல்ல விளைவான அந்த ஏழு கதிர்களையும் விழுங்கவுங் கண்டேன். இதை மாந்திரிகரிடத்திற் சொன்னேன். இதின் தாற்பரியத்தை எனக்குத் தெரிவிப்பார் ஒருவருமில்லையென்று சொன்னன்.

உரு. யோசேப்பு பார்வோனை நோக்கி, பார்வோனுடைய சொப்பனம் ஒன்று தான். தேவன் தாம் செய்வதின்னதென்று பார்வோனுக்கு அறிவித்திருக்கிருர்.

உ௬. ஏழு நல்ல பசுக்களும் ஏழுவருஷமாம், நல்ல விளைவான ஏழு கதிர்களும் ஏழுவருஷமேயாம். சொப்பனம் ஒன்றே.

உஎ. அவைகளின் பின் ஏறிவந்த அவலட்சணமான வறண்ட ஏழு பசுக்களும் ஏழுவரு

ஷம். கீழ்காற்றினலே தீந்து சாவியான ஏ ழு கதிர்களும் பஞ்சகாலமாயிருக்கும் ஏழுவ ருஷமேயாம்.

உ அ. பார்வோனுக்குத் தெரிவித்தகாரியம் இதுவே. தேவன் தாம் செய்வதைப் பார் வோனுக்குக் காட்டுகிறர்.

உகூ. எகிப்து தேசமெங்கும் ஏழு வருஷம் பூரண விளைவுண்டாம்.

௩௰. அதன் பின் ஏழுவருஷத்துக்குப் பஞ் சமுண்டாகும். அப்பொழுது எகிப்து தேச த்தில் அந்தப் பூரணமெல்லாம் மறந்துபோக ப்படும். அந்தப் பஞ்சம் தேசத்தை அழிக் கும்.

௩க. வரப்போகிற பஞ்சத்தின் கொடுமை மிகுதியினல் தேசத்தில் முன்னிருந்த பூரண ம் ஒழிந்துபோம்.

௩உ. இந்தக் காரியந் தேவனல் நிச்சயிக்க ப்பட்டிருக்கின்றதென்பதையும், தேவன் இ தைச் சீக்கிரத்தில் நிறைவேற்றுவாரென்ப தையுங் குறித்துப் பார்வோனுக்குச் சொப்ப னம் இரட்டையாயிற்று.

௩௩. ஆதலால் விவேகமும், ஞானமுமுள் ள ஒருமனிதனைத் தேடி, பார்வோன் எகிப் து தேசத்திற்கு அதிகாரியாய் ஏற்படுத்துவா ராக.

௩௪. பூரணவிளைவுண்டாகும் ஏழுவருஷபரியந்தம் எகிப்துதேசத்தின் விளைவுகளில் ஐந்திலொருபங்கு வாங்கும்படிக்குத் தேசத்திற்கு மேல்விசாரணைக்காரரையும், பார்வோன் வைக்கக்கடவர்.

௩௫. மேலும், அவர்கள் வரப்போகிற நல்ல வருஷங்களிலுள்ள உணவுப் பொருள்கள் யாவையுஞ் சேகரிக்கக்கடவர்கள். பார்வோனுடைய அதிகாரத்தின்கீழே தானியத்தைச் சேர்த்து, நகரங்களிற் போசனபதார்த்தங்களைக் காத்து வைத்துக்கொள்ளக்கடவர்கள்.

௩௬. அந்த உணவுப் பொருள் இனி எகிப்து தேசத்திலுண்டாகும் பஞ்சத்தின் வருஷங்கள் ஏழளவுந் தேசத்திற்கு ஒரு வைப்பாயிருக்கும். அதினால் அந்தப் பஞ்சத்தாலே தேசம் அழியாதென்றான்.

௩௭. இந்த வாக்குப் பார்வோனுக்கும், அவன் பணிவிடைக்காரர் யாவருக்கும், நல்லதென்று தோன்றிற்று.

௩௮. பார்வோன் தன் பணிவிடைக்காரரை நோக்கி, தேவ ஆவியைப்பெற்ற இவனைப்போல வேறொரைக் காண்போமென்றான்.

௩௯. பின்னும் பார்வோன் யோசேப்பை நோக்கி, தேவன் இவையெல்லாவற்றையும் உனக்கு வெளிப்படுத்தினதினாலே, விவேக

மும் ஞானமுமுள்ள உன்னைப்போல வே
ருெருவனுமில்லை.

சம. நீ என் வீட்டிற்கு அதிகாரியாயிருப்
பாய். என் சனங்களெல்லாரும் உன் வாக்
கின்படி ஆளப்படுவார்கள். சிங்காசனத்தை
க் குறித்து மாத்திரம் உன்னிலும் நான் பெரி
யவனுவேனென்றுன்.

சக. பின்னும், பார்வோன் யோசேப்பை
நோக்கி, இந்த எகிப்துதேச முழுமைக்கும் உ
ன்னை அதிகாரியாக்கினேனென்பதை அறியே
ன்று சொல்லி,

சஉ. தன் கையிலிருந்த முத்திரைமோதிர
த்தைக் கழற்றி, அதை யோசேப்பின் கையி
லிட்டு, மெல்லிய சணல்நூல் வஸ்திரங்களை
அவனுக்குத் தரிப்பித்து, பொற்சரப்பணியை
அவனுடைய கழுத்திற் போட்டு,

சஙூ. தன்னுடைய இரண்டாம் இரதத்தி
ன்மேல் அவனை ஏற்றி, முழங்காற்படியிடுங்
களென்று அவனுக்கு முன்பாகக் கூறிக்கொ
ண்டுபோகும்படி செய்து; எகிப்துதேசம் மு
ழுவதிற்கும் அவனை அதிகாரியாக்கினுன்.

சச. பின்னும் பார்வோன் யோசேப்பை
நோக்கி, பார்வோனுகிய நானேயன்றி, எகிப்
துதேசத்திலுள்ளவர்களில் ஒருவனும் உன்
உத்தரவில்லாமல் தன் கையையாகிலும், கா

லையாகிலும் அசைக்கவுங் கூடாதென்று சொன்னான்.

சரு. பார்வோன் யோசேப்புக்குச் சாபிநத்பானேயாகேன்று பேரிட்டு, ஒன் நகரத்திலுள்ள ஆசாரியனாகிய போத்திப்பேராவின் குமாரத்தி ஆஸ்நாத்தை அவனுக்கு மனைவியாகக் கொடுப்பித்தான்.

சசு. யோசேப்பு எகிப்துதேசத்தைச் சுற்றிப்பார்க்கும்படி புறப்பட்டான். யோசேப்பு எகிப்தின் இராசனாகிய பார்வோனுக்குமுற்பட்டபொழுது அவனுக்கு முப்பதுவயது. யோசேப்பு பார்வோனின் சமுகத்தை விட்டு எகிப்துதேசம் முழுவதையுஞ் சுற்றிப்பார்த்தான்.

சஎ. செழிப்புள்ள ஏழுவருஷங்களிலும் பூமி மிகுந்த பலனைக் கொடுத்தது.

சஅ. அவ்வேழு வருஷங்களில் எகிப்துதேசத்திலுண்டான தானியங்கள் யாவையும், அவன் சேர்த்து, அந்தத் தானியங்களை நகரங்களிற் சேகரித்து வைத்தான். அந்தந்த நகரங்களில் அதினதின் சுற்றுப்புறத்துத் தானியங்களைச் சேகரித்துவைத்தான்.

சகூ. இப்படி யோசேப்பு அளவிறந்ததாய் கடற்கரைமணலைப்போல மிகுதியாகத் தானியத்தைச் சேகரித்துவைத்தான். அது அளவுக்கு அடங்காததாயிருந்தது.

ருய. ஓன் நகரத்திலிருந்த ஆசாரியனுகிய போத்திபேராவின் குமாரத்தி ஆஸ்நாத்து யோசேப்புக்கு இரண்டு புத்திரரைப் பெற்றுள். அவர்கள் பஞ்சமுண்டாகும் வருஷங்கள் வருவதற்கு முன்னே பிறந்தார்கள்.

ருக. யோசேப்பு, தேவன் என் கிலேசம் யாவையும், என் பிதாவின் குடும்பம் அனைத்தையும் நான் மறக்கும்படி செய்தாரேன்று சோல்லி, மூத்தவனுக்கு மனசேயென்று பேரிட்டான்.

ருஉ. நான் சிறுமைப்பட்டிருந்த தேசத்தில், தேவன் என்னைப் பல்கப்பண்ணினுரேன்று சோல்லி, இளையவனுக்கு எப்ராயீமேன்று பேரிட்டான்.

ருங. எகிப்து தேசத்திலே செழிப்புள்ள அவ்வேழுவருஷங்களுஞ் சேன்றபின்பு,

ருச. யோசேப்பு சோல்லியபடி ஏழுவருஷபஞ்சந் தோடங்கிற்று. சகல தேசங்களிலும் பஞ்சமுண்டாயிற்று. எகிப்துதேசத்தில் எங்கும் ஆகாரமிருந்தது.

ருரு. எகிப்து தேசமெங்கும் பஞ்சமுண்டானபடியால், சனங்கள் உணவுக்காகப் பார்வோனை நோக்கி ஒலமிட்டார்கள். பார்வோன், நீங்கள் யோசேப்பினிடத்துக்குப் போய் அவன் உங்களுக்குச் சோல்லுகிறபடி சேய்

யுங்களென்று எகிப்தியரெல்லாருக்குஞ் சொ ன்னான்.

௫௬. தேசமெங்கும் பஞ்சமுண்டானபொ ழுது யோசேப்பு எல்லாக் களஞ்சியங்களையும் திறந்து, எகிப்தியருக்கு விற்றான். பஞ்சம் எ கிப்து தேசத்தில் வரவரக் கொடிதாயிற்று.

௫௭. சகல தேசங்களிலும் பஞ்சங் கொடி தாயிருந்தபடியால், சகல தேசத்தாரும் யோ சேப்பினிடத்திலே கொள்ளும்படி எகிப்துக் கு வந்தார்கள்.

## ௪௨. அதிகாரம்.

*௧. யாக்கோபின் புத்திரர் தானியங்கொள்ள எகிப்து க்குப் போதல்: ௫. அவர்கள் யோசேப்பினிடத்தி ல் சேர்தல்: யோசேப்பு ஷிமியோனைக் கட்டினது மன்றிப் பென்யாமீனைக் கொண்டுவரக் கட்டளையி டல்: ௨௧. அவர்கள் தாங்கள் யோசேப்புக்குச்செ ய்த தீமையை நினைத்தல்: ௨௫. யோசேப்பு பொ திக்குட்பணத்தை வைத்து அவர்களை அனுப்பிவி டல்: ௨௯. அவர்கள் பிதாவின் வீட்டிற் சேர்ந்து ச மாசாரந் தெரிவித்தல்: ௩௫. யாக்கோபு பென்யா மீனை அனுப்பப் பயந்து மறுத்தல்.*

௧. யாக்கோபு எகிப்திலே தானியம் உண் டென்பதை அறிந்து, தன் புத்திரரை நோக்கி, நீங்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண் டிருக்கிறதென்ன?

உ. எகிப்து தேசத்தில் தானியம் உண்டெ ன்று கேள்விப்பட்டேன். நாம் சாவாமல், உ யிரோடிருக்கும்படி அவ்விடத்திற்குப் போய்த் தானியத்தை வாங்கிக்கொண்டு வாருங்க ளென்று சொல்ல,

ங. யோசேப்பின் சகோதரர் பத்துப்பேர் தானியங்கொள்ள எகிப்து தேசத்திற்குப் போ னார்கள்.

ச. யோசேப்பின் சகோதரனாகிய பென்யா மீனுக்குத் தீங்கு நேரிடவுங் கூடுமென்று சொ ல்லி யாக்கோபு அவனை அவர்களுடனே அ னுப்பவில்லை.

ரு. கானான்தேசத்திற் பஞ்சமுண்டான்ப டியால், தானியங்கொள்ளப் போயிருந்தவர்க ளுடனே இஸ்ரவேலின் புத்திரரும் போய்ச் சேர்ந்தார்கள்.

சு. அத்தேசத்திற்கு அதிகாரியாயிருந்த யோ சேப்பே அத்தேசத்தின் சனங்கள் யாவருக்கு ம் விற்றான். யோசேப்பின் சகோதரர் சேர்ந் து, அவனைப் பூமிக்கு நேரே தாழ்ந்து வணங் கினார்கள். யோசேப்பு அவர்களைக் கண்டு, தன் சகோதரரென்று அறிந்தான்.

எ. அறிந்தும் அறியாதவன்போலக் கடுமை யாய் அவர்களுடனே பேசி, நீங்கள் எங்கே யிருந்து வந்தீர்களென்று கேட்டான். அதற்கு,

அவர்கள், கானான்தேசத்திலிருந்து தானியங் கோள்ள வந்தோமேன்று சோன்னார்கள்.

அ. யோசேப்பு அவர்களைத் தன் சகோதர ரேன்றறிந்தும் அவர்கள் அவனை அறியவில்லை.

கூ. யோசேப்பு, தான் அவர்களைக் குறித்துக் கண்ட சோப்பனங்களை நினைத்து, அவர்களை நோக்கி, நீங்கள் வேவுகாரர். இத்தேசத்தின் திறவுகளைப் பார்க்கவந்தீர்களேன்று சோல்ல,

ய. அவர்கள், ஆண்டவனே, அதற்காகவல் ல, உமதடியாராகிய நாங்கள் தானியங்கோள் ள வந்தோம்.

யக. நாங்களேல்லாரும் ஒருவனுடைய புத்திரர். உம்முடைய அடியாராகிய நாங்கள் நேர்மையுள்ளவர்கள். வேவுகாரர் அல்லவேன்றார்கள்.

யஉ. அதற்கு அவன் அப்படியல்ல; இத் தேசத்தின் திறவுகளைப் பார்க்கவே வந்தீர்க ளேன்றான்.

யங. அப்போழுதவர்கள், உம்முடைய அடியாராகிய நாங்கள் பன்னிரண்டு சகோதரர். கானான்தேசத்திலிருக்கிற ஒருவனுடைய புத்திரர். இளையவன் இப்போழுது பிதாவினிடத்திலிருக்கிறான். ஒருவன் இல்லையேன்றார்கள்.

யச. யோசேப்பு அவர்களை நோக்கி நீங்க

ள் வேவுகாரரேன்று நான் சொன்னதற்குச் ச
ந்தேகமில்லை. நீங்கள் சோதிக்கப்படுவீர்கள்.

௧ரு. உங்கள் இளைய சகோதரன் இங்கே
வந்தாலொழிய நீங்கள் இங்கேயிருந்து புறப்
படுவதில்லையென்று, பார்வோனுடைய சீவ
னைக்கொண்டு,ஆணையிட்டுச்சொல்லுகிறேன்.

௧௬. உங்கள் சகோதரனை அழைத்து வரு
ம்படி, உங்களில் ஒருவனை அனுப்புங்கள்.
உங்களில் நேர்மையுண்டோ, இல்லையோ எ
ன்பதற்கு உங்கள் வாக்குகளைப் பரிசோதிக்
குமளவும், நீங்கள் சிறைச்சாலையிலிருக்கவே
ண்டும். இல்லையென்று கண்டால், நீங்கள்
வேவுகாரர் தாமென்று பார்வோனுடைய சீ
வனைக்கொண்டு, ஆணையிட்டுச் சொல்லுகி
றேனென்று சொல்லி,

௧௭. அவர்களை ஏகமாய் மூன்றுநாள் சிறை
ச்சாலையில் வைப்பித்தான்.

௧௮. மூன்றும் நாளிலே யோசேப்பு அவர்க
ளுடனே நான் தேவனுக்குப் பயப்படுகிறே
ன். ஆதலால் ஒன்று செய்யுங்கள், அப்பொ
ழுது சீவிப்பீர்கள்.

௧௯. நீங்கள் நேர்மையுள்ளவர்களானால்,
உங்களிலொருவன் நீங்களிருக்குமிடமான சி
றைச்சாலையிற் கட்டுண்டிருக்கப் பஞ்சத்தினு
ல் வருந்துகிற உங்கள் குடும்பத்தாருக்குத் தா

ணியத்தைக் கொண்டுபோகப் புறப்படுங்கள்.

உ௰. உங்கள் இளைய சகோதரனை என்னிடத்திற்கு அழைத்துக்கொண்டு வாருங்கள். அதினால் உங்கள் வாக்குகள் உண்மைப்படும். நீங்களும் மரிக்கமாட்டீர்களென்று சொன்னான். அவர்கள் அதற்கமைந்தார்கள்.

உக. நம்முடைய சகோதரன் நம்மை நோக்கிக் கெஞ்சி வேண்டிக்கொண்ட பொழுது, அவனுடைய மன வியாகுலத்தை நாம் கண்டும், அவனுக்குச் செவிகொடாமல் போனதைக் குறித்து நாம் குற்றவாளிகளே. அதின் நிமித்தம் இந்த ஆபத்து நம்மேல் வந்ததென்று இப்படி ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.

உஉ. அப்பொழுது ரூபேன் அவர்களை நோக்கி மறுமொழியாக, அந்தப் பிள்ளையை விரோதித்துப் பாவஞ்செய்யாதிருங்களென்று நான் உங்களுக்குச் சொல்லவில்லையா? நீங்கள் கேளாமற் போனீர்கள். அதினால் அவனுடைய இரத்தபழி வாங்கப்படுகின்றதென்றான்.

உ௩. யோசேப்பு துபாஷிவழியாய்ப் பேசினபடியால், தாங்கள் சொன்னது, அவனுக்குத் தெரியுமென்று அவர்கள் அறியவில்லை.

உ௪. யோசேப்பு அவர்களை விட்டு நீங்கி அ

ழுதான். திரும்பவும வந்து, அவர்களுடனே சம்பாஷித்து, அவர்களில் ஷிமியோனைப் பிரித்து, அவர்கள் கண்களுக்குமுன்னே கட்டுவித்தான்.

உரு. பின்பு அவர்கள் கொண்டுவந்த போதிகளைத் தானியத்தால் நிறைத்து, அவர்கள் கொடுத்த பணத்தை அவரவர் போதியிலே திரும்பப்போட்டுப் பிரயாணத்துக்கு வேண்டிய ஆகாரத்தையும் அவர்களுக்குக் கொடுக்கும்படி யோசேப்பு கட்டளையிட்டான். இப்படியே அவர்களுக்கு அவன் செய்தான்.

உசா. அவர்கள் அந்தத் தானியத்தைக் கழுதையின் மேல் ஏற்றிக்கொண்டு அவ்விடம்விட்டுப் புறப்பட்டுப் போனார்கள்.

உஎ. சத்திரத்தில் அவர்களில் ஒருவன் தன் கழுதைக்கு உணவு கொடுப்பதற்குத் தன் போதியை அவிழ்த்தபோழுது, அதின் வாயில் இருந்த பணத்தைக் கண்டு,

உஅ. தன் சகோதரருடனே, என் பணந் திரும்பக் கிடைத்தது. பாருங்கள், அது என் போதியில் இருக்கிறதென்றான். அவர்கள் இருதயம் சோர்ந்துபோயிற்று. அவர்கள் பயமடைந்து, தேவன் நமக்கு இப்படிச்செய்ததேன்னவென்று, ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.

உ௯. பின்பு அவர்கள் கானான் தேசத்திலுள்ள தங்கள் பிதாவாகிய யாக்கோபினிடத்தில் வந்து,

௩௰. எகிப்து தேசத்துக்கு அதிகாரியாயிருக்கிறவர், தேசத்தைப் பார்க்க வந்த வேவுகாரரென்று, எங்களை எண்ணி, எங்களுடனே கடுமையாய்ப் பேசினார்.

௩௧. நாங்கள் அவருடனே, நாங்கள் நேர்மையுள்ளவர்கள், வேவுகாரரர் அல்ல,

௩௨. நாங்கள் பன்னிரண்டு சகோதரர். ஒரு பிதாவின் புத்திரர். ஒருவன் இல்லை. இளையவன் இப்பொழுது கானான் தேசத்தில் எங்கள் பிதாவினிடத்தில் இருக்கிறான் என்றோம்.

௩௩. அப்பொழுது அத்தேசத்து அதிகாரியானவர், எங்களை நோக்கி, நீங்கள் நேர்மையுள்ளவர்கள் என்பதை நான் அறியும்படி, உங்களில் ஒருவனை என்னிடத்தில் விட்டு, பஞ்சத்தினால் வருந்துகிற உங்கள் குடும்பத்தாருக்கு நீங்கள் தானியம் வாங்கிக்கொண்டு புறப்படுங்கள்.

௩௪. உங்கள் இளைய சகோதரனை என்னிடத்திற்கு அழைத்துக்கொண்டு வாருங்கள்;அதினால் நீங்கள் வேவு காரரல்ல, நேர்மையுள்ளவர்கள் என்பதை நான் கண்டு, உங்கள் ச

கோதரனை உங்களுடனே விடுவேன். நீங்கள் இத்தேசத்தில் வியாபாரமும் பண்ணலாம் என்றானென்று, இப்படித் தங்களுக்குச் சம்பவித்தவைகள் யாவையும் அவனுக்கு விவரித்தார்கள்.

௩௫. பின்பு அவர்கள் தங்கள் போதிகளிலுள்ள தானியத்தைக் கொட்டுகையில், அவரவர் போதியில், அவரவர் பணமுடிப்பு இருந்தது. அந்தப் பணமுடிப்புகளை அவர்களும் அவர்கள் பிதாவுங் கண்டபோழுது, பயமடைந்தார்கள்.

௩௬. அவர்கள் பிதாவாகிய யாக்கோபு அவர்களை நோக்கி, என்னைப் புத்திரவீனனாக்குகிறீர்கள். யோசேப்பும் இல்லை. ஷிமியோனும் இல்லை. பேன்யாமீனையும் அழைத்துக்கொண்டுபோகப் பார்க்கிறீர்கள். இவையெல்லாம் எனக்கு நேரிட்டனவே என்று சொன்னான்.

௩௭. அப்போழுது ரூபேன், தன் பிதாவை நோக்கி, அவனை என் கையிலோப்பித்தால், நான் அவனை உம்மிடத்தில் திரும்ப அழைத்துக்கோண்டு வருவேன். அவனை அழைத்துக்கோண்டு வராமற் போவேனேயானால், என்னிரண்டு புத்திரரையுங் கோல்வீராகவேன்று சோன்னான்.

௩௮. அதற்கு அவன் இந்தப் பிள்ளையின்

தமையன் இறந்துபோனான். இவனொருவ
ன் இருக்கிறான். நீங்கள் போகும்வழியில் இ
வனுக்கு ஒரு தீங்கு நேரிட்டால், நரைதிரை
யுள்ளவனாகிய என்னைத் துக்கத்தோடே மரி
த்தோர் ஸ்தலத்திற்குக் கொண்டுபோகப்பண்
ணினீர்கள். இவனை உங்களோடே போக
விடேனென்றான்.

## ௪௩. அதிகாரம்.

க. யாக்கோபு பேன்யாமீனை அவர்களோடே போகவி
டல்: ௰௫. யோசேப்பு தன் சகோதரரை உபசரி
த்தல்: ௩௧. அவன் விருந்துபண்ணல்.

க. தேசத்திலே பஞ்சங் கொடிதாயிருந்தது.
உ. எகிப்திலிருந்து அவர்கள் கொண்டுவந்
த தானியஞ் செலவழிந்ததினால், அவர்கள் பி
தா அவர்களை நோக்கி, நீங்கள் மீண்டும்போ
ய் நமக்குக் கொஞ்சந் தானியத்தை வாங்கிக்
கொண்டு வாருங்களென்று சொன்னான்.
௩. அப்பொழுது யூதா அவனுடனே அந்த
மனிதன் எங்களை நோக்கி, உங்கள் இளைய
சகோதரன் உங்களோடே வராவிட்டால் நீங்
கள் என் முகத்தைக் காணமாட்டீர்களென்
று உறுதியாய்ச் சொன்னான்.
௪. எங்கள் சகோதரனை நீர் எங்களுடனே

அனுப்பினல், நாங்கள் போய் உமக்குத் தா னியத்தை வாங்கிக்கொண்டு வருவோம்.

ரு. அனுப்பாதிருப்பீராகில், நாங்கள் போகமாட்டோம். உங்கள் சகோதரன் உங்களுடனே வராவிட்டால் நீங்கள் என் முகத்தைக் காணமாட்டீர்களென்று அந்த மனிதன் எங்களுடனே சொல்லியிருக்கிருனேயென்று சொல்ல,

௬. இஸரவேல், உங்களுக்கு இன்னுமொரு சகோதரன் உண்டென்று நீங்கள் அந்த மனிதனுக்குச் சொல்லி, இப்படி எனக்கு இந்தத்துன்பத்தை வருத்துவித்ததென்னவென்றான்.

எ. அதற்கு அவர்கள், அந்த மனிதன், உங்கள் பிதா இன்னுமிருக்கிருரா? உங்களுக்கு இன்னுமொரு சகோதரன் உண்டாவென்று எங்களையும், எங்கள் வமிசத்தையுங் குறித்து, நுட்பமாய் விசாரித்தான். அந்த வாக்குக்கேற்க மறுமொழி கொடுத்தோம். உங்கள் சகோதரனை உங்களுடனே இங்கே அழைத்து வாருங்களென்பதை அவன் சொல்லுவானேன்று முன் அறிந்தோமா என்ருர்கள்.

அ. பின்னும் யூதா தன் பிதாவாகிய இஸ்ரவேலை நோக்கி, நீரும், நாங்களும், எங்கள் குழந்தைகளும், சாவாமல் உயிரோடிருக்கும்பொருட்டாக, நாங்கள் புறப்பட்டுப்போகு

ம்படி, இந்த வாலிபனை என்னுடனே அனுப்பும்.

௯. இவனைக் குறித்து நான் உத்தரவாதஞ் செய்வேன். இவனை என்னிடத்திலே கேளும். நான் இவனை உம்மிடத்திற் கொண்டு வந்து, உமக்கு முன்பாக விடாதே போனால், அந்தக் குற்றம் எப்பொழுதும் என்மேலிருப்பதாக.

௰. நாங்கள் தாமதியாமலிருந்தால், இதற்குள் இரண்டாந்தரமும்போய்த் திரும்புவோமேயென்று சொல்ல,

௰௧. அவர்களுடைய பிதாவாகிய இஸ்ரவேல் அவர்களை நோக்கி, அப்படியானால், ஒன்று செய்யுங்கள். இத்தேசத்தின் உத்தமப் பொருள்களிற் கொஞ்சம் குங்குலியமும், தேனும், சுகந்த திரவியமும், வெள்ளைப் போளமும், தேரேபிந்துக்கொட்டையும், வாதுமைக்கொட்டையும், உங்கள் பாத்திரங்களிலிட்டு, அந்த மனிதனுக்குக் கொண்டுபோய்க் கொடுங்கள்.

௰௨. பணத்தை இரட்டிப்பாக உங்கள் கைகளிற் கொண்டுபோங்கள். உங்கள் பொதியின் வாய்களில் வைக்கப்பட்டுத் திரும்பக் கொண்டுவந்த பணத்தையுங் கொண்டு போங்கள். அது பிசகாயிருக்கவுங்கூடும்.

௰ஙு. உங்கள் சகோதரனையுங் கூட்டிக்கொண்டு அந்த மனிதனிடத்திற்குத் திரும்பவும் போய் வாருங்கள்.

௰சு. அந்த மனிதன் அங்கிருக்கிற உங்கள் மற்றைச் சகோதரனையும், பேன்யாமீனையும், உங்களுடனே அனுப்பிவிடும்படிக்கு, சருவ வல்லமையுள்ளதேவன் அவன் முகத்தின் இரக்கம் உங்களுக்குக் கிடைக்கப்பண்ணுவாராக. புத்திரவீனனுவேனுகில் புத்திரவீனனுவேனென்றான்.

௰ரு. அப்பொழுது அந்த மனிதர் காணிக்கையையும், இரட்டிப்பாய்ப் பணத்தையும் எடுத்துக்கொண்டதுமன்றிப் பேன்யாமீனையும் கூட்டிக்கொண்டு, பிரயாணம் புறப்பட்டு, எகிப்திற்சேர்ந்து, யோசேப்பின் சமுகத்தில் நின்றார்கள்.

௰சு. யோசேப்பு, பேன்யாமீன் அவர்களோடே நிற்பதைக் கண்டு, தன் வீட்டு விசாரணைக்காரனை நோக்கி, மத்தியானத்திற்கு இந்த மனிதர் என்னோடே போசனஞ் செய்ய வேண்டும். நீ இந்த மனிதரை விட்டுக்கு அழைத்துக்கொண்டு போய்ப் போசனத்துக்கு வேண்டியவைகளை அடித்து ஆயத்தம்பண்ணென்று சொன்னான்.

௰எ. அவன் தனக்கு யோசேப்பு சொல்லி

யபடி, அந்த மனிதரை யோசேப்பின் வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோனன்.

௰அ. தாங்கள் யோசேப்பின் வீட்டுக்குக் கொண்டுபோகப் பட்டபடியால், அவர்கள் பயமடைந்து முன்னே நம்முடைய போதிகளிலிருந்த பணத்தினிமித்தம் நம்மேற் குற்றஞ் சுமத்தி, நம்மைப் பிடித்து அடிமைகளாக்கிக்கொண்டு, நம்முடைய கழுதைகளேயுங் கைக்கொள்ளும்படிக்கே நாம் கொண்டுபோகப்படுகிறேமென்று சொல்லிக்கொண்டு,

௰கூ. யோசேப்பின் வீட்டுவிசாரணைக்காரனை அணுகி, வீட்டு வாசற்படியிலே அவனேடே சம்பாஷித்து,

உ௰. நாயனரே, நாங்கள் தானியங் கொள்ளும்படி முன்னே வந்து போனேமே.

உக. நாங்கள் போய்த் தங்கின சத்திரத்திலே, எங்கள் போதிகளே அவிழ்த்து நாங்கள் நிறுத்துக்கொடுத்த நிறையின்படியே எங்கள் பணம் எங்கள் போதியிலிருக்கக் கண்டோம்; அதை நாங்கள் திரும்பவுங் கையிற்கொண்டுவந்தோம்.

உஉ. மேலும் தானியங் கொள்ளும்படி வேறுபணமுங் கொண்டுவந்தோம்; நாங்கள் முன்கொடுத்த பணத்தை எங்கள் போதி

களிற் போட்டவன் இன்னனென்றறியோ மென்றார்கள்.

உரு. அதற்கு அவன், சாந்தமாயிருங்கள். பயப்படவேண்டாம். உங்கள் பணம் என்னிடத்தில் வந்துவிட்டது. உங்கள் தேவனும், உங்கள் பிதாவின் தேவனுமாயிருக்கிறவரே, உங்களுக்கு மறைபொருளை உங்கள் பொதிகளில் அருளினரென்று சொல்லி, ஷிமியோனை வெளியே அழைத்துவந்து அவர்களிடத்தில் விட்டான்.

உச. மேலும் அந்த மனிதன் அவரகளை யோசேப்பின் வீட்டுக்குள்ளே கூட்டிக்கொண்டுபோய், அவர்கள் தங்கள் கால்களைக் கழுவும்படி தண்ணீர் கொடுத்து, அவர்களுடைய கழுதைகளுக்கு உணவைக் கொடுத்தான்.

உரு. அவர்கள் தாங்கள் அங்கே போசனஞ் செய்யப்போகிறதைக் கேள்விப்பட்டபடியால், மத்தியானமட்டில் யோசேப்பு வருவாரென்று காணிக்கையை ஆயத்தப்படுத்தி வைத்திருந்தார்கள்.

உசு. யோசேப்பு வீட்டுக்கு வந்தபொழுது அவர்கள் தங்கள் வசமிருந்த காணிக்கையை அவனிடத்திற் கொண்டுபோய், பூமிக்கு நேராய்த் தாழ்ந்து வணங்கினர்கள்.

உஎ. அவன் அவர்கள் சுகச்செய்தியைக் கேட்டு, நீங்கள் சொன்ன விருத்தனாகிய உங்கள் பிதா, சுகமாயிருக்கிறானா? இன்னும் இருக்கிறானாவென்று அவர்களிடத்தில் விசாரித்தான்.

உஅ. அதற்கு அவர்கள் எங்கள் பிதாவாகிய உமதடியான் சுகமாய் இருக்கிறார். இன்னும் இருக்கிறாரென்று சொல்லித் தாழ்ந்து வணங்கினார்கள்.

உகூ. பின்பு அவன் கண்ணேறிட்டுப் பார்த்து, தன் மாதா பெற்ற புத்திரனாகிய தன் சகோதரன் பேன்யாமீனைக் கண்டு, நீங்கள் எனக்குச் சொன்ன சகோதரன் இவன்தானாவென்று கேட்டு; என் மகனே, தேவன் உன்னைக் கடாட்சிக்கக்கடவரென்று சொல்லி,

௩௰. தன் சகோதரனைப் பற்றித் தன் வயிறு எரிந்தபடியால், அழுகிறதற்கு இடந்தேடித் துரிதமாய் அறைக்குள்ளே போய் அங்கே அழுதான்.

௩க. பின்பு அவன் தன் முகத்தைக் கழுவிப் புறப்பட்டுத் தன்னை அடக்கிக்கொண்டு போசனம் வைக்கச்சொன்னான்:

௩உ. எபிரேயருடனே போசனம்பண்ணுகிறது எகிப்தியருக்கு வெறுப்பானதினால், எகிப்தியர் அவர்களுடனே புசிக்கப்படாதேன்

று, அவனுக்கு வேறே, அவர்களுக்கு வேறே, அவனுடனே புசிக்கும் எகிப்தியருக்கு வேறே, பரிமாறினார்கள்.

௩௩. அவர்கள் அவனுக்கு முன்பாக மூத்தவன் தன் சேஷ்டபுத்திர அதிகாரத்தின்படி முதலிலும், இளையவன் தன் பிராயத்தின்படி கடைசியிலுமாக இருத்தப்பட்டார்கள். அதற்கு அவர்கள் ஒருவரோடொருவர் ஆச்சரியப்பட்டார்கள்.

௩௪. அவன் தனக்கு வைக்கப்பட்ட போசனத்தில் அவர்களுக்குப் பகிர்ந்தான். பென்யாமீனுடைய பங்கு, அவர்களுக்குப் பகிர்ந்ததிலும் ஐந்து மடங்கு அதிகமாயிருந்தது. அவனுடன் அவர்கள் திருத்தியாய்ப் பானம் பண்ணிக் களிகூர்ந்திருந்தார்கள்.

## சச. அதிகாரம்.

*க. யோசேப்புத் தன் சகோதரனைத் தடுக்க உபாயஞ் செய்தல் : யச. யூதா யோசேப்பைத் தாழ்ந்து வேண்டிக்கொள்ளல்.*

க. அவன் வீட்டுவிசாரணைக்காரனை நோக்கி, நீ இந்த மனிதருடைய போதிகளில், இவர்கள் ஏற்றிக்கொண்டுபோகத்தக்க தானியத்தை நிறைத்து, அவரவர் பணத்தை, அ

வரவர் போதியின் வாயிலே போடுவதன்றி,

உ. இளையவனுடைய போதியின் வாயிலே வெள்ளிப்பாத்திரமாகிய என் பானபாத்திரத்தையும், தானியத்துக்கு அவன் கொடுத்த பணத்தையும், போடென்றுங் கட்டளையிட்டான். யோசேப்பு தனக்குச் சொல்லிய வாக்கின்படி அவன் செய்தான்.

ங. அதிகாலையில் அந்த மனிதர்கள் தங்கள் கழுதைகளோடும் அனுப்பிவிடப்பட்டார்கள்.

ச. அவர்கள் நகரத்தை விட்டுப் புறப்பட்டு நெடுந்தூரம் போவதற்கு முன்னே, யோசேப்பு தன் வீட்டு விசாரணைக்காரனை நோக்கி, நீ எழுந்துபோய், அந்த மனிதரைத் தொடர்ந்து, அவர்களை அணுகி, அவர்களுடனே நீங்கள் நன்மைக்குத் தீமைசெய்ததென்ன?

ரு. அது என் ஆண்டவன் பானம்பண்ணுவதற்கும், குறிபார்ப்பதற்கும் உரியதல்லவா? நீங்கள் இப்படிச்செய்தது தீமையென்று சொல்லென்றான்.

சூ. அவன் அவர்களைத் தொடர்ந்து பிடித்து அவ்வாக்குகளையே சொன்னான்.

எ. அதற்கு அவர்கள் அவனை நோக்கி, என் ஆண்டவன், இப்படிப்பட்ட வாக்குகளைச் சொல்லுகிறதென்ன? இப்படிப்பட்ட காரி

யத்திற்கும், உம்முடைய அடியாராகிய எங்களுக்கும், வெகு தூரம்.

அ. கேளும், முன்னே நாங்கள் எங்கள் போதிவாயிலே கண்ட பணத்தைக் கானான் தேசத்திலிருந்து திரும்ப உம்மிடத்திற்குக் கொண்டுவந்தோமே; உம்முடைய எசமானன் வீட்டிலிருந்து பொன்வெள்ளிகளைத் திருடிக்கொண்டுபோவோமா?

கூ. உம்முடைய அடியாராகிய எங்களுக்குள்ளே அதை வைத்திருக்கிறவனெவனோ அவன் கொலையுண்ணக்கடவன்; நாங்களும் ஆண்டவனுக்கு அடிமைகளாவோமென்றார்கள்.

ய. அதற்கு அவன் உங்கள் சொற்படியே அதை வைத்திருக்கிறவனெவனோ, அவன் எனக்கு அடிமையாவான்; நீங்கள் குற்றமற்றவர்களாவீர்களென்றான்.

யக. அப்பொழுது அவர்கள் துரிதமாய்த் தங்கள் போதிகளைத் தரையில் இறக்கி, தங்கள் தங்கள் போதியை அவிழ்த்துவிட்டார்கள்.

யஉ. மூத்தவன் போதிமுதல், இளையவன் போதிமட்டும், சோதித்தபொழுது, அந்தப்பாத்திரம் பேன்யாமீனுடைய போதியிற் காணப்பட்டது.

யரு. அப்பொழுது அவர்கள் தங்கள் தங்க

ள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, தங்க ள் தங்கள் கழுதைகளின்மேற் சுமையேற்றி நகரத்திற்குத் திரும்பினார்கள்.

௰௪. யோசேப்பு அதுவரைக்கும் வீட்டிலே இருந்தபடியால், யூதாவும், அவன் சகோதரரும், அங்கே போய், அவனுக்கு முன்பாகத் தரையில் விழுந்தார்கள்.

௰௫. யோசேப்பு அவர்களை நோக்கி, நீங்கள் என்ன செய்கை செய்தீர்கள். என்னைப் போன்றவன் நிச்சயமாய்க் குறிபார்க்கக்கூடுமென்பதை அறியீர்களா என்றான்.

௰௬. அதற்கு யூதா, என் ஆண்டவனாகிய உம்முடனே நாங்கள் எதைச் சொல்லுவோம்? எதைப் பேசுவோம்? எப்படி நாங்கள்சுத்தராவோம்? உம்முடையஅடியாரின்பாவத்தைத் தேவன் விளங்கப்பண்ணினார். பாத்திரத்தை வைத்திருக்கிறவனும், நாங்களும் ஆண்டவனுக்கு அடிமைகளேயென்றான்.

௰௭. அதற்கவன் இப்படிப்பட்ட செய்கை எனக்குத் தகாது; பாத்திரத்தை வைத்திருக்கிறவனெவனோ அவனே எனக்கு அடிமையாயிருப்பான். நீங்களோ சமாதானத்துடன் உங்கள் பிதாவிடத்திற்குப் போங்களேன்றான்.

௰௮. அப்பொழுது யூதா அவனைச் சமீபித்

து, ஆ! என் ஆண்டவனே, அடியேன் சொல்லும் வாக்கைச் செவிசாய்த்துக் கேளும்: அடியேன்மேல் உமது கோபம் மூளாதிருப்பதாக. நீர் பார்வோனுக்கு ஒப்பாயிருக்கிறீரே.

௧௯. உங்கள் பிதா இருக்கிறாரா? சகோதரருமுண்டாவென்று, என் ஆண்டவன் உம்முடைய அடியாரிடத்திற் கேட்டீர்,

உ0. அதற்கு நாங்கள் விருத்தராய்ப் பிதா இருக்கிறாரென்றும், அவருக்கு விருத்தாப்பிய காலத்திற் பிறந்த ஒரு சிறுவன் உண்டென்றும், அவன் தமையன் இறந்து போனானென்றும், அவன் ஒருவன் மாத்திரமே அவனைப் பெற்ற மாதாவுக்கு இருப்பதினாற் பிதா அவன் மேலே நேசமாயிருக்கிறாரென்றுஞ் சொல்ல;

உக. நீர் உமதடியாரை நோக்கி, அவனை என்னிடத்திற்கு அழைத்துவாருங்கள். என் கண்ணினால் அவனைப் பார்க்கவேண்டுமென்றீர்.

உஉ. அப்பொழுது ஆண்டவனை நோக்கி, நாங்கள் அச்சிறுவன் பிதாவை விட்டுப் பிரியக்கூடாது. பிரிந்தால் பிதா இறந்துபோவாரென்றோம்.

உ௩. அதற்கு நீர் உமதடியாரை நோக்கி, உங்கள் இளைய சகோதரனை அழைத்துவரா

விட்டால், நீங்கள் இனி என் முகத்தைச் காணமாட்டீர்களென்றீர்.

உச. பின்பு நாங்கள் உமதடியானாகிய எங்கள் பிதாவினிடத்திற்குப் போய்ச் சேர்ந்து எங்கள் ஆண்டவனுடைய வாக்கை அவருக்கு அறிவித்தோம்.

உரு. எங்கள் பிதா எங்களை நோக்கி, நீங்கள் திரும்பிப்போய் நமக்குக் கொஞ்சம் தானியம் வாங்கிக்கொண்டு வாருங்களென்றுசொல்ல ;

உசா. நாங்கள் போகக்கூடாது. எங்கள் இளையசகோதரன் எங்களுடனேவந்தால், போவோம் ; எங்கள் இளைய சகோதரன் எங்களுடனேவராவிட்டால், நாங்கள் அந்தமனிதனுடைய முகத்தைக் காணக்கூடாதே என்றோம்.

உஎ. அப்பொழுது உமதடியானாகிய எங்கள் பிதா எங்களைநோக்கி, என்மனைவி எனக்கு இருவரைப்பெற்றாளென்பதை அறிந்திருக்கிறீர்கள்.

உஅ. அவர்களில் ஒருவன் என்னிடத்திலிருந்து புறப்பட்டுப் போய்விட்டான். மெய்யாக அவன் பீறுண்டுபோனானென்றேன். அதுமுதல் இதுவரைக்கும் அவனைக் காணவில்லை.

உகூ. நீங்கள் இவனையும், என்னைவிட்டுப்

பிரித்து, அழைத்துப் போகுமிடத்தில் இவனுக்கோரு தீங்கு நேரிட்டால், நரைதிரையுள்ளவனுகிய என்னைத்துக்கத்தோடே மரித்தோர் ஸ்தலத்திற்குப் போகப்பண்ணினீர்களென்றார்.

௩௰. இளையவனைவிட்டு அடியேன் என் பிதாவினிடத்திற்குப் போனுல், அவருடைய சீவன் இவனுடைய சீவனுடனே கட்டுண்டிருக்கிறதினுல்,

௩௧. இளையவன் வரவில்லையென்று, அவர் அறிந்தமாத்திரத்தில் இறந்துபோவார். உம்முடைய அடியாராகிய நாங்கள், உமதடியாணுகிய நரைதிரையுள்ள எங்கள்பிதாவைத் துக்கத்தோடே மரித்தோர்ஸ்தலத்திற்குப் போகப் பண்ணினவர்களாவோம்.

௩௨. அதுவுமன்றி, இச்சிறுவனைக் குறித்து அடியேன் என் பிதாவுக்கு உத்தரவாதி. நான் உம்மிடத்திற்கு இவனை அழைத்து வராவிட்டால், எப்போழுதும் உமக்குமுன்பாகக் குற்றவாளியாயிருப்பேனென்றும் சோல்லியிருக்கிறேன்.

௩௩. ஆதலால் இச்சிறுவனைத் தன் சகோதரருடனே போகவிடும்படி கேஞ்சிக்கேட்கிறேன். இவனுக்கீடாக அடியேன் என் ஆண்டவனுக்கு அடிமையாயிருப்பேன்.

௩௪. இச்சிறுவனைவிட்டு, எப்படி என் பிதாவினிடத்துக்குப்போவேன்? போனால், என் பிதாவுக்கு நேரிடுந் தீங்கை நான் காண்பேனேயென்றான்.

## ௪௫. அதிகாரம்.

க. யோசேப்பு தன்சகோதரருக்குத் தன்னை அறிவித்தல்; தேவானுக்கிரகத்தைப்புகழ்ந்து தன் பிதாவுக்குமங்கலசமாசாரமனுப்பல். ௰௬. யோசேப்பின் சகோதரர் வந்தமையைக் குறித்துப் பார்வோன்மகிழ்தல். உக. யோசேப்பு பிரயாணத்திற்கு வேண்டியவற்றைக் கொடுத்துச்சமாதானமாயிருக்கச்சொல்லல். உ௫. யோசேப்பு சீவனோடிருப்பதைக்கேட்டு யாக்கோபு பூரித்தல்.

க. அப்பொழுது யோசேப்பு, தன்னருகே நின்ற யாவருக்கும் முன்பாகத் தன்னை அடக்கிக்கொள்ளமாட்டாமல், யாவரும் என்னை விட்டு வெளியே போகப் பண்ணுங்களென்றுகட்டளையிட்டான். யோசேப்பு தன் சகோதரருக்குத் தன்னை அறிவிக்கையில் அவனருகே ஒருவரும் நிற்கவில்லை.

உ. எகிப்தியரும் பார்வோனுடைய குடும்பத்தாருங் கேட்க, அவன் குரலிட்டழுதான்.

௩. யோசேப்பு தன் சகோதரரை நோக்கி, நானே யோசேப்பு. என் பிதா இன்னுஞ் சீ

வித்திருக்கிருரா என்ருன். அவனுடைய சகோதரர் அவனுக்கு முன்பாகக் கலங்கினபடியால், அவனுக்கு உத்தரஞ் சொல்லக் கூடாமற் போயிற்று.

ச. யோசேப்பு தன் சகோதரரை நோக்கி, என்னருகே வாருங்களென்று சொல்ல, அவர்களுஞ் சமீபத்தில் வந்தார்கள். அப்பொழுது அவன் எகிப்தியரிடத்தில், நீங்கள் விற்ற உங்கள் சகோதரனுகிய யோசேப்பு, நானே.

ரு. என்னை இவ்விடத்தில் விற்றதின் நிமித்தம் நீங்கள் விசனப்படவும்வேண்டாம். உங்களை வெறுத்துக்கொள்ளவும் வேண்டாம். பிராணரட்சிப்பின் நிமித்தம் தேவன் என்னை உங்களுக்கு முன்னமே அனுப்பினுர்.

சு. தேசத்தில் இப்பொழுது இரண்டு வருஷமாகப் பஞ்சம் உண்டாயிருக்கின்றது. உழவும் அறுப்புமில்லாமல் இன்னும் ஐந்து வருஷமளவும் பஞ்சமிருக்கும்.

எ. பூமியிலே உங்கள் வமிசம் ஒழியாதபடி காப்பதற்காகவும், ஒரு பெரிய ரட்சிப்பினுல் உங்கள்சீவனைச் சீவிப்பிப்பதற்காகவும், தேவன் என்னை உங்களுக்கு முன்னமே அனுப்பினுர்.

அ. நீங்களல்ல, தேவனே இவ்விடத்திற்கு என்னை அனுப்பி, என்னைப் பார்வோனுக்

குப் பிதாவாகவும், அவருடைய குடும்பம் எல்லாவற்றிற்கும் அதிபதியாகவும், எகிப்துதேசம் முழுவதற்கும் அதிகாரியாகவும் பண்ணினார்.

௯. நீங்கள் என் பிதாவினிடத்தில் விரைந்துசென்று, தேவன் என்னை எகிப்து தேசம் முழுவதிற்கும் அதிகாரியாக வைத்தார். என்னிடத்தில் வாரும். தாமதிக்கவேண்டாம்.

௰. நீரும் உம்முடைய பிள்ளைகளும், அவர்களுடைய பிள்ளைகளும், உம்முடைய ஆடுமாடுகளோடும், உமக்குண்டாயிருக்கிற யாவற்றோடும் கோஷேன் நாட்டிலே எனக்குச் சமீபமாகவே வாசஞ் செய்யலாம். இன்னும் ஐந்து வருஷமளவும் பஞ்சம் இருக்கும்.

௰௧. ஆதலால் உமக்கும், உம்முடைய குடும்பத்தாருக்கும், உமக்குள்ள யாவற்றிற்கும், தரித்திரம் வராதபடிக்கு, அங்கே உம்மைக் காப்பாற்றிக் கொள்ளுவேனென்று, உம்முடைய புத்திரனாகிய யோசேப்பு சொல்லச் சொன்னானென்று சொல்லுங்கள்.

௰௨. பாருங்கள், உங்களுடனே பேசுகிறது என் வாய் தான் என்பதை நீங்களும், என் தம்பியாகிய பேன்யாமீனும், கண்ணினாற் காண்கிறீர்களே.

௰௩. எகிப்திலுள்ள எனது சகல மகிமை

ளையயும் நீங்கள் கண்ட யாவையும் என் பிதா வுக்குத் தெரிவித்து, அவர் சீக்கிரமாய் இவ்வி டத்துக்கு வரும்படி செய்யுங்களென்று சொ ல்லி,

யசு. தன் தம்பியாகிய பென்யாமீனின் கழு த்தைக் கட்டிக்கொண்டு அழுதான். பென்யா மீனும் அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுதான்.

யரு. பின்பு தன் சகோதரர் யாவரையும், முத்தஞ்செய்து, அவர்களைக் கட்டிக்கொண்டு அழுதான். அப்பால் அவன் சகோதரர் அவனு டனே சம்பாஷித்தார்கள்.

யசா. யோசேப்பின் சகோதரர் வந்தார்கள் என்ற சமாசாரம் பார்வோன் வீட்டிற் பிரசி த்தமானபொழுது, பார்வோனும் அவனுடை ய பணிவிடைக்காரருஞ் சந்தோஷப்பட்டார் கள்.

யஎ. பார்வோன் யோசேப்பை நோக்கி, நீ உன் சகோதரருடனே, உங்கள் கழுதைகளி ன் மேற் பொதிகளை எற்றிக்கொண்டு புறப்ப ட்டுக் கானான் தேசத்துக்குப் போய்,

யஅ. உங்கள் பிதாவையும், உங்கள் உங் கள் குடும்பத்தாரையுங் கூட்டிக்கொண்டு எ ன்னிடத்தில் வாருங்கள். நான் உங்களுக்கு எகிப்துத் தேசத்தின் நன்மையை அளிப்பே

ன். இத்தேசத்தின் புஷ்டியானதைப் புசிப்பீர்கள்.

௧௯. நீங்கள் உங்கள் குழந்தைகளுக்காகவும், மனைவிகளுக்காகவும், பண்டிகளை எகிப்து தேசத்திலிருந்து கொண்டு போய், உங்கள் பிதாவுடனே ஏற்றிக்கொண்டுவாருங்கள்.

உ௰. நீங்கள் உங்கள் பண்டங்களைப் பார்க்கவேண்டாம். எகிப்துத் தேசம் எங்குமுள்ள நன்மை உங்களுடையதாய் இருக்கும் என்று சொல்லச் சொல்லி, உனக்கு நான் இட்ட கட்டளைப்படியே செய்யென்றான்.

உக. இஸ்ரவேலின் புத்திரர் அப்படியே செய்ய விரைந்தார்கள். யோசேப்பும் பார்வோனுடைய கட்டளையின்படி, அவர்களுக்குப் பண்டிகளைக் கொடுத்ததுமன்றி,

உஉ. வழிக்கு ஆகாரத்தையும், ஒவ்வொருவருக்கும் மாற்று வஸ்திரங்களையுங் கொடுத்தான். பேன்யாமீனுக்கோ, முந்நூறுவெள்ளிக்காசையும், ஐந்து மாற்று வஸ்திரங்களையுங் கொடுத்தான்.

உஙூ. தன் பிதாவுக்குப் பத்து ஆண்கழுதைகளின்மேல் எகிப்துத் தேசத்தின் சிரேஷ்ட பதார்த்தங்களும், பத்துப் பெண்கழுதைகளில், வழிக்குத் தானியமும், அப்பமும் மற்றை உணவுகளும், ஏற்றி அனுப்பினன்.

உச. மேலும் நீங்கள் போகும் வழியிலே கலகம்பண்ணுதிருங்களென்று தன் சகோதரருக்குச் சொல்லி அனுப்பிவிட, அவர்கள் புறப்பட்டுப்போனார்கள்.

உரு. அவர்கள் எகிப்தை விட்டுப் போய்க் கானான் தேசத்திலே தங்கள் பிதாவாகிய யாக்கோபினிடத்திற் சேர்ந்து,

உசு. யோசேப்பு உயிரோடிருக்கிறான் என்றும், அவன் எகிப்துத் தேசம் யாவையும் ஆளுகிறான் என்றும், அறிவித்தார்கள். அப்பொழுது அவன் மனஞ் சோர்ந்தது, அவன் அவர்களை நம்பவில்லை.

உஎ. பின்னும் அவர்கள் தங்களுடனே யோசேப்புச் சொன்ன வாக்குகள் யாவையும் அவனுக்குச் சொன்னார்கள். தன்னை ஏற்றிக்கொண்டு போகும்படி யோசேப்பு அனுப்பின பண்டிகளைக் கண்டமாத்திரத்தில், அவர்கள் பிதாவாகிய யாக்கோபினுடைய இருதயம் பூரித்தது.

உஅ. போதும், என் புத்திரனாகிய யோசேப்பு உயிரோடிருக்கிறான். நான் மரிக்கு முன்னே போய் அவனைக் காண்பேன் என்று இஸ்ரவேல் சொன்னான்.

# சசு. அதிகாரம்.

க. யாக்கோபு பிரயாணம்பண்ணிப் பேர்ஷேபாவிலே தேவனைத் தரிசித்தல்: ரு. எகிப்திற்குப் போய்ச் சேர்தல்: அ. அவனுடைய வமிசவரலாறு: உஅ. யோசேப்பை அவன் சந்தித்தல்: ௩க. யோசேப்பு தன் சகோதரருக்குப் புத்தி சொல்லல்.

க. பின்பு இஸ்ரவேல் தனக்குண்டான யாவையுஞ் சேர்த்துக்கொண்டு, புறப்பட்டுப் பேர்ஷேபாவுக்குப் போய், தன் பிதாவாகிய ஈசாக்கின் தேவனுக்குப் பலியிட்டான்.

உ. அன்றிரவிலே தேவன் இஸ்ரவேலுக்குத் தரிசனையாய், யாக்கோபே, யாக்கோபே, என்றழைக்க, அவன அடியேன் என்றான்.

௩. அவர் நான், தேவன். உன் பிதாவின் தேவன். நீ எகிப்து தேசத்திற்குப் போகப் பயப்பட வேண்டாம்.

ச. நான் அங்கே உன்னில் ஒரு பெரிய சாதியைத் தோற்றுவிப்பேன். நானும் உன்னோடே எகிப்துக்கு வருகிறேன். திரும்பவும் உன்னைக் கூட்டிக்கொண்டு வருவேன். யோசேப்பு தன் கையால், உன் கண்களை மூடுவானென்றார்.

ரு. பின்பு யாக்கோபு பேர்ஷேபாவில் நின்றும் புறப்பட்டான். இஸ்ரவேலின் புத்தி

ரர் தங்கள்பிதாவாகிய யாக்கோபை ஏற்றிவரும்படி பார்வோன் அனுப்பின பண்டிகளின் மேலே தங்கள் குழந்தைகளையும், மனைவிகளையும், யாக்கோபையும் ஏற்றிக்கொண்டும்,

கூ. தங்கள் ஆட்டுக்கூட்டங்களையும், தாங்கள் கானான் தேசத்திற் சம்பாதித்த பொருள்களையுஞ் சேர்த்துக்கொண்டும் யாக்கோபும் அவன் சந்ததியார் யாவரும் எகிப்திற்குப் போனார்கள்.

எ. இப்படி அவன், தன் புத்திரரும், அவர்கள் புத்திரரும், தன் புத்திரிகளும், அவர்கள் புத்திரிகளுமாகிய தன் சந்ததியார் எல்லாரையும், எகிப்திற்குத் தன்னோடே அழைத்துக்கொண்டு போனான்.

அ. எகிப்தில் சேர்ந்த இஸ்ரவேல் சந்ததியாருடைய நாமங்களாவன; யாக்கோபும், அவனுடைய புத்திரரும்,

கூ. யாக்கோபினுடைய சேஷ்ட புத்திரன் ரூபேன். ரூபேனுடைய புத்திரர் ஆனோகு, பல்லூ, எத்சரோன், கர்மி என்பவர்கள்.

ய. ஷிமியோனுடைய புத்திரர் யெமுவேல், யாமின், ஒகாத், யாகின், சோகார், கானானிய ஸ்திரியின் புத்திரனாகிய ஷவுல் என்பவர்கள்.

யக. லேவியினுடைய புத்திரர் கேர்ஷோன், கோகாத், மிராரி என்பவர்கள்.

யஉ. யூதாவினுடைய புத்திரர் ஏர், ஓனன், ஷேலா, பேரேஸ், சேரக் என்பவர்கள். அவர்களில் ஏரும், ஓனனும், கானான் தேசத்தில் இறந்து போனார்கள். பேரேசுவின் புத்திரர் எத்சரோன், ஆமூல் என்பவர்கள்.

யஙூ. ஈஷகாரின் புத்திரர் தோலா, பூவா, யோபு, ஷிம்ரோன் என்பவர்கள்.

யச. செபுலோனுடைய புத்திரர் சேரேத், ஏலோன், யகலேல் என்பவர்கள்.

யரு. இவர்களே லேயாளின் சந்ததியார். அவள் இவர்களையும் தீனாள் என்னுமோர்புத்திரியையும் பதனாராமிலே யாக்கோபுக்குப் பெற்றாள். அவனுடைய புத்திரரும் புத்திரிகளும் ஆக முப்பத்து மூன்றுபேர்.

யசூ. காத்தினுடைய புத்திரர் சிப்பியோன், அகி, ஷூனி, எத்ஸ்போன், ஏரி, அரோதி, அரேலி என்பவர்கள்.

யஎ. ஆஷேருடைய புத்திரர் இம்னா, இஷ்பா, இஷ்வி, பேரீ என்பவர்கள். இவர்களுடைய சகோதரி சேராக். பேரீயினுடைய புத்திரர் ஏபேர், மல்கியேல் என்பவர்கள்.

யஅ. இவர்களே இலாபான் தன் புத்திரியாகிய லேயாளுக்குக் கொடுத்த சில்ப்பாளுடைய புத்திரர். அவள் இந்தப் பதினாறு பேரையும் யாக்கோபுக்குப் பெற்றாள்.

யசு. யாக்கோபின் மனைவியாகிய ராகேலின் புத்திரர் யோசேப்பு, பேன்யாமீன் என்பவர்கள்.

உய. ஓன் நகரத்திலிருந்த ஆசாரியனாகிய போத்திப் பேராவின் புத்திரி அஸ்நாத்து யோசேப்புக்குப் பெற்ற மனாஷே, எப்பிராயீம் என்பவர்கள் எகிப்துதேசத்திலே பிறந்தார்கள்.

உக. பேன்யாமீனுடைய புத்திரர் பேலா, பேகேர், அஷ்பேல், கேரா, நாமான், எகி, ரோஷ், முப்பீம், உப்பீம், ஆராத்து என்பவர்கள்.

உஉ. ராகேல் யாக்கோபுக்குப் பெற்ற புத்திரராகிய இவர்கள் ஆகப் பதினாலுபேர்.

உரு. தாணுடைய புத்திரன் ஊஷிம்.

உச. நப்தாலியின் புத்திரர் யாக்சேல், கூனீ, யேத்சேர், ஷில்லேம் என்பவர்கள்.

உரு. இவர்களே லாபான் தன் புத்திரியாகிய ராகேலுக்குக் கொடுத்த பில்க்காள் யாக்கோபுக்குப் பெற்ற புத்திரர். இவர்கள் ஏழுபேர்.

உசூ. யாக்கோபின் புத்திரருடைய மனைவிகள் தவிர, அவனுடைய சந்ததியாய் அவனுடனே எகிப்திற்குப் போனவர்கள், ஆக அறுபத்தாறுபேர்.

உஎ. யோசேப்புக்கு எகிப்திற் பிறந்த புத்

திரர் இரண்டுபேர். ஆக எகிப்துக்குப் போன யாக்கோபின் குடும்பத்தார் எழுபதுபேர்.

உஅ. யாக்கோபு கோஷேன் நாட்டிலே தன்னை யோசேப்பு சந்திக்க வரும்படி சொல்ல, யூதாவைத் தனக்கு முன்னாக அவனிடத்தில் அனுப்பினான். தாங்களும் கோஷேன் நாட்டிற் சேர்ந்தார்கள்.

உகூ. யோசேப்பு தன் இரதத்தை, ஆயத்தப்படுத்தி அதன் மேல் ஏறிக் கோஷேனிலே தன் பிதாவாகிய இஸ்ரவேலைச் சந்திக்கும்படி கோஷேன் நாட்டிற் சேர்ந்து, அவனுக்கு முற்பட்டுக் கழுத்தைக் கட்டிக்கொண்டு, வெகு நேரம் அவன் கழுத்தை விடாமலழுதான்.

ஙய. அப்பொழுது இஸ்ரவேல் யோசேப்பை நோக்கி, ஆ! உயிரோடிருக்கிறாய். உன் முகத்தையுங் கண்டேன். இனி நான் மரித்தாலுமென்னவென்றான்.

ஙக. யோசேப்பு தன் சகோதரரையும், தன் பிதாவின் குடும்பத்தையும் நோக்கி, நான் பார்வோனிடத்திற்குப் போய்க் கானான்தேசத்திலிருந்து, என்னுடைய சகோதரரும், என் பிதாவின் குடும்பத்தாரும், என்னிடத்தில் வந்திருக்கிறார்கள்.

ஙஉ. அவர்கள் மேய்ப்பர். ஆடுமாடுகள் மேய்க்கிறவர்களாயிருக்கிறார்கள். அவர்கள்

தங்கள் ஆடுமாடுகளையும், தங்களுக்குண்டான எல்லாவற்றையுங் கொண்டுவந்தார்களென்று அவருக்குச் சொல்லுவேன்.

௩௩. மெய்ப்பர் யாவரும், எகிப்தியருக்கு வெறுப்பாயிருக்கிறார்கள். ஆதலால் பார்வோன் உங்களை அழைத்து உங்கள் தொழிலென்னவென்று கேட்குமிடத்தில்,

௩௪. அவனை நோக்கி, உமதடியாராகிய நாங்கள் எங்கள் சிறுவயதுமுதல் இதுவரைக்கும் எங்கள் பிதாக்களைப்போல, மெய்ப்பராயிருக்கிறோமென்று சொல்லுங்கள். அப்பொழுது நீங்கள் கோஷேன் நாட்டிலே வாசம்பண்ணப்பெற்றுக்கொள்வீர்களென்றான்.

## சஎ. அதிகாரம்.

*க. யோசேப்பு தன் பிதாவையுஞ் சகோதரரில் ஐவரையும் பார்வோனைச் சந்திக்கச்செய்தல்: ௰௩. தேசத்தார் தானியத்துக்கு வெள்ளிநாணயம் மிருகசீவன் முதலியவற்றை மாற்றல்: உ௩. விளைவில் ஐந்திலொருபங்குக்கு விதைத்த தானியங் கொடுத்தல்: உஅ. யாக்கோபு யோசேப்பினிடத்தில் ஆணை வாங்கல்.*

க. பின்பு யோசேப்பு பார்வோன் சமுகத்திற் சேர்ந்து, என் பிதாவும், என் சகோதரரும், தங்கள் ஆடுமாடுகளையும், தங்களுக்குண்

டான யாவையுங் கொண்டு, கானான்தேசத்தி லிருந்து வந்து, கோஷேன் நாட்டிலே இருக் கிறார்களென்று சொல்லி,

௨. தான் அழைத்துவந்த ஐந்து சகோதர ரையும் பார்வோன் முன் விட்டான்.

௩. பார்வோன் அவனுடைய சகோதரரை நோக்கி, உங்கள் தொழிலென்னவென்றான். அதற்கு அவர்கள் பார்வோனிடத்தில், உமத டியாராகிய நாங்களும் எங்கள் பிதாக்கள் போல மேய்ப்பராயிருக்கிறோமென்றார்கள்.

௪. கானான் தேசத்திலே பஞ்சங் கொடிதா யிருக்கின்றது. உமதடியாரின் ஆடுகளுக்கு மேய்ச்சல் இல்லாமையால், இத்தேசத்தில் தங்க வந்தோம். உமதடியாராகிய நாங்கள் கோஷேன் நாட்டிலே வசிக்கும்படி தயை செய்யுமென்று சொல்லிப் பார்வோனிடத்தி ல் வேண்டிக்கொண்டார்கள்.

௫. பார்வோன் யோசேப்பை நோக்கி, உ ன் பிதாவும், சகோதரரும், உன்னிடத்தில் வந்துவிட்டார்களே.

௬. எகிப்துதேசம் உனக்கு முன்பாக இரு க்கின்றது. தேசத்தில் வளமான இடத்தில் உன் பிதாவும், சகோதரரும் வசிக்கக்கடவர் கள். கோஷேன் நாட்டிலும் வாசம்பண்ண லாம். அவர்களுக்குள்ளே, சாமர்த்தியருண்

டேன்று கண்டால், அவர்களை என்னுடைய ஆடுமாடுகளை விசாரிக்கிறதற்குத் தலைவராக வைக்கலாமேன்றான்.

எ. பின்பு யோசேப்பு தன் பிதாவாகிய யாக்கோபை அழைத்துவந்து, பார்வோன் முன் விட்டான். யாக்கோபு பார்வோனை ஆசீர்வதித்தான்.

அ. பார்வோன் யாக்கோபை நோக்கி, உமக்கு எத்தனை வயதென்று கேட்க,

கூ. யாக்கோபு நான் உழன்று திரிந்தகாலம் நூற்றுமுப்பதுவருஷம். என்னுயுள்காலம், அற்பமும், கிலேசமுமுள்ளது. உழன்று திரிந்த என் பிதாக்களுடைய ஆயுள்நாள்போலல்லவென்றான்.

௰. பின்னும் யாக்கோபு பார்வோனை ஆசீர்வதித்து, அவனை விட்டுப் புறப்பட்டான்.

௰க. பார்வோன் இட்ட கட்டளைப்படி யோசேப்பு, தன் பிதாவுக்கும், சகோதரருக்கும் எகிப்துதேசத்தில் வளமான நாடாகிய ராமேசேஸ் என்னும் ஸ்தானத்தில் சுதந்தரங்கொடுத்து, அவர்களை இருக்கச்செய்தான்.

௰உ. யோசேப்பு தன் பிதாவையும், சகோதரரையும் தன் பிதாவுடைய குடும்பத்தாரனைவரையும், அவரவர் குடும்பத்திற்குத்தக்க ஆகாரங்கொடுத்து, ஆதரித்துவந்தான்.

௪௩. பஞ்சம் மிகவுங் கொடிதாயிருந்தது. தேசத்தில் எங்கும் ஆகாரங்கிடையாமற் போயிற்று. எகிப்து தேசமும், கானான் தேசமும் பஞ்சத்தினால் இளைத்துப் போயின.

௧௪. எகிப்துதேசத்திலும், கானான் தேசத்திலுமுள்ள பணமெல்லாம் தானியத்தைக் கொண்டவர்களிடத்தில் யோசேப்பு வாங்கி, பார்வோன் வீட்டிற் சேர்ப்பித்தான்.

௧௫. எகிப்துதேசத்திலும், கானான் தேசத்திலுமுள்ள பணம் ஒழிந்தபின், எகிப்தியரெல்லாரும் யோசேப்பினிடத்தில் வந்து, எங்களுக்கு ஆகாரந் தாரும்; பணமோ ஒழிந்தது. உமது சமுகத்திற் சாவானேன் என்றார்கள்.

௧௬. அதற்கு யோசேப்பு, உங்களிடத்திற் பணமில்லாவிட்டால், உங்கள் ஆடுமாடுகளைக் கொடுங்கள். அவைகளைக் கொடுத்தால் உங்களுக்குத் தருவேனென்று சொல்ல,

௧௭. அவர்கள் ஆடு மாடுகள் முதலானவைகளை யோசேப்பினிடத்திற்குக் கொண்டுவந்தார்கள். யோசேப்பு அப்படியே குதிரைகளையும், ஆடுகளையும், மாடுகளையும், கழுதைகளையும் வாங்கிக்கொண்டு, அவர்களுக்கு ஆகாரங் கொடுத்து, அந்த வருஷம் அவர்களுடைய ஆடு மாடு முதலான எல்லாவற்றிற்கும் பிரதியாக, அவர்களை ஆதரித்தான்.

௰௮. அந்த வருஷஞ் சென்றபின், மறுவருஷம், அவர்கள் அவனிடத்தில் வந்து அவனை நோக்கி, பணமுஞ் செலவழிந்துபோயிற்று. எங்கள் ஆடு மாடு முதலானவைகளும், எங்கள் ஆண்டவன் வசமாயின. எங்கள் சரீரங்களும், எங்கள் நிலங்களுமேயொழிய எங்கள் ஆண்டவனுக்கு முன்பாகச் சேஷம் ஒன்றும் இல்லை. இது எங்கள் ஆண்டவனுக்கு மறைந்திருக்கவில்லை.

௰௯. நாங்களும், எங்கள் நிலங்களும், உம்முடைய கண்களுக்கு முன்பாக அழிந்து போகலாமா? ஆகாரத்திற்கு மாருக எங்களையும், எங்கள் நிலங்களையும் ஏற்றுக்கொள்ளும். நாங்களும், எங்கள் நிலங்களோடே பார்வோனுக்கு அடிமைப்பட்டிருப்போம். நாங்கள் சாவாமல் சீவித்திருக்கவும், நிலங்கள் பாளாய்ப் போகாமலிருக்கவும் எங்களுக்கு விதைத்தானியத்தைத் தாருமென்றார்கள்.

௨௰. எகிப்தியர் தங்களுக்குள் பஞ்சம் மேலிட்டபடியால், அவரவர், தங்கள் தங்கள், வயல் நிலங்களை விற்றார்கள். யோசேப்பு எகிப்தின் நிலங்கள் யாவையும், பார்வோனுக்காக வாங்கினன். இப்படியே நிலமுழுதும் பார்வோனுடையதாயிற்று.

௨௧. மேலும் அவன் எகிப்தின் ஒரு எல்லை

முதல் மற்ற எல்லைவரைக்குமுள்ள சனங்களை, அந்தந்த நகரங்களில் வரப்பண்ணினுன்.

உஉ. ஆசாரியருடைய நிலத்தை மாத்திரம் அவன் கொள்ளவில்லை. அது பார்வோனால் ஆசாரியருக்கு மானியமாய்க் கொடுக்கப்பட்டிருந்தாலும் பார்வோன் தங்களுக்குக் கொடுத்த மானியத்தினாலே அவர்கள் சீவனஞ் செய்து வந்ததினாலும், அவர்கள் நிலத்தை விற்கவில்லை.

உ௩. பின்னும் யோசேப்பு, சனங்களுக்கு இன்று உங்களையும், உங்கள் நிலங்களையும், பார்வோனுக்காக வாங்கினேன், பாருங்கள். இங்கே உங்களுக்கிருக்கிற விதைத்தானியத்தை எடுத்து, நிலங்களில் விதைக்கலாம்.

உச. விளைவில் ஐந்திலொன்றைப் பார்வோனுக்குக் கொடுக்கவேண்டும், மற்ற நாலுபங்கு, வயல் விதைப்பதற்காகவும், உங்களுக்கும், உங்கள் குடும்பத்தாருக்கும், குழந்தைகளுக்கும், ஆகாரத்துக்காகவும், உங்களுடையவைகளாயிருக்குமென்றான்.

உரு. அப்பொழுது அவர்கள், நீர் எங்கள் சீவனை இரட்சித்தீர்; எங்கள் ஆண்டவனுடைய கடாட்சம் எங்கள்மேல் இருப்பதாக; நாங்கள் பார்வோனுக்கு அடிமைகளாவோமென்றார்கள்.

உகூ. யோசேப்பு இட்ட கட்டளைப்படி எகிப்து தேசத்தில் ஐந்திலொன்றாகப் பார்வோனுக்குக் கொடுக்கும் வாரம் இந்நாள்வரைக்கும் நடந்துவருகின்றது. ஆசாரியரின் நிலமோ, பார்வோனைச் சேராமல் நீங்கலாயிற்று.

உஎ. இஸ்ரவேலர் எகிப்துதேசத்திலுள்ள கோஷேன் நாட்டில் வாசம்பண்ணினார்கள். அங்கே அவர்கள் சுதந்தரங்களைப் பெற்று, வர வர மிகவும் வர்த்தித்துப் பெருகினார்கள்.

உ௮. யாக்கோபு எகிப்துதேசத்திலே பதினேழுவருஷம் வசித்தான். யாக்கோபின் பூரண ஆயுள் காலம் நூற்றுநாற்பத்தேழு வருஷம்.

உ௯. இஸ்ரவேல் மரணமடையுங்காலம் சமீபித்தது. அப்பொழுது அவன், தன் குமாரனாகிய யோசேப்பை வர அழைத்து, அவனை நோக்கி, நான் என் பிதாக்களோடே அடக்கம்பண்ணப்பட விரும்புகிறேன். என்மேல் உனக்குக் கருணையுண்டானால், என்னை எகிப்தில் அடக்கம்பண்ணாமல்,

௩௰. என்னை எகிப்திலிருந்து எடுத்துக்கொண்டுபோய், அவர்களை அடக்கம்பண்ணியிருக்கிற மயான ஸ்தானத்தில் என்னையும் அடக்கம்பண்ணுவாயென்பதைக் குறித்து, எனக்குத் தயையுஞ் சத்தியமுங் காட்டும்பொருட்

டு, உன் கையை என் தொடையின் கீழ் வைக்கவேண்டுமென்றான். அதற்கவன் நீர் சொன்னபடி செய்வேனென்றான்.

௩௧. அவன் எனக்கு ஆணையிடு, என்றான். இவன் அவனுக்கு ஆணையிட்டான். பின்பு கட்டிலின் தலைமாட்டிலே இஸ்ரவேல் சாய்ந்தான்.

## ௪௮. அதிகாரம்.

*௧. வியாதியாய்க்கிடந்த யாக்கோபை யோசேப்பும் அவன் புத்திரரிருவரும் சந்தித்தல்: ௮. அவன் எப்ராயீமையும், மனாசேயையும், ஆசீர்வதித்தல். இளையவனைப் பிரதானியாக்கல்: ௰௫. யோசேப்புடன் சம்பாஷித்தல்: ௨௧. இஸ்ரவேல்சந்ததியார் கானானுக்குத் திரும்பிப் போவதைக்குறித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லல்.*

௧. இக்காரியங்கள் நடந்தபின் யோசேப்புக்கு ஒருவன் உம்முடைய பிதா வருத்தமாயிருக்கிறாரென்றான். அவன் மனாசே, எப்ராயீம் என்னுந் தன் புத்திரரிருவரையும், தன்னுடனே அழைத்துக்கொண்டு போனான்.

௨. ஒருவன் யாக்கோபை நோக்கி, உம்முடைய குமாரனாகிய யோசேப்பு வந்திருக்கிறாரென்று அறிவித்தான். அப்பொழுது இஸ்

ரவேல் உச்சாகங்கொண்டெழுந்து கட்டிலி ன்மேல் இருந்தான்.

௩. யாக்கோபு யோசேப்பை நோக்கி, சர் வவல்லமையுள்ள தேவன் கானான் தேசத் திலே லூசில் எனக்குத் தரிசனையாகி, என் னை ஆசீர்வதித்து,

௪. நான் உன்னில் அனேக சனங்களைத் தோற்றுவித்து, உன்னைப் பல்கிப் பெருகச் செய்து, உன் பின் சந்ததிக்கு நித்திய சுதந்த ரமாயிருக்கும்படி இத்தேசத்தை அளிப்பே னென்று அருளினார்.

௫. நான் எகிப்தில் உன்னிடத்திலே வரு முன்னே, உனக்கு இத்தேசத்திற் பிறந்த இ ரண்டு புத்திரரும் என்னுடையவர்கள்; ரூ பேனும், ஷிமியோனும்போல, எப்ராயீமும், மனாஷேயும், என்னுடையவர்கள்.

௬. இவர்களுக்குப் பின் நீ பெறும் பிள்ளை கள் உன்னுடையவர்கள், அவர்கள் தங்கள் தங்கள் சகோதரருடைய சுதந்தரத்தில், அவ ரவர் பேரைப் பெற்றிருப்பார்கள்.

௭. நான் பதானை விட்டுவருகையில் கானா ன் தேசத்தில் எப்ராத்தாவுக்குச் சற்றே தூர மாயிருக்கும்பொழுது வழியிலே ராகேல் என் சமீபத்தில் மரணமடைந்தாள். அவளை அ ங்கே பேத்லகேம் என்னும் எப்ராத்தா ஊரு

க்குப் போகிற வழியிலே, அடக்கம்பண்ணி னேனென்ருன்.

அ. பின்பு இஸ்ரவேல் யோசேப்பினுடை ய புத்திரரைக் கண்டு, இவர்கள் ஆரென்று கேட்க;

கூ. யோசேப்பு இவர்களே இவ்விடத்தில் தேவன் எனக்கருளிய புத்திரரென்ருன். அ வன் நான் இவர்களை ஆசீர்வதிக்கும்படி, எ ன்னிடத்திற் கொண்டுவாவென்ருன்.

ய. முதிர்ந்த பிராயத்தினுல் இஸரவேல் க ண்ணெளி மழுங்கிப் பார்வை குறைந்தவனு யிருந்தான். அதினுல் அவர்களை அவன் சமீப த்திற் கொண்டுபோய்விட்டான். அவன் அவ ர்களை முத்தமிட்டுத் தழுவினுன்.

யக. இஸ்ரவேல் யோசேப்புடன், உன் மு கத்தையுங் காண்பேனென்று நான் நினைத்தி ருக்கவில்லை. உன் சந்ததியையுங் காணும் படி தேவன் எனக்கு அருள் செய்தாரென் ருன்.

யஉ. அப்பொழுது அவனுடைய முழந்தா ளின் மத்தியில் நின்ற புத்திரரை, யோசேப்பு ப் பின்னிடப்பண்ணி, அவன் முகத்துக்குமு ன்பாகப் பூமிக்குநேராய்த் தாழ்ந்துவணங்கி னுன்.

யங. யோசேப்பு அவ்விருவரையும் பிடித்

து, எப்ராயீமைத் தன் வலக்கையினுலே இஸ்ரவேலின் இடக்கைக்கு நேராகவும், மனுஷேயைத் தன் இடக்கையினுலே இஸ்ரவேலின் வலக்கைக்கு நேராகவும்விட்டான்.

௰௪. அப்பொழுது இஸ்ரவேல் புத்திபூர்வமாயத் தன் வலக்கையை நீட்டி இளையவனுகிய எப்ராயீமுடைய தலையின்மேலும், மனுஷே மூத்தவனுயிருந்தும், தன்இடக்கையை மனுஷேயுடைய தலையின்மேலும் வைத்தான்.

௰௫. பின்பு அவன் யோசேப்பை ஆசீர்வதித்து, என் பிதாக்களாகிய ஆபிரகாமும் ஈசாக்கும் சார்ந்துநடந்த தேவனும், நான் பிறந்தநாள் முதல் இந்நாள்வரைக்கும் என்னை ஆதரித்துவந்த தேவனும், சகல தீங்குகளில்நின்றும் என்னைமீட்ட தூதனுமாயிருக்கிறவர், இந்தப்பாலகரை ஆசீர்வதிக்கக்கடவர்.

௰௬. என் பேரும், என்பிதாக்களாகிய ஆபிரகாம் ஈசாக்கு என்பவர்களுடையபேரும், இவர்களுக்கு இடப்படக்கடவன. பூமியில் இவர்கள் மிகுதியாய்ப் பெருகக்கடவர்களென்றுன்.

௰௭. பிதா தன் வலக்கையை எப்ராயீமுடைய தலையின் மேல் வைத்ததை யோசேப்புக்கண்டு, அது தனக்குப் பிரியவீனமாயிருந்

தபடியால், எப்ராயீமுடைய தலையின்மேலி ருந்த தன் பிதாவின்கையை மனாசேயினு டைய தலையின் மேல் வைக்கும்படி தூக்கி,

௰௯. என் பிதாவே, அப்படியல்ல, இவ னே மூத்தவன். இவனுடைய தலையின் மே ல் உம்முடையவலக்கையை வைக்கவேண் டுமென்றான்.

௰௯. அவனுடைய பிதா அதைமறுத்து, அ து எனக்குத்தெரியும், என்மகனே, அது எ னக்குத்தெரியும். இவனும் ஒருசாதியாருக்கு முதன்மையாவான். இவனும் பெருகுவான். ஆகிலும் இவனுடையதம்பி, இவனிலும் அ திகமாய்ப் பெருகுவான். அவனுடைய சந்ததி யார் திரளான சாதிகளாவார்களென்றான்.

௨௰. இவ்விதமாக அவன் அத்தினத்தில், அவர்களை ஆசீர்வதித்து, இஸ்ரவேலர் ஒருவ ரையொருவர்நோக்கி, "தேவன் உன்னை எப் ராயீமைப்போலவும், மனாசேயைப்போல வும் ஆக்கக்கடவர்"என்றுசொல்லி உன்னைக் குறித்து, வாழ்த்துவார்களென்றான். அவன் எ ப்ராயீமை மனாசேக்குத் தலைமையாக வை த்தான்.

௨௧. பின்பு இஸ்ரவேல் யோசேப்பைநோ க்கி, எனக்கு மரணகாலஞ் சமீபித்தது. தேவ ன் உங்கள் பட்சமாயிருந்து, உங்கள் பிதாக்க

ளின் தேசத்திற்கு உங்களைத் திரும்பவும் சேரப்பண்ணுவாரேன்றும்,

உஉ. உன் சகோதரரிலும் அதிகமாக நான் என்கத்தியினாலும், வில்லினாலும், எமோரியர்கையிலிருந்து பற்றிக்கோண்ட பங்கை உனக்கு அளித்தேனேன்றும், சோன்னான்.

## சகூ. அதிகாரம்.

க. யாக்கோபு தன்புத்திரரனைவரையும் ஒருங்குவரச்செய்தல்: ௩. அவரவருக்குப் பின்நடப்பனவுரைத்தல்: உகூ. தன்னை இன்னபிரகாரம் அடக்கம்பண்ணவேண்டுமேனல்: ௩௩. அவன் மரணமடைதல்.

க. பின்பு யாக்கோபு தன்புத்திரரை அழைத்து, நீங்கள் கூடிவாருங்கள். பிற்காலத்தில் உங்களுக்கு நேரிடுங் காரியங்களை அறிவிப்பேன்.

உ. யாக்கோபின் புத்திரரே, கூடிவந்துகேளுங்கள், உங்கள் பிதாவாகிய இஸ்ரவேலுக்குச் சேவிகோடுங்கள்.

௩. ரூபேனே, நீ என் சேஷ்டபுத்திரன். என்சக்தி. என் முதற்பலம். மகிமையின் பிரதானமும், பராக்கிரமத்தின் பிரதானமுமானவன்.

ச. நீ உன் பிதாவின் மஞ்சத்தில் ஏறினாய்.

என்சயனத்திலேறி, அதை அசுசிப்படுத்தினு ய். சலனமான நீரைப் போலிருக்கிருய். நீ மேன்மை பேருய்.

ரு. ஷிமியோனும், லேவியுமே சகோதரர். அவர்கள் கட்கங்கள் கொடுமையின் கருவிக கள். என் மனமே, அவர்களுடைய இரகசிய ஆலோசனைக்குடன்படாதே. என்மேன்மை யே,அவர்களுடைய கூட்டத்தில் நீ சேராதே.

சூ. அவர்கள் தங்கள் குரோதத்தினுல் ஒரு மனிதனைக் கொன்று, தங்கள்அகங்காரத்தினு ல் மதிலை இடித்தார்கள்.

எ. உக்கிரமான அவர்கள் கோபமும், கொ டுமையான அவர்கள் மூர்க்கமும், சபிக்கப்ப டக்கடவன். யாக்கோபின் தேசத்தில் அவர் களைப் பிரிப்பேன். இஸ்ரவேலருக்குள்ளே அவர்களைச் சிதற அடிப்பேன்.

அ. யூதாவே, உன் சகோதரர் உன்னைப் போற்றுவார்கள். உன்கை உன் சத்துருக்களி னுடைய பிடரியின் மேல் இருக்கும். உன் பிதாவின் சந்ததியார், உனக்கு முன் தாழ்ந்து வணங்குவார்கள். யூதா ஒரு சிங்கக்குட்டி.

கூ. என் மகனே, நீ இரை கவர்ந்துகொ ண்டு, மேலிட்டுவந்தாய். அவன் சிங்கம் போலவும், கிழச்சிங்கம்போலவும், பதுங்கி க் கிடந்தான். அவனை எழுப்புவார் யாவர்?

௰. ஷீலோ வருமளவும், செங்கோல் யூ தாவை விட்டு நீங்குவதும்; நியாயாதிபதி அ வனுடைய பாதங்களை விட்டொழிவதுமில் லை. சனங்கள் அவனிடத்திற் சேருவார்கள்.

௰க. அவன் திராட்ச் கொடியினிடத்திற் பெட்டைக் கழுதையையும், செழுமையான திராட்சக் கொடியினிடத்திற் கழுதைக்குட் டியையும் கட்டுவான். திராட்சரசத்திலே த ன் வஸ்திரத்தையும், திராட்சச் செந்நீரிலே, தன் அங்கியையும் தோய்ப்பான்.

௰உ. அவன் கண்கள் திராட்ச ர்சத்தினற் சிவந்தும், அவன் பற்கள் பாலினல் வெளுத் துமிருக்கும்.

௰௩. செபுலோன் சமுத்திர தீரத்தில் வசி ப்பான். அவன் கப்பல் துறைமுகமாய் இரு ப்பான். அவனுடைய எல்லை சீதோன்வரை க்குமிருக்கும்.

௰௪. ஈஷகார், இருபோதிக்கிடையே படு த்துக்கிடக்கிற பலத்த கழுதையைப் போலி ருப்பான்.

௰௫. இளைப்பாறுதலே நலமென்றும், நா டே ரம்மியமென்றும், அவன் கண்டு, சுமக் கிறதற்குத் தன் தோளைச் சாய்த்து, ஊழியக் காரனுகி, வரிகொடுத்தான்.

௰௬. தாண், இஸ்ரவேலின் கோத்திரத்தா

ளுகி, தன் சனங்களுக்குள் நியாயவிசாரணை செய்வான்.

௰எ. தாண் குதிரையின்மேல் இருக்கிறவன், மல்காந்து விழும்படியாய், அதின் குழம்பை க் கடிக்கிறதற்கு, வழியிற் கிடக்கிற சருப்பத் தைப் போலவும்,பாதையிற் கிடக்கிற விரிய னைப் போலவுமிருப்பான்.

௰அ. யெகோவாவே, நீர் செய்யும் இரட்சி ப்புக்கு நான் காத்திருந்தேன்.

௰௯. படைக்கூட்டம் வந்து, காத்தேன்ப வனைச் செயிக்கும். முடிவிலே, அவனும் அதைச் செயிப்பான்.

உ௰. ஆஷேரின் ஆகாரம் புஷ்டியாகும். இராசாக்களுக்கு இஷ்டமான பதார்த்தங்க ளையும், அவன் விளைவிப்பான்.

உக. நப்தாலி விடுதலைபெற்ற பெண்மான். மாதுரியவசனங்களை வசனிப்பான்.

உஉ. யோசேப்பு, செழித்துக் காய்க்குங் கோடு. கிணற்றருகே சாய்ந்து காய்க்குங் கொம்பு. அதின் கிளைகள் சுவரின்மேற் பட ரும்.

உ௩. வில்வீரர் அவனைப் பகைத்து, எய் து, மிகவும் வருத்தினார்கள்.

உச. ஆனாலும் யாக்கோபின் வல்லமையு ள்ள தேவனுடைய கையினாலும், உனக்கு

ச் சகாயஞ்செய்த உன் பிதாவின் தேவனு லும்,

உரு. உயர்ந்த வானத்திலிருந்துண்டாகிற நன்மைகளையும், தாழ்ந்த சமுத்திரத்தின் நன்மைகளையும், ஸ்தனகற்பங்களின் நன்மைகளையும், அருளி உன்னை ஆசீர்வதிக்கும் சருவ வல்லமையுள்ளவராலும், அவனுடைய கையில் உறுதியாய் நின்றது. அவனுடையகைப்புயம் ஸ்திரப்படுத்தப் பட்டது. அங்கிருந்து இஸ்ரவேலுக்கு மேய்ப்பனும் தோன்றினன். கல்மலையுந் தோன்றிற்று.

உசு. உன் பிதாவின் ஆசீர்வாதங்கள், அவனுடைய முற்பிதாக்களின் ஆசீர்வாதங்களைப் பார்க்கிலும், மிகச்சிரேஷடம். நித்திய பருவதங்களின் கடையெல்லையில் நின்றுந் தோன்றி வருகின்றன. அவைகளே யோசேப்பினுடைய சிரசின்மேலும், தன்சகோதரனைப் பிரிந்தவனுடைய உச்சியின்மேலும் நிலைநிற்கும்.

உஎ. பேன்யாமீன் கோணுயைப் போல் பீறுவான். காலையில் தன் இரையைப் பட்சிப்பான். மாலையில் கொள்ளையிடுவதைப் பங்கிடுவானென்றான்.

உஅ. இவர்கள் எல்லாரும் இஸ்ரவேலின் பன்னிரண்டுகோத்திரத்தார். அவர்களுடைய

பிதா அவர்களை ஆசீர்வதிக்கும்பொழுது, எல்லாரையும் அவனவனுக்குரிய ஆசீர்வாதத்துக்குத்தக்கதாக, இப்படிச் சொல்லி ஆசீர்வதித்தான்.

உ௯. பின்னும் அவர்களைநோக்கி, நான் என்சனங்களுடன் சேர்க்கப்படப்போகிறேன்.

௩௰. ஆபிரகாம் தனக்குச்சொந்த மயானஸ்தானமாகக் கானான்தேசத்தில் மம்ரேக்கு எதிரான மக்பேலாஎன்னும் நிலத்திலே, எத்தியனாகிய எப்பிரோனிடத்தில் நிலத்துடனே ஒரு குகையை விலைக்குவாங்கினான்.

௩௧. அதில் ஆபிரகாமையும், அவன் மனைவியாகிய சாராளையும், அடக்கம்பண்ணினார்கள். அங்கே ஈசாக்கையும் அவனுடைய மனைவியாகிய ரிபெக்காளையும் அடக்கம்பண்ணினார்கள். அங்கே லேயாளையும் அடக்கம்பண்ணினேன்.

௩௨. அந்த நிலமும், அதிலிருக்கிற குகையும், எத்தின் புத்திரர் கையிற் கொள்ளப்பட்டன. எத்தியனான எப்பிரோனுடைய நிலத்திலுள்ள அந்தக்குகையில், என்பிதாக்களுடனே என்னையும் அடக்கம்பண்ணுங்களென்று சொல்லிக் கட்டளையிட்டான்.

௩௩. யாக்கோபு, தன் புத்திரருக்குக்கட்டளையிட்டு முடித்தபின் கட்டிலின்மேல் தன்

கால்களைச் சேர்த்துக்கொண்டு, உயிரைவிட்டுத் தன் முன்னோர்களோடே சேர்க்கப்பட்டான்.

## ருய. அதிகாரம்.

க. யாக்கோபுக்காகப் புலம்பல்: எ. யோசேப்பு யாக்கோபை அடக்கம்பண்ணப் போதல்: யரு. யோசேப்புத் தன் சகோதரரைத் தேற்றல்: உஉ. யோசேப்புத் தன் புத்திரரைக் காணல்: உச. அவன் கானான் தேசத்திற்குத் திரும்பிப் போவதைக் குறித்துத் தீர்க்கதரிசனஞ் சொல்லல்: உரு. அவன் கட்டளையிடல்: உசு. அவன் மரித்தல்.

க. அப்பொழுது யோசேப்பு, தன் பிதாவின் முகத்தின்மேல் விழுந்து, அழுது, முத்தஞ் செய்தான்.

உ. பின்பு தன் பிதாவுக்குச் சுகந்த வருக்கங்களையிடும்படி தன் பணிவிடைக்காரரில், வைத்தியருக்கு யோசேப்பு கட்டளையிட, அப்படியே வைத்தியர் இஸ்ரவேலுக்குச் சுகந்த வருக்கங்களை இட்டார்கள்.

ங. சுகந்த வருக்கங்களை இடுகிற நாள் நாற்பது. அப்படியே அவனிமித்தம் அவ்வளவு நாள் செல்லவிட்டார்கள். எகிப்தியர் அவன் நிமித்தம் எழுபதுநாள் துக்கங்கொண்டாடினார்கள்.

௪. துக்கங்கொண்டாடும் நாள் கழிந்த பின் யோசேப்புப் பார்வோன் குடும்பத்தாருடனே,

௫. என் பிதா என்னை நோக்கி, நான் மரணமடையப் போகிறேன். கானான் தேசத்தில் நான் எனக்காக வெட்டுவித்திருக்கிற பிரேத அறையில் என்னை அடக்கம்பண்ணுவாயாக என்று என்னிடத்திற் சொல்லி, ஆணையிடுவித்துக்கொண்டார். ஆகையால் என்மேல் தயை உண்டானால், நான் அங்கே போய் என் பிதாவை அடக்கம் பண்ணி வருகிறதற்கு வேண்டிக்கொள்ளுகிறேன் என்று சொல்லி, நீங்கள் பார்வோனுடைய செவிக்கு அறிவிக்கவேண்டும் என்றான்.

௬. அதற்குப் பார்வோன், உன் பிதா உன்னிடத்தில் ஆணையிடுவித்தபடியே, நீ போய் அவரை அடக்கம்பண்ணிவா என்றான்.

௭. அப்படியே யோசேப்புத் தன் பிதாவை அடக்கம்பண்ணப் போனான். பார்வோனுடைய வீட்டிலுள்ள முதியோராகிய பணிவிடைக்காரர் அனைவரும், எகிப்துதேசத்திலுள்ள முதியோர் யாவரும்,

௮. யோசேப்பின் குடும்பத்தார் எல்லாரும், அவன் சகோதரரும், அவன்பிதாவின் குடும்பத்தாரும் அவனுடனே போனார்கள். தங்க

ள் குழந்தைகளையும், ஆடுமாடுகளையும் மாத்திர
ம் கோஷேன் நாட்டில் விட்டுப் போனார்கள்.

கூ. இரதங்களும், குதிரைவீரரும் அவனு
டனே போனதினால், கூட்டம் மிகவும் அதிக
மாயிருந்தது.

ய. அவர்கள் யோர்தானுக்கு அக்கரையில்
இருக்கும் ஆத்தாத்தின் போர்க்களத்தில் சே
ர்ந்து, அவ்விடத்திலே பெரும் புலம்பலாகப்
புலம்பினார்கள். அங்கும் தன் பிதாவின் நிமி
த்தம் ஏழுநாள் துக்கங்கொண்டாடினான்.

யக. ஆத்தாத்தின் போர்க்களத்தில் துக்கங்
கொண்டாடினதை அத்தேசத்தாராகிய கானா
னியர் கண்டு, எகிப்தியருக்குள் இது பெரிய
புலம்பல் என்றார்கள். அதினால் யோர்தானு
க்கு அப்பால் இருக்கிற அந்த ஸ்தானத்துக்கு
ஆபேல்மிஸ்ராயீம் என்று பேருண்டாயிற்று.

யஉ. அவனைக் கானான் தேசத்திற்குக் கொ
ண்டுபோய், ஆபிரகாம் மம்ரேக்கு எதிரே ம
க்பேலாவென்னும் நிலத்திலே தனக்குச் சொ
ந்த மயான ஸ்தானமாக,

யரு. ஏத்தியனாகிய எப்பிரோனிடத்திலே,
நிலத்துடனே வாங்கின குகையில் அவனை
அடக்கம்பண்ணினார்கள்.

யச. அவன் புத்திரர் தங்களுக்கு அவன்
கட்டளையிட்டபடியே செய்தார்கள். யோசே

ப்புத் தன் பிதாவை அடக்கம்பண்ணின பி
ன்பு அவனும் அவன் சகோதரரும், அவனு
டைய பிதாவை அடக்கம்பண்ணுவதற்கு அ
வனுடனே போனவர்கள் யாவரும் எகிப்து
க்குத் திரும்பினார்கள்.

௰௫. தங்கள் பிதா மரணமடைந்த பின்பு,
யோசேப்பின் சகோதரர், யோசேப்புக்கு நா
ம் செய்த சகல தீங்குகளுக்காகவும் அவன்
நம்மைப் பகைத்து, நிச்சயமாய் பிரதிபலன்
செய்வானென்று சொல்லி,

௰௬. உன் சகோதரர் உனக்குத் தீங்கு செ
ய்தார்கள். அவர்கள் செய்த துரோகத்தையும்,
பாவத்தையும் நீ மன்னிக்கும்படி நான் சொ
ன்னேன் என்பதாக யோசேப்புக்குச் சொல்
லுங்கள் என்று உம்முடைய பிதா மரணம
டைய முன்னமே கட்டளையிட்டார்.

௰௭. ஆதலால் உன் பிதாவின் தேவனுக்
கு அடியாராகிய நாங்கள் செய்த துரோகத்தை
மன்னிக்க வேண்டுமேன்று யோசேப்புக்குச்
சொல்லி, அனுப்பினார்கள். அவர்கள் அதை
யோசேப்புக்குச் சொல்ல, அவன் அழுதான்.

௰௮. பின்பு அவனுடைய சகோதரரும்,
போய் அவனுக்கு முன்பாக விழுந்து, நாங்
கள் உனக்கு அடிமைகளாயிருக்கிறோம் என்
றார்கள்.

௰௯. யோசேப்பு அவர்களை நோக்கிப் பயப்படாதிருங்கள். நான் தேவனுக்குப் பிரதியானவனா ?

உ௰. எனக்கு விரோதமாய் நீங்கள் நினைத்துச் செய்தது தீமையே. தேவனோ இப்பொழுது நடந்துவருகிறபடியே, வெகுசனங்களைக் காத்து இரட்சிக்கவேண்டுமென்னும் நன்மையையே நினைந்து செய்தார்.

உக. நீங்கள் பயப்படாதிருங்கள். உங்களையும் உங்கள் குழந்தைகளையுங் காத்துக் கோள்ளுவேன் என்று சோல்லி, அவர்களுக்கு ஆறுதல் செய்து, அவர்கள் மனம் உருகப் பேசினான்.

உஉ. யோசேப்பும், அவன் பிதாவின் குடும்பத்தாரும், எகிப்து தேசத்தில் வாசம்பண்ணினார்கள். யோசேப்பு நூற்றுப்பத்து வருஷஞ் சீவித்திருந்தான்.

உ௩. அவன் எப்ராயீமின் மூன்றாந் தலைமுறைப் பிள்ளைகளையுங் கண்டான். மனாசேயின் புத்திரனாகிய மாகீருடைய பிள்ளைகளும், யோசேப்பின் மடியில் வளர்க்கப்பட்டன.

உ௪. யோசேப்புத் தன் சகோதரரை நோக்கி நான் மரணமடையப் போகிறேன். எப்படியுந் தேவன் உங்களுக்கு அருள்செய்து, நீங்கள் இத்தேசத்தை விட்டு, தாம் ஆபிரகாமு

க்கும், ஈசாக்குக்கும், யாக்கோபுக்கும் ஆணையிட்டுக் கொடுத்திருக்கிற தேசத்துக்குப் போகப்பண்ணுவார் என்றான்.

உரு. பின்னும் யோசேப்பு நிச்சயமாகத் தேவன் உங்கள் மேற் கடாட்சம் வைப்பார். அப்பொழுது நீங்கள் என் எலும்புகளை இவ்விடத்திலிருந்து கொண்டுபோவீர்களாக என்று சொல்லி, இஸ்ரவேலின் புத்திரரிடத்தில் ஆணையிடுவித்துக் கொண்டான்.

உசு. யோசேப்பு நூற்றுப்பத்து வயதில் மரணமடைந்தான். அவர்கள் அவனுக்குச் சுகந்த வருக்கங்களையிட்டு, எகிப்திலே அவனைப் பிரேதப் பெட்டியிலே அடக்கிவைத்தார்கள்.

மோசே எழுதின இரண்டாம் புத்தகமாகிய

# யாத்திராகமம்.

---

## க. அதிகாரம்.

*க. யோசேப்பும் அவன் சகோதரரும் மரணமடைந்தபின் அவர்கள் வமிசத்தார் விருத்தியடைதல்: அ. பார்வோனால் அவர்கள் துயரப்படல்: யரு. அவர்களுக்கு மருத்துவிச்சிமார் தயைசெய்தல்: உஉ. புத்திரரை நதியிற்போடப் பார்வோன் கட்டளையிடல்.*

க. இஸ்ரவேலின் சந்ததியாராகிய ரூபேன், ஷிமியோன், லேவி, யூதா,

உ. ஈஷகார், செபுலோன், பேன்யாமீன்,

ங. தாண், நப்தாலி, காத், ஆஷேர் என்னும் பேரையுடைய ஒவ்வொருவரும், தங்கள் தங்கள் குடும்பத்தோடும் யாக்கோபோடும் எகிப்துக்குப் போய்ச்சேர்ந்தார்கள்.

ச. யோசேப்போ முன்னமே எகிப்தில் போயிருந்தான்.

ரு. யாக்கோபினால் தோன்றிய சந்ததியார் ஆக எழுபது பேர்.

சு. யோசேப்பும், அவன் சகோதரர் சகலரும், அக்காலத்திலுள்ள சந்ததியார் யாவரும், மரணமடைந்தார்கள்.

எ. இஸ்ரவேல் சந்ததியார் தழைத்து, மிகவும் அதிகமாய் விருத்தியடைந்து பெருகி, வரவர அதிக பிரபலமுள்ளவர்களானார்கள். தேசம் அவர்களால் நிறைந்தது.

அ. யோசேப்பை அறியாத புதிய இராசன் ஒருவன் எகிப்திலே தோன்றினான். அவன் தன் பிரஜைகளை நோக்கி,

கூ. இஸ்ரவேல் சந்ததியாராகிய சனங்கள் நம்மிலும் பெருக்கமும், பிரபலமுமானவர்களாயிருக்கிறார்களே,

ய. ஒரு யுத்தம் வருங்காலத்தில் அவர்களும் நம்முடைய பகைஞருடன் கூடி, நமக்கு விரோதமாய் யுத்தம்பண்ணி, இத்தேசத்தை விட்டுப் புறப்பட்டுப் போகவுங் கூடும். ஆதலால் அவர்களைப் பெருகாதபடி உபாயமாய் நடத்துவோம் வாருங்களென்றான்.

யக. இப்படித் தாங்கள் ஏற்றும் பாரமான சுமையினால் அவர்களை வருத்த, விசாரணைக்காரரை ஏற்படுத்தினார்கள். அப்பொழுது அவர்கள் பார்வோன் நிமித்தம் பீத்தோம், ராமேசேசு என்னும் பண்டசாலை பட்டணங்களைக் கட்டினார்கள்.

௰உ. அவர்கள் அவர்களை எவ்வளவு வருத்தினார்களோ, அவ்வளவு அவர்கள் விருத்தியடைந்து பெருகினார்கள்.

௰௩. அவர்கள் இஸ்ரவேல் சந்ததியைக் குறித்து விசனப்பட்டார்கள்.

௰௪. மேலும் எகிப்தியர், இஸ்ரவேலரைக் கடினமாக ஊழியஞ்செய்யப் பண்ணினார்கள்.

௰௫. சாந்துஞ் செங்கல்லுங் கொண்டு செய்யுங் கடினமான ஊழியத்தினாலும், வயல்வெளியிலே செய்யுஞ் சகலவிதத் தொழில்களினாலும், அவர்கள் தங்கள் சீவனையும் வெறுக்கப்பண்ணினார்கள். அவர்கள் எந்த ஊழியங்களையும், அவர்களைக்கொண்டு, கொடூரமாக நடப்பித்தார்கள்.

௰௬. அதுவுமன்றி, எகிப்தின் இராசா சிப்பிராள் என்னும் நாமத்தையும், பூகாள் என்னும் நாமத்தையுமுடைய எபிரேய மருத்துவிச்சிகளை நோக்கி, நீங்கள் எபிரேய ஸ்திரிகளுக்கு மருத்துவஞ்செய்யுஞ் சமயங்களில், ஆசனங்களில் இருக்கையில் பார்த்து ஆண்பிள்ளையென்றால், கொலைசெய்யுங்கள்; பெண்பிள்ளையென்றால், உயிரோடே விடுங்களென்றான்.

௰௭. மருத்துவிச்சிகளோ தேவனுக்குப் ப

யந்து எகிப்தின் இராசா தங்களுக்கிட்ட கட்டளைப்படி செய்யாமல், ஆண்பிள்ளைகளையும் உயிரோடே விட்டார்கள்.

௰௮. அதினால் எகிப்தின் இராசா மருத்துவிச்சிகளை அழைப்பித்து, நீங்கள் ஆண்பிள்ளைகளையும் உயிரோடே விட்டதென்னவென்று அவர்களிடத்திற் கேட்க,

௰௯. மருத்துவிச்சிகள் பார்வோனை நோக்கி, எபிரேய ஸ்திரிகள் எகிப்திய ஸ்திரிகளைப் போலல்ல ; அவர்கள் பலமுள்ளவர்கள். மருத்துவிச்சிகள் அவர்களிடத்திற் சேருமுன்னமே, அவர்கள் பிரசவிக்கிறார்களேன்றார்கள்.

௨௰. தேவன் மருத்துவிச்சிகளுக்கு நன்மைசெய்தார். சனங்கள் பெருகி மிகவும் பிரபலமானார்கள்.

௨௧. மேலும் மருத்துவிச்சிகள் தேவனுக்குப் பயந்ததினால் அவர்களுடைய குடும்பங்கள் தழைக்கும்படி செய்தார்.

௨௨. பார்வோன் தன் பிரசைகளுக்கு, பிறக்கும் ஒவ்வொரு புத்திரனையும் நதியிலே போடுங்கள் ; புத்திரிகளை உயிரோடிருக்க விடுங்களேன்று கட்டளையிட்டான்.

# உ. அதிகாரம்.

க. மோசேயைப் பேழையில் வைத்து நதியோரத்தில் சேமித்தல்: ரு. பார்வோன் குமாரத்தி அவனைக் கண்டெடுத்தல்: யக. மோசே எகிப்தியன் ஒருவனைக் கொல்லல்: யரு. மோசே பார்வோனுக்கஞ் சிமீதியான் தேசத்துக்குத் தப்பியோடல்: உங. தேவன் இஸ்ரவேல் சந்ததியாரைக் கடாட்சித்தல்.

க. லேவியின் குடும்பத்தாரில் ஒரு மனிதன், லேவியின் குடும்பத்தாருள், ஒரு கன்னிகையை விவாகம்பண்ணியிருந்தான்.

உ. அந்த இஸ்திரி கருப்பவதியாகி ஒரு ஆண்பிள்ளையைப் பெற்றாள். அதை அழகுள்ளதென்று கண்டு, மூன்றுமாதம் ஒளித்துவைத்தாள்.

ங. பின்பு அதை ஒளித்துவைக்கக் கூடாதென்று, அவள் ஒரு நாணற்பெட்டியை எடுத்து அதற்குப் பிசினையும், நிலக்கீலையும், பூசி, அதிலே குழந்தையை வளர்த்தி நதியோரத்திலுள்ள நாணலுக்குள் வைத்தாள்.

ச. அதற்கு என்ன சம்பவிக்குமென்பதை அறியும்படி அதின் சகோதரி தூரத்தில் நின்றாள்.

ரு. பார்வோனுடைய குமாரத்தி நதியில் ஸ்நானம்செய்ய வந்தாள். அவளுடைய தா

திமார்கள் ஆற்றங்கரையில் உலாவினார்கள். அப்பொழுது நாணலுக்குள்ளேயிருக்கிற பெட்டியை அவள் கண்டு தாதி ஒருத்தியை அனுப்பி, அதை எடுப்பித்தாள்.

௬. அதைத் திறந்தபொழுது பிள்ளையைக் கண்டாள். பிள்ளையோ அழுதது. அவள் அதின்மேல் இரங்கி, இது எபிரேயரின் குழந்தையென்றாள்.

௭. அதின் சகோதரி பார்வோனுடைய குமாரத்தியை நோக்கி, உமக்கு இந்தப் பிள்ளையை வளர்க்கும்படி எபிரேயஸ்திரிகளில் ஒரு கைத்தாயை நான் உம்மிடத்தில் அழைத்துவரலாமாவென்று சொல்ல,

௮. பார்வோனுடைய குமாரத்தி, அழைத்துவாவென்றாள். அந்தப் பெண் போய், பிள்ளையின் மாதாவையே அழைத்துவந்துவிட்டாள்.

௯. பார்வோனுடைய குமாரத்தி அவளை நோக்கி, நீ இந்தப் பிள்ளையை எடுத்துப்போய், எனக்கு வளர்த்துத்தா; நான் உனக்குச் சம்பளங் கொடுப்பேனென்றாள். அந்த ஸ்திரி பிள்ளையை எடுத்துக்கொண்டுபோய் அதை வளர்த்தாள்.

௰. பிள்ளை வளர்ந்தபின்பு அவள் அதைப் பார்வோன் குமாரத்தியிடத்தில் கொண்டுபோ

ய்விட்டாள். அவளுக்கு அவன் புத்திரனுனு
ன். அவள் அவனைச் சலத்தில் நின்றும் எடுத்
தேனென்றுசொல்லி, அவனுக்கு மோசே எ
ன்று பேரிட்டாள்.

௰க. மோசே பெரியவனுனகாலத்தில் தன்
சகோதரரிடத்திற்போய், அவர்கள் சுமக்கும்
பாரச்சுமைகளைப் பார்த்தான். தன் சகோத
ரராகிய எபிரேயரில் ஒருவனை எகிப்தியன் ஒ
ருவன் அடிப்பதைக் கண்டு,

௰உ. அங்கும் இங்கும் பார்த்து ஒருவரும்
இல்லையென்று கண்டு எகிப்தியனை வெட்டி
அவனை மணலிலே புதைத்துவிட்டான்.

௰௩. மற்றைநாள் போனபொழுதும், எபி
ரேயமனிதர் இருவர் சண்டைபண்ணுவதை
க் கண்டு, அநியாயஞ்செய்தவனை நோக்கி, நீ
உன் தோழனை ஏன் அடிக்கிறுயென்று கே
ட்க;

௰௪. அவன், எங்களுக்கு இராசாவாகவும்
நியாயாதிபதியாகவும், உன்னை ஏற்படுத்தின
வன் யாவன்? எகிப்தியனைக் கொன்றபிரகா
ரம் என்னையுங் கொல்லப்பார்க்கிறுயாவென்
ருன்: மோசே நிச்சயமாகக் காரியம் வெளி
ப்பட்டதென்று பயந்தான்.

௰௫. பார்வோன் அந்தக் காரியத்தைக் கே
ள்விப்பட்டபொழுது, மோசேயைக் கொலை

செய்ய வகைதேடினான். மோசே பார்வோனுடைய முகத்துக்குத் தப்பியோடி, மீதியான் தேசத்திற் போய்த் தங்கினான்.

௧௫. அவன் ஒரு கிணற்றருகே இருக்கையில், மீதியான்தேசத்து ஆசாரியனுடைய புத்திரிகள் ஏழுபேர் வந்து, தங்கள் பிதாவின் ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டும்படி, நீரை மொண்டு தொட்டியை நிறைத்தார்கள்.

௧௭. அப்பொழுது மேய்ப்பர்கள் வந்து அவர்களைத் துரத்திவிட மோசே அவர்களுக்குத் துணைநின்று, அவர்களுடைய ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டினான்.

௧௮. அவர்கள் தங்கள் பிதாவாகிய ரேகுவேலினிடத்திற் சேர்ந்தபொழுது, அவன், நீங்கள் இன்றைக்கு இத்தனை சீக்கரமாய் வந்ததேதென்று கேட்க;

௧௯. அவர்கள் எகிப்தியன் ஒருவன் மேய்ப்பருடைய கைகளுக்கு எங்களைத் தப்புவித்து, எங்களுக்காக மொண்டுமொண்டு, ஆடுகளுக்குத் தண்ணீர்காட்டினானென்றார்கள்.

௨௰. அப்பொழுது அவன் தன் குமாரத்திகளை நோக்கி, அவன் எங்கே? அந்த மனிதனை நீங்கள் விட்டுவந்ததேன்ன? போசனபானம்பண்ண அவனை அழைத்துக்கொண்டு வாருங்களேன்றான்.

உக. மோசே அவனுடன் தங்கச் சம்மதித்தான். அவன் சிப்போராள் என்னுந் தன் குமாரத்தியை மோசேக்கு விவாகம்பண்ணிக் கொடுத்தான்.

உஉ. அவள் ஒரு புத்திரனைப் பெற்றாள். மோசே, நான் அந்நியதேசத்தில் பரதேசியாயிருக்கிறேனென்றுசொல்லி, அவனுக்குக் கேர்ஷோம் என்று பேரிட்டான்.

உ௩. சிலகாலஞ்சென்றபின்பு, எகிப்தின் இராசா மரித்தான். இஸ்ரவேல் சந்ததியார் கடினமான ஊழியத்தினிமித்தம் தவித்து ஓலமிட்டார்கள். அவர்கள் கடினமான ஊழியத்தினிமித்தம் இட்ட ஓலம் தேவனிடத்திற் சேர்ந்தது.

உ௪. தேவன் அவர்களிட்ட ஓலத்தைக் கேட்டு, ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்னும் இவர்களோடு செய்த உடன்படிக்கையை நினைத்தார்.

உரு. தேவன் இஸ்ரவேல்சந்ததியார்மேற் கண்ணோக்கினார். தேவன் அவர்களைக் கடாட்சித்தார்.

## ௩. அதிகாரம்.

*௧. அக்கினி எரியும் செடி மத்தியில் தேவன் மோசேக்குத் தரிசனமாதல்: ௭. தேவன் மோசேயுடன் பேசல்: ௰௧. மோசே தேவனுடன் சம்பாஷித்தல்: ௰௪. தேவனுடைய நாமம்: ௰௫. அவர் இஸ்ரவேலரிடத்திற்கு வாக்கனுப்பல்.*

௧. மோசே மீதியான்தேசத்து ஆசாரியனும், தன் மாமனுமாகிய எத்திரோவின் ஆடுகளை மேய்த்து வந்தான். அவன் வனத்தின் கடையெல்லையில் மந்தையை ஓட்டி, ஓரேப் என்னுந் தேவமலையைச் சேர்ந்தான்.

௨. யெகோவாவின் தூதனானவர் அக்கினிச்சுவாலையினிடமாய் ஒரு முட்செடி மத்தியில் நின்று, அவனுக்குத் தரிசனையானார். அப்பொழுது அவன் உற்றுப்பார்த்தான். அக்கினி சுவாலித்து எரிந்தும் செடி வேகாமல் நின்றது.

௩. மோசே இந்தச் செடி வேகாதிருக்கிறதென்ன? நான் ஒரு புறத்திற் சாய்ந்து சமீபித்து இந்த அற்புதக்காட்சியைப் பார்ப்பேனென்றான்.

௪. அவன் பார்க்கும்படி சாய்ந்து வருவதை யெகோவா கண்டார். செடியின்மத்தியில் நின்று மோசே, மோசே, என்று தேவன் அழைக்க; அவன் அடியேன் என்றான்.

௫. அவர், நீ இந்த ஸ்தானத்துக்குச் சமீபி

த்துவராதே; நீ நிற்குமிடம் பரிசுத்தமுள்ள பூமி. உன் பாதரட்சையைக் காலில் நின்று கழற்றிவிடு என்றார்.

௬. மேலும், நான் உன் பிதாவுக்குந் தேவன், ஆபிரகாமுக்குந் தேவன், ஈசாக்குக்குந் தேவன், யாக்கோபுக்குந் தேவன் என்றார். மோசே தேவனை நோக்கிப் பார்ப்பதற்குப் பயந்ததினால் முகத்தை மூடிக்கொண்டான்.

௭. பின்பு, யெகோவா, எகிப்திலிருக்கிற என் சனங்களின் வருத்தத்தை நான் உற்றுப்பார்த்தும், அவர்களுடைய ஆளோட்டிகளைக் குறித்து அவர்கள் இடுகிற ஓலத்தைக் கேட்டும், அவர்கள் படுகிற வேதனைகளை அறிந்துமிருக்கிறேன்.

௮. அவர்களை எகிப்தியருடைய கைக்குத் தப்புவிக்கவும், அவர்களை அந்தத் தேசத்திலிருந்து நீக்கிக் கானானியரும், எத்தியரும், எமோரியரும், பெரீசியரும், ஈவியரும், எபூசியரும் இருக்கிற இடமும், பாலுந் தேனும் பெருகுகிற நிலமுமாகிய, விசாலமுள்ள உத்தம தேசத்திற் சேர்க்கவும், இறங்கினேன்.

௯. கேள், இஸ்ரவேல் சந்ததியாரிடுகிற ஓலம் என் சந்நிதி அடைந்தது; எகிப்தியர் அவர்களை வருத்தும் வருத்தத்தைக் கண்டேன்.

௰. நீ இஸ்ரவேல் சந்ததியாகிய என் சனங்

களை எகிப்திலிருந்து அழைத்துவரும்படி, உன்னைப் பார்வோனிடத்துக்கு அனுப்புவேன் வாவென்றார்.

௧௧. அப்பொழுது மோசே, தேவனை நோக்கி, பார்வோனிடத்துக்குப் போகவும், இஸ்ரவேல் சந்ததியாரை எகிப்திலிருந்து அழைத்துவரவும், நான் எம்மாத்திரமென்றான்.

௧௨. அதற்கவர், நான் உன்னோடே இருப்பேன். நீ அந்தச் சனங்களை எகிப்திலிருந்து அழைத்துவந்த பின்பு, நீங்கள் இந்த மலையின்மேல் தேவாராதனை செய்வீர்கள். நானே உன்னை அனுப்பினேனென்பதற்கு இதுவே அடையாளமென்றார்.

௧௩. மோசே தேவனை நோக்கி, நான் இஸ்ரவேல் சந்ததியாரிடத்தில் சேர்ந்து, உங்கள் பிதாக்களுடைய தேவன், உங்களிடத்தில் என்னை அனுப்பினாரென்று, அவர்களுக்குச் சொல்லும் பொழுது, அவருடைய நாமம் என்னவென்று என்னிடத்தில் கேட்டால், நான் அவர்களுக்கு என்ன சொல்லலாமென்று சொல்ல,

௧௪. தேவன் மோசேயினிடத்தில், நானே தானாயிருப்பவர். நீ இஸ்ரவேல் சந்ததியாரை நோக்கி, தானாயிருப்பவர், என்னை உங்களிடத்துக்கு அனுப்பினாரென்று சொல்லென்றார்.

௰௫. மேலுந், தேவன் மோசேயை நோக்கி, ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனுமாயிருக்கிற உங்கள் பிதாக்களின் தேவனாகிய யெகோவா, என்னை உங்களிடத்துக்கு அனுப்பினாரென்று நீ இஸ்ரவேற் சந்ததியாருக்குச் சொல்லு. சதாகாலமும் இதுவே என் நாமம். இதுவே தலைமுறைதோறும் என்னை அறிகிற அறிகுறியாகும்.

௰௬. நீ போய் இஸ்ரவேலரின் முதியோரைக் கூடிவரச்செய்து அவர்களுடனே, உங்கள் பிதாக்களின் தேவனும், ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்னும் இவர்களுடைய தேவனுமாகிய யெகோவா எனக்குத்தரிசனையாகி, நான் உங்களைக் கடாட்சித்து, எகிப்திலே உங்களுக்குச் செய்யப்பட்டதைக் கண்டேனென்றும்,

௰௭. நான் உங்களை எகிப்தியர் செய்கிற வருத்தத்தில் நின்றும் நீக்கிக், கானானியர், ஏத்தியர், எமோரியர், பெரீசியர், ஈவியர், எபூசியர் என்பவர்களுடைய இடமும், பாலும் தேனும் பெருகுகிறதுமான தேசத்தில் சேரப்பண்ணுவேனென்று சொல்லச் சொன்னேனென்றும், சொல்லு.

௰௮. அவர்கள் உன்வாக்குக்குச் செவிகொடுப்பார்கள். நீயும், இஸ்ரவேலரின் முதி

யோரும், எகிப்தின் இராசனிடத்துக்குப் போய், அவனை நோக்கி, எபிரேயருடைய தேவனாகிய யெகோவா, எங்களுக்குத் தரிசனமானார். இப்பொழுது நாங்கள் எங்கள் தேவனாகிய யெகோவாவுக்குப் பலியிடும்படி, வனாந்தரத்தில் மூன்று நாள் பிரயாணம்பண்ண உம்மை வேண்டுகிறோமென்று சொல்லுங்கள்.

௧௯. எகிப்தின் இராசன் கைவல்லபங்கண்டாலொழிய உங்களைப் போக விடானென்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும்.

௨௰. நான் என்கையை நீட்டி, எகிப்தின் மத்தியில் சகலவித அற்புதங்களையுஞ்செய்து அதைத்தண்டிப்பேன். அதற்குப்பின்பு அவன் உங்களைப்போகவிடுவான்.

௨௧. இந்தச்சனங்கள் எகிப்தியரிடத்தில் தயைபெறும்படி செய்வேன். நீங்கள் போகுங்காலத்தில் வெறுங் கையோடே போகமாட்டீர்கள்.

௨௨. ஸ்திரிகள் தங்கள் தங்கள் அயலவர்களிடத்திலும், தங்கள் தங்கள் வீடுகளில் தங்குகிறவளிடத்திலுங் கேட்டுவாங்கும்வெள்ளியுடைமைகளையும், பொன்னுடைமைகளையும், வஸ்திரங்களையும், உங்கள் புத்திரருக்கும் புத்திரிகளுக்குந் தரிப்பீர்களாக. இப்படியே எகிப்தியரிடத்திற் கொள்ளையிடுவீர்களென்றார்.

# ச. அதிகாரம்.

க. மோசேயின் கோல் சருப்பமாதல்: ரு. அவன் கையிற் குட்டம் வரல்: ய. மோசே தனியே போக்கப் பயந்தபடியால் ஆரோனையுங் கூடப் போக நியமித்தல்: யஅ. மோசே மீதியான் தேசத்தில் நின்றும் புறப்படல்: உய. பார்வோனிடத்தில் இன்னது சொல்லவேண்டுமென்ற கட்டளைபெறல்: உச. மோசேயின் புத்திரனுக்கு விருத்தசேதனஞ் செய்தல்: உஎ. ஆரோன் மோசேயை சந்தித்தல்: உகூ. மோசே இஸ்ரவேலரிடத்திற் போய்த் தேவனுடைய வாக்கை அறிவித்தல்

க. அப்போழுது மோசே, அவர்கள் என்னை நம்பார்கள். என் வாக்குக்குச் செவிகோடார்கள். யேகோவா உனக்குத் தரிசனமாகவில்லை என்பார்களேன்று சோல்ல,

உ. யேகோவா அவனை நோக்கி, உன் கையில் இருக்கிறதேன்னவேன்றார். அவன் ஒரு கோல் என்றான்.

ரு. அவர் அதைத் தரையிற் போடு என்றார். அவன் அதைத் தரையிற்போட, அது சருப்பமாயிற்று. மோசே அதற்கு விலகியோடினான்.

ச. யேகோவா, மோசேயை நோக்கி, உன் கையை நீட்டி அதின் வாலைப் பிடியேன்றார். அவன் தன் கையை நீட்டி அதைப் பிடிக்க, அது அவன் கையில் கோலாயிற்று.

ரு. இதனால் தங்கள் பிதாக்களின் தேவ னும், ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனுமாகிய யெ கோவா உனக்குத் தரிசனமானாரென்று நம் புவார்கள்.

சு. மேலும் யெகோவா அவனை நோக்கி, உன் கையை மார்பில் வையென்று சொல்ல, அவன் கையைத் தன் மார்பில் வைத்தான். அதை அவன் வெளியே எடுக்க, அவன் கை உறைந்த தூறல் போல வெண்குஷ்டம் பிடித்திருந்தது.

எ. அவர் திரும்பவும், உன் கையை மார் பில் வையென்று சொல்ல, அவன் தன் கை யைத் தன் மார்பில் வைத்து தன் மார்பை விட்டெடுக்க, அது அவனுடைய மற்றத் த சையைப்போலாயிற்று.

அ. அவர்கள் உன்னை நம்பாமலும், முத லாம் அடையாளத்தில் விசுவாசம் வையாம லுமிருந்தாலும், இரண்டாம் அடையாளத்தி னால் விசுவாசிப்பார்கள்.

கூ. இவ்வடையாளங்கள் இரண்டிலும், அவர்கள் விசுவாசம் வையாமலும், நீ சொல்வ தைக் கேளாமலும் இருப்பார்களாகில், நீ ஆ ற்றின் நீரை மொண்டு உலர்ந்த தரையில் ஊ

ற்றுவாயாக. ஆற்றில் மொண்ட நீர் உலர்ந்த தரையில் இரத்தமாகுமென்றார்.

ய. அப்பொழுது மோசே யெகோவாவை நோக்கி, என் ஆண்டவரே, முன்னும், நீர் அடியேனுடன் பேசினதற்குப் பின்னும், நான் வாக்குவல்லவனல்ல; என் வாக்கும் மந்தம், என் நாக்கும் மந்தமென்றான்.

யக. யெகோவா அவனை நோக்கி, மனிதனுக்கு வாயைச் சிருஷ்டித்தவர் ஆர்? ஊமையையும், செவிடனையும், பார்வையுள்ளவனையும், குருடனையும் சிருஷ்டித்தவர் ஆர்? யெகோவாவாகிய நானல்லவா?

யஉ. ஆதலால் நீ போ. நான் உன் வாயிலிருந்து நீ பேசவேண்டுவதின்னவென்று உனக்குணர்த்துவேனென்று சொல்ல,

ய௩. அவன் என் ஆண்டவரே, நீர் அனுப்பத்தக்கவனை அனுப்பும்படி கெஞ்சுகிறேனென்றான்.

யச. அப்பொழுது யெகோவா தமது கோபம் மோசேயின்மேல் மூள, லேவியனாகிய ஆரோன் உன் சகோதரனல்லவா? அவன் வாக்குவல்லவனென்று அறிவேன். பார், அவனும் உன்னைச் சந்திக்கப் புறப்பட்டு வருகிறான். உன்னைக் காணும்பொழுது அவனிருதயம் மகிழும்.

௰௫. நீ அவனுடனே பேசு. அவனுடைய வாயில் வாக்கைக் கொடு. நான் உன் வாயிலும், அவன் வாயிலும் இருந்து, நீங்கள் செய்யவேண்டுவதின்னதென்று உங்களுக்கு உணர்த்துவேன்.

௰௬. அவன் உன் வாக்கைச் சனங்களுக்கு சொல்லுவான். அவனே உனக்கு வாய். நீயே அவனுக்குத் தேவன்.

௰௭. இந்தக் கோலையும் உன் கையிலே கொண்டுபோ. இதனால் நீ அடையாளங்களைக் காட்டுவாயென்றார்.

௰௮. பின்பு மோசே தன் மாமனாகிய எத்திரோவினிடத்துக்குத் திரும்பிப் போய், அவனை நோக்கி, எகிப்திலிருக்கும் என் சகோதரர்கள் இன்னும் உயிரோடிருக்கிறார்களாவென்று பார்க்கும்படி, நான் அவர்களிடத்திற்குப் போக உத்தரவு தாருமென்றான். அப்பொழுது எத்திரோ மோசேயை நோக்கிச் சமாதானத்தோடே போய் வாவென்றான்.

௰௯. யெகோவா மீதியானிலும் மோசேயை நோக்கி, உன் பிராணனை வாங்கத் தொடர்ந்த மனிதரெல்லாரும் இறந்து போனார்கள். நீ எகிப்து தேசத்துக்குத் திரும்பிப் போவென்றார்.

௨௰. அப்பொழுது மோசே தன் மனைவி

யையும், புத்திரர்களையும், ஓர் கழுதையின் மேல் ஏற்றிக்கொண்டு, எகிப்து தேசத்துக்குத் திரும்பினான். தேவனுடைய கோலையும் மோசே தன் கையிற் கொண்டுபோனான்.

௨௧. பின்னும் யெகோவா மோசேயை நோக்கி, நீ எகிப்தில் திரும்பிப் போய்ச் சேர்ந்தபின்பு நான் உனக்கு உன் கையினாற் செய்யும்படி, அனுக்கிரகித்த அற்புதங்கள்யாவையும் பார்வோனுக்கு முன் செய்யும் பொருட்டு எச்சரிக்கையாயிரு. ஆகிலும் நான் அவனுடைய இருதயத்தைக் கடினப்படுத்துவேன். அவன் சனங்களைப் போகவிடான்.

௨௨. அப்பொழுது நீ பார்வோனை நோக்கி, இஸ்ரவேல் என் புத்திரன்; என் சேஷ்ட புத்திரன்.

௨௩. என்னைச் சேவிக்கும்படி என் புத்திரனை அனுப்பிவிட, உனக்குக் கட்டளையிடுகிறேன். அவனை விடமாட்டேனென்று மறுப்பாயாகில், நான் உன் புத்திரனை, உன் சேஷ்ட புத்திரனையே சங்கரிப்பேன், பாரென்பதாக யெகோவா சொன்னாரென்று சொல்லென்றார்.

௨௪. வழியிலிருக்கும் ஒரு சத்திரத்தில், யெகோவா அவனுக்கு முற்பட்டு, அவனைக் கொல்லப் பார்த்தார்.

உரு. அப்பொழுது சிப்பொராள் கூரான ஒரு கல்லையெடுத்துத் தன் புத்திரனுடைய அக்கிர சருமத்தைச் சேதித்து, அவனுடைய காலில் வீசி, நீர் எனக்கு இரத்தஞ் சிந்துங் கணவ னேயென்றாள்.

உசு. பின்பு அவரவனை விட்டுவிட்டார். அ ப்பொழுது அவள் விருத்தசேதன நிமித்தத்தி னால் நீர் எனக்கு இரத்தஞ் சிந்துங் கணவனா னீரென்றாள்.

உஎ. யெகோவா ஆரோனை நோக்கி, நீ வ னாந்தரத்தில் மோசேயைச் சந்திக்கப் போவே ன்றார். அவன் போய்த் தேவமலையில் அவ னைச் சந்தித்து முத்தஞ்செய்தான்.

உஅ. மோசே தன்னை அனுப்பின யெகோ வாவின் சகல வாக்குகளையும், தனக்கு அவர் கட்டளையிட்ட சகலஅடையாளங்களையும், ஆரோனுக்குத் தெரிவித்தான்.

உகூ. மோசேயும் ஆரோனும் போய் இஸ்ர வேல் சந்ததியாரின் முதியோர் எல்லாரையுங் கூடிவரச் செய்தார்கள்.

௩௰. ஆரோன் யெகோவா மோசேக்குச் சொல்லிய சகல வாக்குகளையுந் தெரிவித்து, சனங்களுக்குப் பிரத்தியட்சமாக அடையா ளங்களையுங் காட்டினான்.

௩௧. சனங்கள் விசுவாசித்தார்கள். யெ

கோவா இஸ்ரவேல் சந்ததியார்மேற் கடாட்சம் வைத்தாரென்றும், அவர்கள் படும் உபத்திரவங்களைக் கண்ணோக்கினாரென்றும், அவர்கள் கேட்டபொழுது தலைவணங்கித் தொழுதுகொண்டார்கள்.

## ரு. அதிகாரம்.

க. மோசேயும் ஆரோனும் பார்வோனிடத்திற் போதல்; அவனவர்களைக் கண்டித்தல்: சு. சனங்களுக்கு அதிகவேலைகளைக் கற்பித்தல்: யரு. விசாரணைக்காரர் பார்வோனிடத்தில் முறையிடல்: உய. சனங்கள் மோசே ஆரோன் என்பவர்களிடத்தில் முறையிடல்; மோசே தேவனைப் பிரார்த்தித்தல்.

க. பின்பு மோசேயும், ஆரோனும் பார்வோனிடத்திற் போய், இஸ்ரவேலின் தேவனாகிய யெகோவா, வனாந்தரத்தில் எனக்கு உற்சவம் செய்யும்படி, என் சனங்களை அனுப்பிவிடவேண்டுமென்று சொல்லுகிறாரென்றார்கள்.

உ. அதற்குப் பார்வோன் நான் இஸ்ரவேலரைப் போகவிட, யெகோவாவின் வாக்குக்கு நான் கீழ்ப்படிகிறதற்கு அவர் யார்? யெகோவாவை அறியேன், நான் இஸ்ரவேலரைப் போகவிடேன் என்றான்.

ங. அவர்கள் அவனை நோக்கி, எபிரேயரு

டைய தேவன் எங்களுக்குத் தரிசனமானூர். நாங்கள் வனாந்தரத்தில் மூன்றுநாள் பிரயாணமளவும் போய், எங்கள் தேவனாகிய யேகோவாவுக்குப் பலியிடும்படி, போகவிட வேண்டுமென்று உம்மை வேண்டிக்கொள்ளுகிறோம். போகாதிருந்தால், அவர் பெருவாரிக் காய்ச்சலும், கட்கமும், எங்கள்மேல் வரப்பண்ணுவாரென்றூர்கள்.

௪. எகிப்தின் இராசா அவர்களை நோக்கி மோசேயே, ஆரோனே, நீங்கள் சனங்கள் வேலைகளைவிட்டு விலகும்படி செய்கிறதென்ன? நீங்களும் போய்ச் சுமையேடுங்களேன்றுன்.

௫. பின்னும் பார்வோன் பாருங்கள், தேசத்திலே சனங்கள் மிகுத்திருக்கிறூர்கள். அவர்கள் தங்கள் தங்கள் சுமைகளைவிட்டு ஒய்ந்திருக்கும்படி செய்கிறீர்களேயென்றுன்.

௬. அன்றியும் அந்நாளிலே அவன் சனங்களின் ஆளோட்டிகளையும், அதிபதிகளையும் நோக்கி,

௭. முன்போல இனி நீங்கள் அந்தச் சனங்களுக்குச் செங்கல் வேலைக்கு வைக்கோல் கொடுக்க வேண்டாம். அவர்கள் தாங்களே போய், தங்களுக்கு வைக்கோல் தேடிக்கொண்டு வரவேண்டும்.

௮. அவர்கள் முன் தந்த வீதப்படி செங்க

ல் தரவேண்டுமென்று அவர்களுக்குக் கட்ட ளையிடுங்கள். கொஞ்சமுங்குறையவிடாதிருங் கள். அவர்கள் சோம்பற்காரர்; ஆதலால் நா ங்கள் போய், எங்கள் தேவனுக்குப்பலியிட விடவேண்டுமென்று ஓலமிடுகிறார்கள்.

௯. அந்த மனிதர்மேல் அதிக ஊழியத்தை ச் சுமத்தவேண்டும். அவர்கள் அதைச் செய் யக் கடவர்கள். வீண் வசனங்களுக்குச் செ விகொடுக்க விடாதிருங்களென்று கட்டளையி ட்டான்.

௰. சனங்களின் ஆளோட்டிகளும், அதிப திகளும், புறப்பட்டுப்போய்ச் சனங்களை நோ க்கி, பார்வோன், நான் உங்களுக்கு வைக் கோல் தரேன்.

௰க. நீங்கள் போய், உங்களுக்கு அகப்படு கிற இடங்களில் வைக்கோலைச் சேகரித்துக் கொள்ளுங்கள். எப்படியும், உங்கள் வேலை யிற் கொஞ்சமாகிலுங் குறையப்படாதென்று சொல்லுகிறாரென்றார்கள்.

௰உ. வைக்கோலுக்காக அரிதாள் சேர்க்கச் சனங்கள் சிதறுண்டு எகிப்து தேசமெங்குந் திரிந்தார்கள்.

௰௩. ஆளோட்டிகளும் அவர்களை நோக்கி, வைக்கோலிருந்த நாளில் நீங்கள் செய்தபடி, உங்கள் வேலைகளை எந்நாளுஞ் செய்துமுடியு

ங்களென்று சொல்லி, அவர்களைத் துரிதப்படுத்தினார்கள்.

௰௪. பார்வோனுடைய ஆளோட்டிகள் இஸ்ரவேலருடைய தலைவர்களை நோக்கி, உங்களுக்குக் குறித்த வீதப்படி, நேற்றுமின்றுங் கல்வேலையை முன் போல முடியாமற் போனதென்னவென்று சொல்லி அவர்களை அடித்தார்கள்.

௰௫. அப்பொழுது இஸ்ரவேல் சந்ததியாரின் தலைவர் பார்வோனிடத்திற் போய் ஓலமிட்டு, உமதடியாருக்கு நீர் இப்படிச் செய்கிறதென்ன ?

௰௬. உமதடியாருக்கு வைக்கோலைத் தராதிருந்துஞ் செங்கல்லைச் செய்யுங்களென்கிறார்கள். உம்முடைய சனங்களிடத்தில் குற்றமிருக்க உமதடியாராகிய நாங்கள் அடிபடுகிறோமென்று சொல்ல,

௰௭. அவன், நீங்கள் சோம்பற்காரர், சோம்பற்காரர்களே ; ஆகையால் யெகோவாவுக்குப் பலியிடப் போவோம் என்கிறீர்கள்.

௰௮. போங்கள், வேலையைச் செய்யுங்கள். வைக்கோல் உங்களுக்குத் தரப்படுவதில்லை. எப்படியும் உங்களுக் கிட்ட வீதப்படி செங்கல்லை ஒப்பிக்க வேண்டுமென்றான்.

௰௯. நீங்கள் நாள்வீதங் குறையாமல் செ

ங்கற்களைச் செய்யுங்கள் என்று சொன்ன பி
ன்பு, இஸ்ரவேற் சந்ததியாரின் தலைவர்கள்
தங்களுக்கு இடுக்கண் வந்ததென்பதைக் க
ண்டார்கள்.

௨௰. பார்வோனுடைய சமுகத்தை விட்டு
ப் புறப்படுகையில், வழியில் நின்ற மோசேக்
கும், ஆரோனுக்கும் முற்பட்டு,

௨௧. அவர்களை நோக்கி, நீங்கள் பார்வோ
னுடைய கண்களுக்கு முன்பாகவும், அவர்
ஊழியக்காரரின் கண்களுக்கு முன்பாகவும்,
எங்கள் வாசனையைக் கெடுத்து, எங்களைக்
கொலைசெய்யுங் கட்கத்தை அவர்கள் கையி
லே கொடுத்ததினிமித்தம், யெகோவா உங்க
ளை நோக்கி, நியாயந்தீர்க்கக் கடவர் என்றார்
கள்.

௨௨. அப்பொழுது மோசே, யெகோவாவி
டத்தில் திரும்பி ஆண்டவரே, நீர் இந்தச் ச
னங்களைத் துக்கப் படுத்துகிற தென்ன ? எத
ற்காக என்னை அனுப்பினீர் ?

௨௩. நான் உமது நாமத்தைக்கொண்டு பே
சும்படி பார்வோனிடத்திற் பிரவேசித்தது மு
தல், இந்தச் சனங்களை உபத்திரவப்படுத்தி
வருகிறான். நீர் உம்முடைய சனங்களை விடு
தலையாக்கவே இல்லையென்றான்.

## ௬. அதிகாரம்.

க. தேவன் மோசேக்குத் திரும்பவும் வாக்குத்தத்தஞ் செய்தல்: ௰௪. ரூபேன் ஷிமியோன் என்பவர்களின் வமிசவரலாறு: ௰௬: லேவியின் வமிசவரலாறு.

௧. அப்பொழுது யெகோவா மோசேயை நோக்கி, பார்வோனுக்கு இன்னதுசெய்வேன் என்பதைச் சீக்கிரமாகக் காண்பாய். கைவல்லமையினால் அவன்அவர்களைப் போகவிடுவான். கைவல்லமையினால் அவன் அவர்களைத் தன் தேசத்தில் நின்றுந் துரத்திவிடுவானென்றார்.

௨. மேலும் தேவன் மோசேயைநோக்கி, நானே யெகோவா.

௩. ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், யாக்கோபுக்கும், சருவவல்லமையுள்ள தேவன் என்னும் நாமத்தினால் தரிசனமானதேயன்றி, யெகோவா என்னும் என்நாமத்தினால் அவர்களுக்கு அறியப்படவில்லை.

௪. அவர்கள் பரதேசிகளாய்த் தங்கினதேசமாகிய கானான்தேசத்தை அவர்களுக்குக் கொடுப்பேனென்று நான்அவர்களுடனே என் உடன்படிக்கையை ஏற்படுத்தியுமிருக்கிறேன்.

௫. எகிப்தியர் சிறைப்படுத்திக்கொண்ட இஸ்ரவேல் சந்ததியாருடைய புலம்பலையுங் கேட்டு,என் உடன்படிக்கையைநினைத்தேன்.

௬. ஆதலால் நீ இஸ்ரவேல் சந்ததியாரை நோக்கி, நானேயேகோவா. உங்களுக்கு எகிப்தியர் ஏற்றுஞ் சுமைகளில் நின்றும் நான் உங்களை விடுவித்து, அடிமைத்தனத்தைத்தவிர்த்து, ஓங்கிய கரத்தினாலும் மகா தண்டனைகளினாலும், உங்களை மீட்டு,

௭. உங்களை என் சனங்களாக்குவேன். நான் உங்களுக்குத் தேவனாவேன். யேகோவாவாகியநானே, உங்களுக்கு எகிப்தியர் ஏற்றும் சுமைகளில் நின்றும் உங்களைவிடுவிக்கும் உங்கள் தேவனென்று அறிவீர்கள்.

௮. ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், யாக்கோபுக்குந் தருவேனென்று நான் ஆணையிட்டதேசத்தில், உங்களைச் சேர்த்துக்கொண்டு, அதையுங்களுக்குச் சுதந்தரமாக அளிப்பேன். நானே யேகோவாவென்று அவர்களுக்குச் சொல்லென்றார்.

௯. இந்தப் பிரகாரமாக மோசே இஸ்ரவேல் சந்ததியாருக்குச்சொன்னான். அவர்களோ, ஆவியின் மேலிவினாலும் குரூரமான ஊழியத்தினாலும் மோசேக்குச் செவி கொடுக்கவில்லை.

௰. பின்பு யெகோவாமோசேயை நோக்கி,

௰௧. நீ எகிப்தின் இராசனாகிய பார்வோனி டத்திற்போய், அவன் தன் தேசத்தில் நின்று ம் இஸ்ரவேல்சந்ததியாரைப் போகவிடும்ப டி, அவனுக்குச் சொல்லென்றார்.

௰௨. மோசே யெகோவாவின் சந்நிதானத் தில் நின்று, இஸ்ரவேல் சந்ததியார் எனக்குச் செவிகொடுக்கவில்லை. வாய்ச்சாலகனல்லாத எனக்குப் பார்வோன் எப்படிச் செவிகொடு ப்பானென்றான்.

௰௩. இஸ்ரவேல் சந்ததியாரை எகிப்துதே சத்தில் நின்றும் புறப்படும்படி செய்வதற்கு யெகோவா மோசேயுடனும், ஆரோனுடனும் பேசினதுமன்றி, இஸ்ரவேல்சந்ததியாருக்கு ம், எகிப்தின் இராசனாகிய பார்வோனுக்குங் கட்டளையுங்கொடுத்தனுப்பினார்.

௰௪. இவர்கள் தங்கள் தங்கள் பிதாக்களி ன் வமிசத்தலைவரானார்: இஸ்ரவேலின் சே ஷ்டபுத்திரனாகிய ரூபேனுடையபுத்திரர்கள் அனோகு, பல்லூ, எத்ஸ்ரோன், கார்மி இவர் களே ரூபேனுடைய வமிசத்தார்.

௰௫. ஷிமியோனின் புத்திரர் யெமுவேல், யாமின், ஒகாத், யாகின், சோகார், கானானிய ஸ்திரியின் புத்திரனாகிய ஷவுல், இவர்களே ஷிமியோனுடைய வமிசத்தார்.

௰௬. உற்பத்திக் கிரமப்படி லேவியின் புத்திரருடைய நாமங்களாவன, கெர்ஷோன், கோகாத், மெராரி, லேவி நூற்றுமுப்பத்தேழு வருஷமிருந்தான்.

௰௭. அவரவர்வமிசங்களின்படி கெர்ஷோனின்புத்திரர்கள் லிப்னீ, ஷிமேயி.

௰௮. கோகாத்தின் புத்திரர் அம்ராம், இத்சார், எப்ரோன், ஊசியேல். கோகாத் நூற்று முப்பத்துமூன்றுவருஷமிருந்தான்.

௰௯. மெராரியினுடைய புத்திரர் மகேலி, மூஷி, இவர்கள் அவரவர் உற்பத்திக்கிரமப்படி லேவியின் வமிசத்தார்.

௨௰. அம்ராம் என்பவன் தன் பிதாவின் சகோதரியாகிய யோகெபேத்தை விவாகம்பண்ணினான். அவள் ஆரோனையும், மோசேயையும் பெற்றாள். அம்ராம் நூற்று முப்பத்தேழு வருஷமிருந்தான்.

௨௧. இத்சாருடைய புத்திரர் கோராகு, நெப்பேக், சித்ரீ.

௨௨. ஊசியேலுடைய புத்திரர் மீஷாயேல் எலீத்சாபான், சித்ரீ.

௨௩. ஆரோன், அம்மினதாபின்புத்திரி நகஷோனின் சகோதரியுமாயிருந்த எலீஷேபாளை விவாகம்பண்ணினான். அவள் நாதாபை

யும், அபியூவையும், எலியேசரையும், இதா மாரையும்பெற்ருள்.

௨௪. கோராகின்புத்திரர்அச்சீர், எல்க்காஞ, அபியாசாப் இவர்களே கோராகின் வமிசத்தார்.

௨௫. ஆரோனுடைய புத்திரஞகிய எலியேசார், பூத்தியேலுடைய புத்திரிகளில் ஒருத்தியை விவாகம்பண்ணிஞன். அவள் பீனிகாசைப்பெற்ருள். இவர்களே அவரவர்வமிசங்களின்படி லேவியருடைய பிதாக்களின் வமிசத்தார்.

௨௬. இஸ்ரவேல் சந்ததியாரை அணியணியாய் எகிப்துதேசத்திலிருந்து நடத்திப்போவதற்கு யேகோவாவிஞற் கட்டளைபெற்ற ஆரோனும், மோசேயும், இவர்களே.

௨௭. இஸ்ரவேல் சந்ததியாரை எகிப்திலிருந்து நடத்திப்போவதற்கு எகிப்தின் இராசஞகிய பார்வோனுடனே பேசினவர்களாகிய மோசேயும், ஆரோனும், இவர்களே.

௨௮. யேகோவா எகிப்து தேசத்தில் மோசேயுடனே பேசினகாலத்தில்,

௨௯. நானே யேகோவா. நான் உன்னுடனே சொல்லுகிற யாவையும் நீ எகிப்தின் இராசஞகிய பார்வோனுக்குச் சொல்லென்று யேகோவா மோசேயுடன் சொல்ல,

௩௰. மோசே நான் வாக்கு வல்லவனல்ல. பார்வோன் எனக்கு எப்படிச் செவிகொடுப்பானென்று யெகோவாவின் சந்நிதானத்தில் சொன்னான்.

## எ. அதிகாரம்.

க பார்வோனிடத்தில் போகும்படி தேவன்மோசேக்குக்கட்டளையிடல்: அ. கோல் சர்ப்பமாதல்: ௰௪. மோசே மீளவும் பார்வோனிடத்தில் அனுப்பப்படல்: ௰௯. சலம் உதிரமாதல்.

க. யெகோவா மோசேயை நோக்கி, நானுன்னைப் பார்வோனுக்குத் தேவனாக்கினேன். உன் சகோதரனாகிய ஆரோன் உனக்குத் தீர்க்கதரிசியாவான்.

உ. நான் உனக்குக் கட்டளையிடும் யாவையும் நீ சொல்லவேண்டும். பார்வோன் தன் தேசத்திலிருந்து இஸ்ரவேல் சந்ததியாரை அனுப்பிவிடும்படி, உன் சகோதரனாகிய ஆரோன் அவனுக்குச் சொல்லவேண்டும்.

௩. நான் பார்வோனுடைய இருதயத்தைக் கடினப்படுத்தி, எகிப்து தேசத்தில் மிகுதியாய் என் அடையாளங்களையும், அற்புதங்களையுங் காட்டுவேன்.

௪. பார்வோன் உங்களுக்குச் செவிகொடு

க்க மாட்டான். எகிப்தின்மேல் நான் என் கையை ஓங்கி மகா தண்டனையினால், என் சேனைகளும் என் சனங்களுமாகிய இஸ்ர வேல் சந்ததியாரை எகிப்துதேசத்தில் நின்று ம் புறப்படச்செய்வேன்.

ரு. நான் எகிப்தின்மேல் என்கையை ஓங்கி இஸ்ரவேல் சந்ததியாரை அவர்களில் நின்றும் புறப்படச்செய்யும்போழுது, நானே யேகோ வாவேன்று எகிப்தியர் அறிவார்களேன்றார்.

சு. மோசேயும், ஆரோனும், யேகோவா தங்களுக்குக் கட்டளையிட்டபடி செய்தார்க ள். அப்படியே செய்தார்கள்.

எ. அவர்கள் பார்வோனுடனே பேசினகா லத்தில் மோசேக்கு எண்பதுவயது, ஆரோனு க்கு எண்பத்து மூன்றுவயது.

அ. யேகோவா மோசேயையும், ஆரோனை யும், நோக்கி,

கூ. நீங்கள் உங்கள் பட்சத்துக்கு ஒரு அ ற்புதங்காட்டுங்களேன்று பார்வோன் உங்க ளுடனே சொன்னால், நீ ஆரோனை நோக்கி, உ ன் கோலையேடுத்து, அதைப் பார்வோனுக்கு முன் போடேன்பாயாக. அது சருப்பமாகு மேன்றார்.

ய. மோசேயும் ஆரோனும் பார்வோனிட த்திற்சென்று, யேகோவா இட்டகட்டளைப்ப

டி செய்தார்கள். ஆரோன் தன்கோலைப் பார்வோனுக்கும், அவன் பணிவிடைக்காரருக்கும், முன்பாகப் போட்டான். அது சருப்பமாயிற்று.

௰௧. அப்பொழுது பார்வோன் வித்துவான்களையும், மந்திரவாதிகளையும் அழைப்பித்தான். எகிப்தின் மாயா வித்தைக்காரர்களும், தங்கள் சாலவித்தையினால், அப்படிச்செய்தார்கள்.

௰௨. அவர்கள் ஒவ்வொருவனுகத் தன் தன் கோலைப்போட, அவைகள் சருப்பங்களாயின. ஆரோனுடைய கோலோ, அவர்கள் கோல்களை விழுங்கிற்று.

௰௩. யேகோவா, தாம் சொல்லியபடி, பார்வோனுடைய இருதயத்தைக் கடினப்படுத்தினார். அவன் அவர்களுக்குச் செவி கொடுக்கவில்லை.

௰௪. யேகோவா மோசேயை நோக்கி, பார்வோனுடைய இருதயங் கடினமாயிற்று, சனங்களைப் போகவிடாமல் மறுக்கிறான்.

௰௫. பார்வோன் விடியற்காலத்தில் நதிக்குப்புறப்பட்டு வருவான். நீ போய் நதியோரத்தில் நின்று, அவன் வருமளவில் சருப்பமாக மாறினகோலை உன் கையிற் பிடித்துக்கொண்டு,

௰௬. அவனை நோக்கி, எபிரேயரின் தேவ னாகிய யேகோவா, வனாந்தரத்தில் எனக்கா ராதனை செய்ய, என் சனங்களை அனுப்பிவிட வேண்டுமென்று சொல்லச்சொல்லி, என்னை உம்மிடத்தில் அனுப்பினார். நீர் இதுவரைக் குங் கேட்கவேயில்லை.

௰௭. என் கையிலிருக்கிற கோலினால் ஆற் றின் நீர்களை அடிப்பேன்; அவை இரத்தமா கும்.

௰௮. ஆற்றின்மீன்கள் செத்துப்போம், ஆ று நாற்றமெடுக்கும். எகிப்தியர் ஆற்றின்நீரை க்குடிக்க அரோசிப்பார்கள். இதினால் நானே யேகோவா என்பதை அறிந்துகொள்வாயென் று, யேகோவா உரைத்தாரென்பதாகச் சொ ல்லென்றார்.

௰௯. மேலும் யேகோவா மோசேயை நோ க்கி, நீ ஆரோனுடனே உன் கோலை எடுத்து க்கொண்டு, எகிப்தின் நீர் நிலைகளாகிய ஒ டைகள் மேலும், நதிகள்மேலும், குளங்கள் மேலும், சலம் நிற்கும் எல்லா இடங்கள்மே லும், உன் கையை ஒங்கு; அதினால் அவை கள் இரத்தமாகும். எகிப்து தேசமெங்கும் மரப் பாத்திரங்களிலும், கற் பாத்திரங்களிலு ம், இரத்தமே இருக்குமென்று சொல்லென் றார்.

உ௰. யேகோவா கட்டளையிட்டபடி, மோசேயும், ஆரோனும், செய்தார்கள். பார்வோனுக்கும், அவனுடைய பணிவிடைக்காரருக்கும் முன்பாகக் கோலை ஓங்கி, ஆற்றின் நீரில் அடிக்க, ஆற்றின் நீர் எல்லாம் இரத்தமாயிற்று.

உக. ஆற்றின் மீன்கள் செத்துப் போயின. ஆறு நாற்றம் எடுத்தது. எகிப்தியருக்கு ஆற்றின் நீர் குடிக்க உதவாமற் போயிற்று. எகிப்துத் தேசம் எங்கும் இரத்தம் உண்டாயிற்று.

உஉ. எகிப்தின் மாயாவித்தைக் காரர்களுந் தங்கள் சாலவித்தையினால் அப்படிச்செய்தார்கள். யேகோவா சொல்லியபடி பார்வோனுடைய இருதயங் கடினமாக்கப்பட்டது. அவன் அவர்களுக்குச் செவி கொடுக்கவில்லை.

உ௩. பார்வோன் தன் வீட்டுக்குத் திரும்பிப் போய்விட்டான். அவன் இவைகளையுஞ் சிந்திக்கவில்லை.

உ௪. ஆற்றின் நீர் குடிக்க உதவாதபடியால் குடிக்கத் தண்ணீருக்கு எகிப்தியரெல்லாரும் நதியோரத்தில் வெட்டினார்கள்.

உ௫. யேகோவா ஆற்றையடித்த பின்பு ஏழுநாட் சென்றது.

# அ. அதிகாரம்.

*க. தவளைகளைத் தோன்றச் செய்தல் : அ. பார்வோன் மோசேயை வேண்டிக்கொள்ளல் : ௰௪. தூளிகளைப் பேனுக்கல்; அதிலே மாயாவிகள் தோல்வி அடைதல்: ௨௰. வண்டுகளைத் தோன்றச் செய்தல். பார்வோனிருதயங் கடினமாதல்.*

க. அப்பொழுது யேகோவா மோசேயை நோக்கி, நீ பார்வோனிடத்திற் போய், எனக் காராதனை செய்ய, என் சனங்களை அனுப்பி விடு.

௨. அனுப்பிவிடாயேயாகில், உன் எல்லை அடங்கலையுந் தவளைகளால் வாதிப்பேன்.

௩. நதி, தவளைகளைத் திரளாகத் தோற்றுவிக்கும். அவைகள் உன் வீட்டிலும், உன் படுக்கையறையிலும், உன் மஞ்சத்தின் மேலும், உன் பணிவிடைக்காரர் வீடுகளிலும், உன் சனங்களிடத்திலும், உன் அடுப்புகளிலும், மாப்பிசைகிற உன் தொட்டிகளிலும் ஏறிவரும்.

௪. அந்தத் தவளைகள் உன் மேலும், உன் சனங்கள் மேலும், உன் பணிவிடைக்காரர் எல்லார்மேலும், ஏறும் என்பதாக யேகோவா சொல்லுகிறுரேன்று, அவனுக்குச் சொல்ல வேண்டுமேன்றுர்.

௫. பின்னும் யேகோவா மோசேயை நோ

க்கி, நீ ஆரோனிடத்தில் உன் கோலுடன் உ ன் கையை ஓடைகளின்மேலும், நதிகளின் மேலும், குளங்களின்மேலும் ஓங்கி, எகிப்து தேசத்தின் மேலே தவளைகள் ஏறி வரும்படி செய்யென்று சொல்லென்றார்.

௬. ஆரோன் தன் கையை எகிப்திலுள்ள நீர் நிலைகளின் மேல் ஓங்கினான். தவளைகள் ஏறிவந்து எகிப்து தேசத்தை மூடிக்கொண் டன.

௭. மாயாவித்தைக் காரர்களுந் தங்கள் தங் கள் சால வித்தையினால் எகிப்துதேசத்தின் மேலே தவளைகள் ஏறிவரப் பண்ணினார்கள்.

௮. பார்வோன் மோசேயையும் ஆரோனை யும் அழைப்பித்து, யெகோவா தவளைகளை என்னிலும் என் சனங்களிடத்திலும் நின்று நீக்கும் பொருட்டு அவரை வேண்டிக்கொள் ளுங்கள், யெகோவாவுக்குப் பலியிடும்படி ச னங்களை அனுப்பி விடுவேனென்றான்.

௯. மோசே பார்வோனை நோக்கி, நீர் என் னிலும், மேன்மை பெறக் கடவீர். தவளை கள் நதியில்மாத்திரமிருப்பதன்றி, உம்மிலு ம் உம்முடைய வீடுகளிலும் இல்லாதொழிந் து போம்படி செய்ய, உமக்காகவும், உம்மு டைய பணிவிடைக்காரருக்காகவும், உம்மு டைய சனங்களுக்காவும், நான் எப்போ

ழுது பிரார்த்திக்க வேண்டுமென்று கேட்க, அ
வன் நாளைக்கென்றான்.

௰. மோசே, எங்கள் தேவனாகிய யேகோ
வாவுக்கு ஒப்பானவர் ஒருவருமில்லை என்ப
தை நீர் அறிந்துகொள்ளும் பொருட்டு உமது
வாக்கின்படி ஆகக்கடவது.

௰௧. தவளைகள் ஆற்றிலே மாத்திரம் இரு
ப்பதன்றி, உம்மிலும், உம்முடையவீடுகளி
லும், உம்முடைய பணிவிடைக்காரரிலும்,
உம்முடைய சனங்களிலும், இராமல் நீங்கிப்
போமென்றான்.

௰௨. பின்பு மோசேயும் ஆரோனும் பார்
வோனை விட்டுப் புறப்பட்டார்கள். பார்வோ
னுக்கு விரோதமாக வருவித்த தவளைகளினி
மித்தம், யேகோவாவைநோக்கி, மோசே பி
ரார்த்தித்தான்.

௰௩. யேகோவாவும் மோசேயின் சொல்லு
க்கிசையச் செய்தார். வீடுகளிலும், கிராமங்க
ளிலும், வயல்நிலங்களிலுமிருந்த தவளைகள்
செத்துப்போயின.

௰௪. அவைகளைக் குவியல் குவியலாகச்சே
ர்த்தார்கள். தேசத்தில் நாற்றமுண்டாயிற்று.

௰௫. பார்வோன், இலகுவாயிற்றென்று க
ண்டபொழுது, தன்னிருதயத்தைக் கடினப்ப
டுத்தி அவர்களுக்குச் செவிகொடாதிருந்தான்.

யேகோவா சொல்லிய பிரகாரம் ஆயிற்று.

௰௬. யேகோவா மோசேயை நோக்கி, நீ ஆரோனிடத்தில் உன் கோலை ஓங்கிப் பூமியின் தூளின் மேல் அடி. அப்பொழுது அது எகிப்து தேசமெங்கும் பேனாகுமென்று சொல்லென்றார்.

௰௭. அப்படியே செய்தார்கள். ஆரோன் தன் கையிலிருந்த கோலை ஓங்கிப் பூமியின் தூளின்மேல் அடிக்க, அது பேன்களாகி மனிதரிலும், மிருகசெந்துக்களிலும், நெருங்கின பூமியின் தூளெல்லாம் எகிப்துதேசமெங்கும் பேன்களாயின.

௰௮. மாயாவித்தைக்காரர்களுந் தங்கள் தங்கள் சாலவித்தையினால் பேன்களைத்தோற்றுவிக்கப் பிரயத்தனஞ் செய்தும் அவர்களால் கூடாமற் போயிற்று. பேன்கள் மனிதரிலும், மிருக செந்துக்களிலும், நெருங்கின பொழுது,

௰௯. மாயாவித்தைக்காரர்கள் பார்வோனை நோக்கி, இது தேவனுடைய விரல் என்றார்கள். யேகோவா சொல்லியபடி பார்வோனுடைய இருதயம் கடினமாக்கப்பட்டது. அவன் அவர்களுக்குச்செவிகொடுக்கவில்லை.

௨௰. பின்பு யேகோவா மோசேயை நோக்கி, நாளை அதிகாலையில் நீ எழுந்துபோய், பார்

வோன் நதிக்குப் புறப்பட்டு வரும்போழுது, அவனுக்கு முற்பட்டு, எனக்காராதனை செய்ய என் சனங்களை அனுப்பிவிடு.

உக. என் சனங்களை அனுப்பிவிடாயேயாகில், நான் உன்மேலும் உன் பணிவிடைக்காரர்மேலும், உன் சனங்கள் மேலும், உன் வீடுகளின்மேலும், வண்டுகளை வருவிப்பேன்; எகிப்தியருடைய வீடுகளேயன்றி, அவர்களிருக்கிற தேசமும், வண்டுகளினாலே நிறைக்கப்படும்.

உஉ. பூலோக மத்தியில் நானே யேகோவாவென்று நீ அறியும்போருட்டு, அத் தினத்தில் என்சனங்களிருக்கிற கோஷேன் நாட்டை வண்டுகள் பிரவேசியாதபடி விசேஷப்படுத்தி,

உரு. என் சனங்களுக்கும், உன் சனங்களுக்கும் வேற்றுமையுண்டாகும்படி செய்வேன். இந்த அடையாளம் நாளைக்கு உண்டாகுமேன்று யேகோவா சொன்னாரேன்பதாக அவனிடத்திற் சோல்லேன்றார்.

உச. யேகோவா அப்படியே செய்தார். குரூரமான வண்டுத் திரள், பார்வோன் வீட்டிலும், அவன் பணிவிடைக்காரர் வீடுகளிலும், எகிப்துதேசம் முழுவதிலும், பிரவேசித்தது. வண்டுகளினாலே தேசத்துக்குக் கேடுண்டாயிற்று.

௨௫. பார்வோன் மோசேயையும், ஆரோ
னையும் அழைப்பித்து, நீங்கள் போய் உங்க
ள் தேவனுக்கு இத்தேசத்திற் பலியிடுங்களே
ன்று சொல்ல,

௨௬. மோசே எங்கள் தேவனாகிய யேகோ
வாவுக்கு நாங்களிடும் பலி எகிப்தியருக்கு
வெறுப்பாயிருப்பதினால் அப்படிச் செய்வது
தகாது. எகிப்தியர் வெறுக்கும் பலியை அவ
ர்கள் கண்கள் முன்பாக நாங்களிட்டால் எ
ங்கள் மேற் கல்லெறிவார்களல்லவா ?

௨௭. எங்கள் தேவனாகிய யேகோவா எங்
களுக்கு விதிக்கும் பிரகாரம், நாங்கள் மூன்
றுநாள் பிரயாணமளவு போய், வனத்தில்
அவருக்குப் பலியிடுவோமென்று சொல்ல,

௨௮. பார்வோன், நீங்கள் உங்கள் தேவ
னாகிய யேகோவாவுக்கு வனத்தில்பலியிடும்
படிக்கு நான் உங்களை அனுப்பிவிடுவேன் ;
எப்படியுந் தூரத்திற் போகலாகாது ; எனக்
காகப் பிரார்த்தனை பண்ணுங்களென்றான்.

௨௯. அதற்கு மோசே நான் உம்மை விட்
டுப் புறப்பட்ட பின் பார்வோனாகிய உம்மி
டத்திலும், உம்முடைய பணிவிடைக்காரரி
டத்திலும், உம்முடைய சனங்களிடத்திலும்
இருந்து வண்டுத்திரள் நாளைக்கு நீங்கும்படி
க்கு யேகோவாவைப் பிரார்த்திப்பேன். யே

கோவாவுக்குப் பலியிடுகிறதற்குச் சனங்களை அனுப்பிவிடப் பார்வோனாகிய நீர் இன்னும் வஞ்சனை செய்யாதிருப்பீராகவென்றான்.

௩௰. மோசே பார்வோனை விட்டுப் புறப்பட்டு யெகோவாவைப் பிரார்த்தித்தான்.

௩௧. யெகோவா மோசேயின் சொற்படி பார்வோனிடத்திலும், அவன் பணிவிடைக்காரரிடத்திலும், அவன் சனங்களிடத்திலுமிருந்து, வண்டுத் திரளை நீக்கினார். ஒன்றும் நிற்கவில்லை.

௩௨. பார்வோன் இத்தருணத்திலும் தன்னிருதயத்தைக் கடினப்படுத்திச் சனங்களைப் போகவிடாதிருந்தான்.

## ௯. அதிகாரம்.

*க. மிருகசெந்துக்களுக்கு நோயுண்டாதல்: ௮. மனிதருக்குள்ளும் மிருகசெந்துக்களுக்குள்ளும் எரிகொப்புளமுண்டாதல்: ௰௩. கல்மழைபெய்தல்: ௨௭. பார்வோன் மோசேயை வேண்டுதல் செய்தல். அவன் மனங் கடினமாதல்.*

க. யெகோவா மோசேயை நோக்கி, நீ பார்வோனிடத்திற் போய் எனக்கு ஆராதனை செய்ய என் சனங்களை அனுப்பிவிடு.

௨. விடாமல் இன்னுந் தடைப்படுத்தினாயாகில்,

௩. யெகோவாவின் கரம் குதிரைகள், கழு

தைகள், ஒட்டகங்கள், ஆடுமாடுகளாகிய வெளியிலுள்ள உன் மிருகங்கள்மேலிருக்கும். அவைகளுக்கு மிகவும் கொடிய நோயுண்டாகும்.

௪. அன்றியும் யெகோவா இஸ்ரவேலருடைய மிருகங்களுக்கும் எகிப்தியருடைய மிருகங்களுக்கும் வேற்றுமையுண்டாகச் செய்வார். இஸ்ரவேல் சந்ததியாருடையவைகள் எல்லாவற்றிலும் ஒன்றுஞ் சாவாது.

௫. மேலும் நாளையே இக்காரியத்தைத் தேசத்தில் யெகோவாச் செய்வாரென்று யெகோவா காலங் குறித்தாரென்றும், எபிரேயரின் தேவனாகிய யெகோவா சொன்னாரென்றும், அவனிடத்திற் சொல்லென்றார்.

௬. மற்றை நாள் யெகோவா அக்காரியத்தைச் செய்தார். எகிப்தியருடைய மிருகங்களெல்லாம் இறந்துபோயின .இஸ்ரவேல் சந்ததியாருடைய மிருகங்களில் ஒன்றுஞ் சாவவில்லை.

௭. பார்வோன் ஆளனுப்பி இஸ்ரவேல் சந்ததியாருடைய மிருகங்களில் ஒன்றுஞ் சாவவில்லையென்று கண்டான். பார்வோனுடைய இருதயங் கடினமாக்கப்பட்டது. அவன் சனங்களைப் போகவிட்டில்லை.

௮. யெகோவா, மோசேயையும் ஆரோனையும் நோக்கி, நீங்கள் இரு கை நிறையச்

சூளையின் சாம்பலை அள்ளுங்கள். மோசே அதைப் பார்வோன் சமுகத்தில், வானத்துக்கு நேரே இறைக்கக்கடவன்.

௯. அது எகிப்து தேசமெங்கும் தூசியாகி, எகிப்து தேசமெங்கும் மனிதரிலும், மிருகங்களிலும், வீக்கங்கொண்ட எரிகொப்புளத்தைத் தோற்றுவிக்குமென்றார்.

௰. அவர்கள் சூளையின் சாம்பலை அள்ளிவைத்துக்கொண்டு, பார்வோனுக்கு முன்னே இறைத்தார்கள். மோசே அதை வானத்துக்கு நேராக இறைத்தான். அது மனிதரிலும் மிருகங்களிலும் வீக்கமான எரிகொப்புளங்களைத் தோற்றுவித்தது.

௰௧. அந்த எரிகொப்புளம் மாயாவித்தைக்காரர்களிலும், எகிப்தியர் எல்லாரிலும், உண்டானதினால் எரிகொப்புளங்களினிமித்தம் மாயாவிகள் மோசேயின் முன்னிற்கக் கூடாதிருந்தார்கள்.

௰௨. யெகோவா பார்வோனுடைய இருதயத்தைக் கடினப்படுத்தினார். யெகோவா மோசேக்குச் சொல்லிய பிரகாரம், அவன் அவர்களுக்குச் செவி கொடுக்கவில்லை.

௰௩. யெகோவா மோசேயை நோக்கி, நீ அதிகாலையில் எழுந்து போய்ப் பார்வோன் முன் நின்று, அவனை நோக்கி, எனக்கு ஆரா

தனைசெய்ய என் சனங்களை அனுப்பிவிடு.

௰௪. விடாதிருந்தால் இத்தருணத்தில் நான் உன் மேலும், உன் பணிவிடைக்காரர்மேலு ம், உன் சனங்கள்மேலும், சகலவித வாதை களையும் அனுப்புவேன். அதினால் பூமியெங் கும் எனக்கொப்பானவர் இல்லையென்று நீ அறிந்துகொள்வாய்.

௰௫. நீ பூமியிலில்லாமல் நாசமாய்ப் போகு ம்படி நான் என் கையை ஓங்கி, உன்னையு ம், உன் சனங்களையுங் கொள்ளை நோயினால் வாதிப்பேன்.

௰௬. என் வல்லமையை உனக்குக் காண் பிக்கவும், என் நாமம் பூமியெங்கும் பிரகாசி க்கவும், உன்னை நிறுத்தினேன்.

௰௭. நீ என் சனங்களை விரோதித்து, அ வர்களைப் போக விடாமல் இன்னும் உன் அகங்காரத்தைக் காட்டுகிறாய்.

௰௮. எகிப்துத் தோன்றிய நாள் முதல் இந் நாள் வரைக்கும் அதிலே பெய்யாத மிகவுங் கொடிய கல்மழையை நாளை இந்நேரம் பெ ய்விப்பேன்.

௰௯. வீட்டிலே சேர்க்கப்படாமல் வெளியி லிருக்கும் மனிதரும், மிருகங்கள் யாவும், பெய்யுங் கல்மழையினால் இறந்துபோக அ து அவர்கள் மேல் வரும். ஆதலால் வெளியி

லுள்ள உன் ஆடுமாடு முதலிய யாவையுஞ் சேர்க்க, இப்பொழுதே ஆள்அனுப்புஎன்று எபிரேயரின் தேவனாகிய யேகோவா சொன்னாரென்பதாக, அவனிடத்தில் சொல்லென்றார்.

உ௰. பார்வோனுடைய பணிவிடைக்காரரில் யேகோவாவின் வாக்குக்குப் பயந்தவன் எவனோ, அவன் தன் பணிவிடைக்காரரையும், தன் மிருகங்களையும், வீடுகளுக்கு ஓடிவரப்பண்ணினான்.

உக. யேகோவாவின் வாக்கிலே சிந்தைவையாதவன் எவனோ, அவன் தன் பணிவிடைக்காரரையும், தன் மிருகங்களையும், வெளியிலே விட்டுவிட்டான்.

உஉ. யேகோவா மோசேயை நோக்கி, எகிப்துதேசமெங்கும் மனிதர்மேலும், மிருகங்கள்மேலும், எகிப்துதேசத்திலுள்ள சகல பயிர்வகைகள்மேலும், கல்மழை பெய்ய, வானத்துக்கு நேரே உன் கையை ஓங்கென்றார்.

உ௩. மோசே தன் கோலை வானத்துக்கு நேரே ஓங்க யேகோவா இடிமுழக்கத்தையும், கல்மழையையும், பெய்வித்தார். அக்கினி பூமியின் மேலே வேகமாய்ப் பரந்தது. யேகோவா எகிப்துதேசத்தில் கல்மழையை வருஷிக்கப்பண்ணினார்.

உச. கல்மழையுங் கல்மழையோடே கலந்

த தீத்திரளும், மிகவுங் கொடியவைகளாயிரு ந்தன. எகிப்துதேசத்தார் தோன்றினதுமுதலா க அதில் இப்படி ஒருபொழுதுமிருக்கவில்லை.

உரு. எகிப்து தேசமெங்கும் வெளியிலிரு ந்த மனிதரையும், மிருகங்களையுங் கல்மழை அழித்தது. அந்தக் கல்மழை வயல்வெளியிலு ள்ள பயிர்வகைகள்யாவையும் அழித்தது. வெ ளியிலுள்ள மரங்கள் யாவையும் முறித்தது.

உகூ. இஸ்ரவேல் சந்ததியாரிருந்த கோஷே ன் நாட்டிலே மாத்திரங் கல்மழையில்லை.

உஎ. பார்வோன் மோசேயையும், ஆரோ னையும் வர அழைத்து, நான் இப்பொழுது, பாவஞ்செய்தேன். யெகோவா நீதியுள்ளவர். நானும் என் சனங்களுந் துன்மார்க்கர்.

உஅ. போதும், தேவ இடிமுழக்கமுங் கல் மழையும் ஒழியும்படி, யெகோவாவை நோ க்கிப் பிரார்த்தனை செய்யுங்கள். நான் உங்க ளைப் போகவிடுவேன், இனி உங்களுக்குத் தடையில்லையென்று சொல்ல,

உகூ. மோசே அவனை நோக்கி, நான் நகர த்திலிருந்து புறப்பட்டவுடனே, என் கைக ளை யெகோவாவுக்கு நேரே விரிப்பேன். இ டிமுழக்கம் நின்றுபோம். கல்மழை இனிப் பெய்யாது. அதனால் பூமி யெகோவாவுடை யதென்பதை நீர்அறிந்துகொள்வீர்.

௩௰. ஆகிலும் நீரும், உம்முடைய பணிவிடைக்காரரும், தேவனாகிய யேகோவாவுக்கு அப்பொழுதும் பயப்படமாட்டீர்களென்று அறிவேனென்றான்.

௩௧. அக்காலத்தில் வாற்கோதுமை கதிர் விட்டும், சணல் பூத்துப் போகுட்டாயுமிருந்தபடியால்,

௩௨. சணலும் வாற்கோதுமைப் பயிரும் அழிக்கப்பட்டன. கோதுமையுங் கம்பும் முளையாதிருந்ததால் அவைகள் அழிக்கப்படவில்லை.

௩௩. மோசே பார்வோனை விட்டு நகரத்திலிருந்து புறப்பட்டுத் தன் கைகளை யேகோவாவுக்கு நேரேவிரிக்க, இடிமுழக்கமுங் கல்மழையும் நின்றன. மழையும் பூமியிலே பெய்யாமற் போயிற்று.

௩௪. இப்படி மழையுங் கல்மழையும் இடிமுழக்கமும் நின்று போனதைப் பார்வோன் கண்டபொழுது, அவனும் அவன் பணிவிடைக்காரரும் பின்னும் பாவஞ்செய்து, தங்கள் இருதயத்தைக் கடினப்படுத்தினார்கள்.

௩௫. யேகோவா மோசேயைக் கொண்டு சொல்லியபடி, பார்வோனுடைய இருதயங் கடினமாக்கப்பட்டது. அவன் இஸ்ரவேல் சந்ததியாரைப் போகவிடவில்லை.

# ய. அதிகாரம்.

க. மோசே விட்டில்களைக் குறித்து எச்சரித்தல்: எ. பார்வோனுடைய பணிவிடைக்காரர் அவனுக்குப் புத்திசொல்லல் யஉ. விட்டில்கள் தோன்றுதல்: யசு. பார்வோன் மோசேயை வேண்டிக்கொள்ளல்: உக. அந்தகாரமுடல்: உச. பார்வோன் மோசேயுடன் கடைசியாய்ச் சம்பாஷித்தல்.

க. யெகோவா மோசேயை நோக்கி, பார்வோனுடைய சமுகத்தில் இந்த அடையாளங்களை நான் காட்டும்படிக்கும்; நானே யெகோவாவென்பதை, நீங்களும் அறிந்துகொள்ளும்படிக்கும்,

உ. எகிப்திலே நான் நடப்பித்தவைகளையும், அவர்கள் மத்தியிலே நான் செய்த அற்புதங்களையும், நீ உன் புத்திர பௌத்திரருடைய செவியில் ஏற விவரித்துச் சொல்லும்படிக்கும்; அவனுடைய இருதயத்தையும், அவன் பணிவிடைக்காரருடைய இருதயத்தையுங் கடினப்படுத்தினேன்; ஆனாலும் அவனிடத்திற் போவென்றார்.

ங. மோசேயும் ஆரோனும் பார்வோனிடத்திற் சேன்று, அவனை நோக்கி, என் சமுகத்தில் உன்னை நீ தாழ்த்த எதுவரைக்கும் மறு

ப்பாய்! எனக்காராதனை செய்ய என் சனங்களை அனுப்பிவிடு.

௪. என் சனங்களை அனுப்பிவிடாமல், மறுப்பாயாகில், நான் நாளை உன் எல்லையில் விட்டிலை வரப்பண்ணுவேன்.

௫. உன் பிதாக்களும், உன் பிதாக்களுடைய பிதாக்களும், பூமியின் தோற்றமுதல் இந்நாள்வரைக்கும், அப்படிப்பட்டவைகளைக் கண்டிருக்க மாட்டார்கள்.

௬. பூமியைக் காணக்கூடாதபடிக்கு அவைகள் அதின் முகத்தை மூடி, கல்மழைக்குத் தப்பி, உங்களிடத்திலே மிஞ்சியிருந்தவைகளைப் பட்சிப்பதுமன்றி, வெளியிலே தளிர்க்கும் உங்கள் சகல விருட்சங்களையுந் தின்றுவிடும். உன் வீடுகளும், உன் பணிவிடைக்காரருடைய வீடுகளும், எகிப்தியருடைய வீடுகள் யாவும், அவைகளால் நிறையுமென்று, எபிரேயரின் தேவனாகிய யேகோவா சொன்னாரென்பதாகச் சொல்லி, அவன் திரும்பிப் பார்வோனை விட்டுப் புறப்பட்டான்.

௭. பார்வோனுடைய பணிவிடைக்காரர் அவனை நோக்கி, எதுவரைக்கும் இந்த மனுஷன் நமக்கொரு கண்ணியாயிருப்பான்? தங்கள் தேவனாகிய யேகோவாவுக்கு ஆராதனை செய்ய அந்த மனிதரை அனுப்பிவிடும். எகி

ப்து அழிந்துபோயிற்றென்பதை நீர் இன்னு
ம் அறியவில்லையா என்றார்கள்.

அ. பின்பு மோசேயும் ஆரோனும் பார்
வோனிடத்திற்குத் திரும்ப அழைக்கப்பட்
டார்கள். அப்பொழுது அவன் அவர்களை நோ
க்கி, நீங்கள் உங்கள் தேவனாகிய யெகோவா
வுக்கு ஆராதனைசெய்யப் போங்கள். ஆரார்
போகிறவர்களென்று கேட்க;

௯. மோசே, யெகோவாவுக்கு உற்சவங்
கொண்டாடவேண்டியிருப்பதினால், நாங்க
ள் எங்கள் ஆடுமாடுகளைச் சேர்த்துக்கொண்டு
எங்கள் இளைஞரோடும், முதியோரோடும், எ
ங்கள் புத்திரர்களோடும், புத்திரிகளோடும்,
போகவேண்டுமென்று சொல்ல;

ய. அவன் அவர்களுடனே, எச்சரிக்கை
யாயிருங்கள். உங்களுக்குத் தீங்கு நேரிடும்.
நான் உங்களையும், உங்கள் குழந்தைகளையும்
எப்படி விடுவேனோ, அப்படியே யெகோவா
வும், உங்களோடிருப்பாராக. அப்படியோ
அல்ல.

யக. புருஷராகிய நீங்களே போய், யெகோ
வாவுக்காராதனைசெய்யுங்கள். இதையே நீ
ங்கள் விரும்பிக் கேட்டீர்களென்று சொன்
னான். அவர்கள் பார்வோனுடைய சமுகத்
தில் நின்றுந் துரத்திவிடப்பட்டார்கள்.

௰உ. யெகோவா மோசேயை நோக்கி, விட்டில்கள் எகிப்துதேசத்தின் மேல் வந்து அத்தேசத்திலே கல்மழைக்கு அழியாதிருக்கிற பயிர்வகைகள் யாவையும் பட்சிக்கும்படி, எகிப்துதேசத்தின்மேல் உன்கையை ஓங்கேன்றூர்.

௰௩. மோசே எகிப்துதேசத்தின்மேலே தன் கோலை ஓங்கினுன். பின்பு யெகோவா அன்று பகல் முழுவதும், அன்றிராமுழுவதுங் கீழ்க்காற்று அத்தேசத்தின் மேல் வீசப்பண்ணினுர். விடியற்காலத்தில் கீழ்க்காற்று விட்டில்களைக் கொண்டுவந்தது.

௰ச. விட்டில்கள் எகிப்துதேசம் முழுவதும் பரந்து எகிப்தின் எல்லைகளெங்கும் நெருங்கின. இத்தனை கொடுமையாய் விட்டில்கள் இதற்கு முன்னுமில்லைப் பின்னுமில்லை.

௰ரு. தேசம் இருளடையத்தக்கதாய் அவைகள் பூமியின் முகம் முழுவதையும் மூடி, கல்மழையினுல் அழியாதிருந்த நிலப்பயிர்வகைகள் யாவையும், மரங்களின் கனிகள் யாவையும் பட்சித்தன. எகிப்து தேசமெங்குமுள்ள மரங்களிலும், வயல்வெளியிலுள்ள பயிர்வகைகளிலும், பசுமையானதொன்றும் மிஞ்சியிருக்கவில்லை.

௰௬. பார்வோன் விரைவாய், மோசேயை

யும் ஆரோனையும் அழைப்பித்து, நான் உங்கள் தேவனாகிய யேகோவாவுக்கும், உங்களுக்கும் விரோதமாய்ப் பாவஞ்செய்தேன்.

யஎ. இந்த ஒருமுறை மாத்திரம் என் பாவத்தை மன்னித்து, உங்கள் தேவனாகிய யேகோவா, இந்த மரணத்தை மாத்திரம் எனக்கு விலக்கும்படி; அவரை நோக்கிப் பிரார்த்திக்கும் பொருட்டு, உங்களை இரந்து நிற்கிறேன் என்றான்.

யஅ. அவன் பார்வோனை விட்டுப் புறப்பட்டு யேகோவாவைப் பிரார்த்தித்தான்.

யகூ. அப்பொழுது யேகோவா மிகவும் உரத்த மேல்காற்று வீசும்படி செய்ய, அது விட்டில்களைச் செங்கடலில் வீசிற்று. எகிப்தின் எல்லையெங்கும் ஒரு விட்டிலாகிலும் மீந்திருக்கவில்லை.

உய. யேகோவா பார்வோனின் இருதயத்தைக் கடினப்படுத்தினார்; அவன் இஸ்ரவேல் சந்ததியாரை விடவில்லை.

உக. அப்பொழுது யேகோவா மோசேயை நோக்கி, வானத்துக்கு நேரே உன் கையை ஓங்கு. எகிப்துதேசத்தில் இருளுண்டாகும். அந்த இருள் பரிசிக்கத்தக்கதாயிருக்குமென்றார்.

உஉ. மோசே வானத்துக்கு நேரே தன்

கையை ஓங்கினுன். எகிப்து தேசமெங்கும் மூன்றுநாளளவுங் கனத்த இருளுண்டாயிருந்தது.

உ௩. மூன்றுநாளளவும் ஒருவரையொருவர் காணவும் ஒருவன் தன்னிடத்தை விட்டு எழும்பவுமில்லை. இஸ்ரவேல் சந்ததியார் சகலருக்கும், அவரவர் வாசஸ்தலங்களில் வெளிச்சம் இருந்தது.

உ௪. அப்பொழுது பார்வோன் மோசேயை அழைப்பித்து, நீங்கள்போய் யெகோவாவுக்காராதனை செய்யுங்கள். உங்கள் குழந்தைகளும் உங்களுடனே போகலாம். உங்கள் ஆடுமாடுகள் மாத்திரம் நிறுத்தப்படவேண்டுமென்று சொல்ல,

உ௫. மோசே, எங்கள்தேவனுகிய யெகோவாவுக்குப் பலிகளையும் தகனபலிகளையுமிடும்படி, நீர் அவைகளையும் எங்கள் கையிலே தரவேண்டும்.

உ௬. நாங்கள் போய்ச் சேருமிடத்தில் இன்னதினல் யெகோவாவுக்குஆராதனைசெய்யவேண்டுமென்பதை அறியாததினுல், எங்கள் மிருகசெந்துக்களும் எங்களுடனே வரவேண்டும். எங்கள் தேவனுகிய யெகோவாவுக்கு ஆராதனைசெய்யும்படி, அவைகளில் எடுக்க

வேண்டும். ஒரு குளம்பையும் பின்வைக்க லாகாதென்றான்.

உஎ. யெகோவா பார்வோனின் இருதயத்தைக் கடினப்படுத்தினர். அவன் அவர்களைப் போகவிடவில்லை.

உஅ. பார்வோன் இவனைநோக்கி என்னை விட்டகன்றுபோ. நீ இனி என்முகத்தைக்காணுதபடி எச்சரிக்கையாயிரு. நீ திரும்ப என் முகத்தைக் காணுந்தினத்திற் சாவாயென்று சொல்ல,

உகூ. மோசே, நன்ருய்ச்சொன்னீர். இனியொருபொழுதும், உம்முடைய முகத்தைக் காணமாட்டேனென்றான்.

## யக. அதிகாரம்.

*க. இஸ்ரவேலர் எகிப்தியரிடத்தில் திரவியங் கேட்டு வாங்கும்படி தேவன் கட்டளையிடல்: ச. தலைப்பிள்ளைகளைக் கொல்வேனென்று முன்னறிவித்தல்.*

க. யெகோவா மோசேயைநோக்கி, இன்னுமொரு வாதையைப் பார்வோன்மேலும், எகிப்தின் மேலும்வரப்பண்ணுவேன். அதற்குப்பின் அவனுங்களை இவ்விடத்தினின்றும் போகவிடுவான். போகவிடும்பொழுது இவ்விடத்தினின்று உங்களை முழுமையுந் துரத்திவிடுவான்.

௨. ஒவ்வொருவனும் அவனவன் அயலானிடத்திலும், ஒவ்வொருத்தியும் அவளவள் அயலாளிடத்திலும், வெள்ளி உடைமைகளையும், பொன்னுடைமைகளையுங் கேட்கும்படி சனங்களுக்குச் சொல்லென்றார்.

௩. யெகோவா, சனங்கள்மேல் எகிப்தியருக்குத் தயையுண்டாகும்படி செய்தார். மேலும் மோசே என்பவன் எகிப்துதேசத்திலே பார்வோனுடைய பணிவிடைக்காரரின் பார்வைக்கும், சனங்களின் பார்வைக்கும் மிகவும், பெரியவனாய்க்காணப்பட்டான்.

௪. மோசே, யெகோவாவானவர், அத்தராத்திரியில் நான் எகிப்தின்மத்தியில் புறப்பட்டுப்போக,

௫. சிங்காசனத்தில் வீற்றிருக்கும் பார்வோன்தலைப்பிள்ளைமுதல், திரிகையின் அருகிலிருக்கும் பணிவிடைக்காரியின் தலைப்பிள்ளைவரைக்கும், எகிப்துதேசத்திலுள்ள முதற்பேறனைத்தும், மிருகங்களில் தலையீற்றனைத்தும், இறந்துபோமென்று சொல்லியிருக்கிறரேன்றதுமன்றி

௬. எகிப்து தேசமெங்கும் முன்னும் பின்னும் ஒருகாலத்திலுமில்லாத பெரிய புலம்பலுண்டாகும்.

௭. இஸ்ரவேல்சந்ததியார் எவர்களுக்குள்

ளும் மனிதருக்காகிலும், மிருகங்களுக்காகி லும், விரோதமாக ஒரு நாயுந் தன் நாவை அ சைக்காது. அதினால் எகிப்தியருக்கும், இஸ்ர வேலருக்கும், யெகோவா வேற்றுமை உண் டுபண்ணினாரென்பதை, நீங்கள் அறிந்துகொ ள்வீர்கள்.

அ. அப்பொழுது உம்முடையபணிவிடை க்காரராகிய, இவர்களெல்லாரும் என்னிடத் தில்வந்து பணிந்து, நீர் உம்முடைய அடியா ராகிய சனங்கள் யாவரையுங்கொண்டு புறப் படுமென்று சொல்லுவார்கள். அதன்பின் பு றப்படுவேனென்றுஞ் சொல்லி உக்கிரகோப த்துடனே பார்வோனை விட்டுப் புறப்பட் டான்.

௯. யெகோவா மோசேயை நோக்கி, எகிப் துதேசத்தில் என்னால் மிகுதியாய் அற்புதங்க ள் நடத்தப்படும்படி, பார்வோன் உங்களுக் குச் செவிகொடுக்கமாட்டானென்று சொல் லியிருந்தார்.

௰. மோசேயும், ஆரோனும், இந்த அற்புத ங்கள் யாவையும் பார்வோன் சமுகத்திற் செ ய்தார்கள். யெகோவா பார்வோனின் இருத யத்தைக்கடினப்படுத்தினார். அதினால் அவன் தன் தேசத்தினின்றும் இஸ்ரவேல் சந்ததியா ரைப் போகவிடவில்லை.

## ௰௨. அதிகாரம்.

௧. வருஷத்தின் முதல்மாத நியமம்: ௩. பஷகா உற்சவம் ஏற்படுத்தல்: ௰௧. அதின் முறையுரைத்தல்: ௰௮. புளிப்பில்லாத அப்பம் புசித்தல்: ௨௧. முதியோருக்கு மோசே கட்டளையிடல்: ௨௯. எகிப்தியரின் தலைப் பிள்ளைகளையும் மிருகங்களின் தலையீற்றுக்களையுங் கொல்லல்: ௩௧. இஸ்ரவேலர் புறப்படுதல்: ௩௭. அவர்களின் தொகை: ௪௰. அவர்கள் எகிப்தில் வசித்த காலவளவு: ௪௩. பஷகா உற்சவத்தின் போசன விதி.

௧. யெகோவா எகிப்துதேசத்தில் மோசேயையும் ஆரோனையும் நோக்கி,

௨. இந்த மாதம் உங்களுக்குப் பிரதான மாதம்; வருஷத்தின் முதல் மாதம்.

௩. நீங்கள் இஸ்ரவேல் சபையார் யாவரையும் நோக்கி, இந்தமாதம் பத்தாந்தினத்தில் வீட்டுத்தலைவர், வீடொன்றுக்கு ஆட்டுக்குட்டி யொன்றாக, ஒவ்வொருவரும், ஒவ்வொரு ஆட்டுக்குட்டியைத் தெரிந்தெடுத்துக்கொள்ளக் கடவர்.

௪. ஒரு வீட்டில் ஆட்டுக்குட்டியைப் புசிப்பதற்கு ஆள் குறையுமிடத்தில், அவனும், அவன் அயல்வீட்டுக்காரனும், ஒன்றை எடுத்துக்கொள்ளக்கடவர்கள். ஆள்களின் தொகைக்கும், அவரவர் போசனத்தினளவுக்குத்

தக்கதாய், ஆட்டுக்குட்டியின் தொகையைப் பார்த்துக்கொள்ளவேண்டும்.

ரு. அந்த ஆட்டுக்குட்டி, குற்றமற்ற ஒருவருஷத்துக் கடாவாயிருக்கவேண்டும். செம்மறியாடுகளிலாவது, வெள்ளாடுகளிலாவது, தெரிந்துகொள்ளலாம்.

சா. அதை இந்தமாதம் பதினாலாந் தினம் வரைக்குங் கட்டிவைத்து, இஸ்ரவேலரிலுள்ள ஒவ்வொரு சபையாருஞ் சாயங்காலத்தில் அதைச் சேதித்து,

எ. அதின் இரத்தத்தில் எடுத்து, தாங்கள் புசிக்கும் வீட்டு வாசல் நிலைக்காலிரண்டிலும், மேற்படியிலுந் தெளிக்கக் கடவர்கள்.

அ. அவ்விரவில் அதன் மாமிசத்தை நெருப்பில் வாட்டி, புளிப்பில்லாத அப்பத்தோடும், கசப்பான இலைக்கறியோடும், அதைப் புசிக்கக் கடவர்கள்.

கூ. பச்சையாயும், சலத்தில் அவிக்கப்பட்டதாயுமல்ல, அதின் தலையையும், தொடைகளையும் அதிலுள்ள மற்றவைகளையும் நெருப்பில் வாட்டிப் புசிப்பீர்களாக.

ய. அதிலொன்றையும் விடியற்காலமளவும், சேஷமாக வைக்கப்படாது. விடியற்காலத்தில் சேஷமாயிருந்தால், அக்கினியில் தகிக்க வேண்டும்.

௰௧. அன்றியும், நீங்கள் உங்கள் இடைக் கச்சைக் கட்டிக்கொண்டும், உங்கள் செருப்புக்களைத் தொடுத்துக்கொண்டும், உங்கள் கைகளிலே கோல்களைப் பிடித்துக்கொண்டுமிருந்து, அதைப் புசிக்கக் கடவீர்கள். தீவிரமாய் அதைப் புசிக்கவேண்டும். இது யெகோவாவினது பஷ்கா.

௰௨. அவ்விரவிலே நான் எகிப்து தேசமெங்குஞ் சென்று, அதிலுள்ள மனிதரின் தலைப்பிள்ளைகளையும், மிருகங்களின் தலையீற்றுக்களையும் வதைத்து எகிப்தின் பிரபுகள் சகலரையுந் தண்டிப்பேன். நானே யெகோவா.

௰௩. நீங்கள் இருக்கிற வீடுகளில் அந்த இரத்தம் உங்களுக்கு ஒரு அடையாளம். நான் அந்த இரத்தத்தைக் கண்டு, உங்களைக்கடந்து போவேன். எகிப்துதேசத்தை அடிக்கும்பொழுது உங்கள்மேல் சங்காரவாதை வராது.

௰௪. இந்தத் தினம் உங்களுக்கு ஞாபகக் குறியாகும். இதில் உங்கள் தலைமுறைதோறும், யெகோவாவுக்கு உற்சவமொன்றை ஆசரிப்பீர்களாக. நித்திய நியமமாக அதை ஆசரிப்பீர்களாக.

௰௫. புளிப்பில்லாத அப்பத்தை, எழுநாளளவும், புசிக்கக் கடவீர்கள். முதலாம் நாளிலும், புளித்தமாவை உங்கள் வீடுகளில் நின்

றும் நீக்கவேண்டும். முதல் நாள் தொடங்கி எழாம் நாள் வரைக்கும் புளித்த அப்பம் புசிக்கும் எவனும் இஸ்ரவேலரிலிருந்து சேதிக்கப்டுவான்.

யசு. அன்றியும் முதலாம் நாளில் திருச்சபை கூடவேண்டும். எழாம் நாளிலுந் திருச்சபை கூடவேண்டும். அவைகளில் எவரும் போசனத்துக்கேற்றதைச் செய்வதன்றி, வேறென்றையுஞ் செய்யக்கூடாது.

யஎ. இந்நாளிலேயே நான் உங்கள் சேனைகளை எகிப்து தேசத்தினின்றும் புறப்படச்செய்தபடியால், புளிப்பில்லாத அப்பத்தைப் புசிக்கும் உற்சவத்தை ஆசரிக்கக் கடவீர்கள். உங்கள் தலைமுறைதோறும் நித்திய நியமமாக இந்த நாளை ஆசரிப்பீர்களாக.

யஅ. முதலாம் மாதம், பதினாலாந் தினத்தில், சாயங்காலந்தொடங்கி, அந்த மாதம் இருபத்தோராந்தினத்தின் சாயங்காலம்வரைக்கும், புளிப்பில்லாத அப்பத்தைப் புசிக்கக் கடவீர்கள்.

யகூ. எழுநாளளவும் உங்கள் வீடுகளிற் புளித்தமாக் காணப்படலாகாது. புளித்த எதையும் புசிக்குமெவனும், பரதேசியானாலும், சுதேசியானாலும், இஸ்ரவேல்சபையிலிருந்து சேதிக்கப்படுவான்.

௨௰. புளித்த யாதொன்றையும் நீங்கள் புசிக்கப்படாது. உங்கள் சகல வாசஸ்தலங்களிலும் புளிப்பில்லாத அப்பத்தைப் புசிக்கக்கடவீர்களென்பதாகச் சொல்லுங்களென்று சொல்லியிருந்தார்.

௨௧. மோசே இஸ்ரவேலரின் முதியோர் யாவரையும் அழைப்பித்து, உங்கள் குடும்பப்படி, ஆட்டுக்குட்டிகளைத் தெரிந்தெடுத்துக்கொண்டு, பஷ்காவைச் சேதித்து,

௨௨. ஈசோப்புக் கிளைகளின் கட்டை வாங்கிக் கிண்ணத்திலுள்ள இரத்தத்தில் தோய்த்துக் கிண்ணத்திலுள்ள இரத்தத்தை வாசல் நிலையின்மேல் விட்டத்திலும், நிலைக்காலிரண்டிலுந் தெளியுங்கள். விடியற்காலம்வரைக்கும் உங்களில் ஒருவரும் வீட்டுவாசலை விட்டுப் புறப்படவேண்டாம்.

௨௩. யேகோவா சென்று சென்று எகிப்தியரை அடிப்பார். வாசல் நிலைக்கால்இரண்டிலும், நிலையின்மேல்விட்டத்திலும்,இரத்தத்தைக்காணுமிடத்தில், யேகோவா, வதைப்பவர், அடிக்கும்படி உங்கள்வீடுகளில் வரவிடாமல், வாசற்படியைவிட்டுக் கடந்துபோவார்.

௨௪. உங்களுக்கும், உங்கள்சந்ததியாருக்கும், நித்தியநியமமாக நீங்கள் இதையே ஆசரிக்கக்கடவீர்கள்.

௨௫. யேகோவா, தாம் வாக்குத்தத்தஞ்செய்தபடி, உங்களுக்கு அளிக்குந் தேசத்திலே நீங்கள் போய்ச் சேர்ந்து, இந்த ஆராதனையைச் செய்துவருவீர்களாக.

௨௬. அக்காலத்தில் இந்த ஆராதனை உங்களுக்கேதென்று, உங்கள் பிள்ளைகள் உங்களிடத்திற் கேட்டால்,

௨௭. யேகோவா எகிப்தியரை அடிக்கையில், எகிப்திலிருந்து இஸ்ரவேல் சந்ததியாராகிய நம்முடைய வீடுகளைக் கடந்து நம்மை இரட்சித்தார். இது யேகோவாவினது பஷ்காவென்னும் பலியென்று, நீங்கள் சொல்லவேண்டுமென்பதாகச் சொன்னான். அப்பொழுது சனங்கள் தலைவணக்கித் தொழுதுகொண்டார்கள்.

௨௮. பின்பு இஸ்ரவேல் சந்ததியார் போய், யேகோவா மோசேக்கும், ஆரோனுக்குங் கட்டளையிட்டபடி செய்தார்கள். அப்படியே செய்தார்கள்.

௨௯. அர்த்தராத்திரியில் யேகோவா சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கும் பார்வோனின் தலைப்பிள்ளைமுதல், சிறைச்சாலையிலிருக்குஞ் சிறைப்பட்டோரின் தலைப்பிள்ளைவரைக்கும், எகிப்துதேசத்திலிருந்த முதற்பேறனைத்தையும், மிருகங்களின் தலையீற்றனைத்தையும் அடித்தார்.

௩௰. பார்வோனும், அவன் சகல பணிவிடைக்காரரும், எகிப்தியர் யாவரும் இரவிலே எழுந்திருந்தார்கள். பிரேதமில்லாத வீடொன்றுமில்லை. அதினால் எகிப்திலே பெரிய புலம்பலுண்டாயிற்று.

௩௧. இரவிலே அவன் மோசேயையும், ஆரோனையும் அழைப்பித்து, நீங்களும், இஸ்ரவேல்சந்ததியாரும் எழுந்து, என் சனங்களை விட்டுப்புறப்பட்டுப்போய், நீங்கள் சொன்னபடி, யெகோவாவுக்காராதனைசெய்யுங்கள்.

௩௨. உங்கள் ஆடுமாடுகளையும், நீங்கள் சொன்னபடி, ஒட்டிக்கொண்டு போங்கள். என்னையும் ஆசீர்வதியுங்களென்றான்.

௩௩. எகிப்தியர், நாங்கள் எல்லாரும் இறந்துபோனோமேயென்று சொல்லித் தீவிரமாய் அந்தச் சனங்களைத் தேசத்திலிருந்து அனுப்பிவிட, அவர்களை மிகவுந் துரிதப்படுத்தினார்கள்.

௩௪. சனங்கள் தாங்கள் பிசைந்தமாப் புளிக்குமுன் பாத்திரத்துடனே தங்கள் புடைவைகளிற் கட்டித் தோளிற் போட்டுக்கொண்டுபோனார்கள்.

௩௫. மோசே சொல்லியிருந்தபடி, இஸ்ரவேல்சனங்கள் எகிப்தியரிடத்தில் வெள்ளியுடைமைகளையும், பொன்னுடைமைகளையும், வஸ்திரங்களையுங் கேட்டிருந்தார்கள்.

௩௬. யெகோவாவும், சனங்கள்மேல் எகிப்தியருக்குத் தயையுண்டாகும்படி செய்ததினுல், அவர்கள் இவர்களுக்குக் கொடுத்தார்கள். இப்படி எகிப்தியரைக் கொள்ளையிட்டார்கள்.

௩௭. குழந்தைகளைத் தவிர, இஸ்ரவேல்சந்ததியார் ஆறிலட்சம் புருஷர்கள் ராமேசேசை விட்டுப் புறப்பட்டு, கால்நடையாய்ச் சுக்கோத்திற் சேர்ந்தார்கள்.

௩௮. அவர்களுடனே அந்நிய சனங்கள் அநேகருமன்றி மிகுதியான ஆடு மாடு முதலான மிருகங்களும் போயின.

௩௯. எகிப்திலிருந்து அவர்கள் கொண்டுவந்த பிசைந்தமாப் புளியாதிருந்தபடியால், அவர்கள் புளிப்பில்லாத அப்பம் சுட்டார்கள். அவர்கள் எகிப்தினின்றும் தரிக்கவிடப்படாமல் புறப்பட்டதினுல், தங்கள் வழிக்கு வேறேதும், ஆகாரம் ஆயத்தம்பண்ணிக்கொள்ளவில்லை.

௪௰. இஸ்ரவேல் சந்ததியார் எகிப்திலே நானூற்றுமுப்பது வருஷம் வாசம்பண்ணினுர்கள்.

௪௧. நானூற்றுமுப்பதாம் வருஷாந்தத்தில் யெகோவாவின் சேனைகளெல்லாம், எகிப்து தேசத்தை விட்டுப் புறப்பட்டன.

௪௨. யெகோவா அவர்களை எகிப்துதேசத்தினின்றும் புறப்படச்செய்ததினால், இது அவருக்கென்று ஆசரிக்கத்தக்க இராத்திரியாயிற்று. இஸ்ரவேல் சந்ததியார் எல்லாருந் தங்கள் தலைமுறைதோறும் ஆசரிக்கவேண்டிய யெகோவாவின் இராத்திரி இதுவே.

௪௩. யெகோவா மோசேயையும், ஆரோனையும் நோக்கி, பஸ்காவின் விதிப்பிரமாணமாவது, அந்நியன் ஒருவனும் அதைப் புசிக்கப்படாது.

௪௪. பணத்துக்குக் கொண்ட எவனேவனுடைய அடிமைக்கும் நீ விருத்தசேதனம்பண்ணினபின்பு, அவன் அதைப் புசிக்கலாம்.

௪௫. எந்தப் பரதேசியும், கூலியாளும் அதைப் புசிக்கப்படாது.

௪௬. ஒரு வீட்டில் வைத்துப் புசிக்கிறதேயன்றி அந்த மாமிசத்தில் கொஞ்சமும் வீட்டினின்றும் வெளியே கொண்டுபோகப்படாது, அதில் ஒரு எலும்பையும் முறிக்கப்படாது.

௪௭. இஸ்ரவேல் சபையாரெல்லாரும் அதை ஆசரிக்கவேண்டும்.

௪௮. அந்நியன் ஒருவன் உன்னிடத்தில் தங்கி, யெகோவாவுக்குப் பஸ்காவை ஆசரிக்கவேண்டுமென்று இருந்தால் அவனும், அவன் புத்திரர் யாவரும், விருத்தசேதனம்ப

ண்ணப்படவேண்டும். பின்பு அவன் அதை ஆசரிப்பதற்குச் சமீபித்துச் சுதேசியைப்போலிருப்பான். விருத்தசேதனமில்லாத ஒருவனும் அதில் புசிக்கலாகாது.

சகூ. சுதேசிக்கும், உங்களிடத்திலே தங்கும் பரதேசிக்கும், விதிப்பிரமாணமொன்றுயிருக்கவேண்டும் என்பதே என்றார். இப்படி இஸ்ரவேல் சந்ததியாரெல்லாருஞ் செய்தார்கள்.

ருய. யேகோவா மோசேக்கும், ஆரோனுக்கும் கட்டளையிட்டபடியே செய்தார்கள்.

ருக. அத்தினமே யேகோவா இஸ்ரவேல்சந்ததியாரைச் சேனைகளாய் எகிப்துதேசத்தினின்றும் புறப்படச்செய்தார்.

## யங. அதிகாரம்.

க. முதற்பேறனைத்தையுந் தேவனுக்குப் பரிசுத்தப்படுத்தல்: ரு. எகிப்துதேசத்தினின்றும் விடுதலைபெற்றதற்கு ஓர் ஞாபகக்குறி கற்பித்தல்: யக. முதற்பேறுகளைத் தேவனுக்குப் பரிசுத்தப்படுத்தின விவரம்: யஎ. எகிப்திலிருந்து புறப்படுகையில் யோசேப்பின் எலும்பை எடுத்தல்: உய. பகலில் மேகஸ்தம்பத்தைக்கொண்டும் இரவில் அக்கினி ஸ்தம்பத்தைக்கொண்டும் தேவன் அவர்களுக்கு வழிகாட்டல்.

க. யேகோவா மோசேயை நோக்கி,

௨. இஸ்ரவேல்சந்ததியாருக்குள்ளும், மிருகங்களுக்குள்ளும், கருப்பத்தில் தோன்றும் முதற் பேறனைத்தையும் எனக்குப் பிரதிஷ்டைபண்ணவேண்டும். அவைகள் என்னுடையவைகளேன்றார்.

௩. மோசே சனங்களை நோக்கி, நீங்கள் அடிமைத் தனத்திலிருந்த வாசஸ்தானமாகிய எகிப்தினின்றும் யெகோவா உங்களைக் கை வல்லமையினால் புறப்படச்செய்தபடியால், அவ்விடத்தினின்றும் நீங்கிய இத்தினத்தைச் சிந்தையில் வைத்துக்கோள்ளுங்கள். புளிப்புள்ள அப்பத்தை நீங்கள் புசிக்கப்படாது.

௪. ஆபீப் மாதத்தின் இத்தினத்தில் நீங்கள் புறப்பட்டீர்கள்.

௫. பாலுந் தேனும் பெருகுகிற தேசத்தை யெகோவா உனக்குஅளிப்பேனென்றுஉன்பிதாக்களுக்கு ஆணையிட்டுக்கோடுத்ததும், கானானியர், எத்தியர், எமோரியர், ஈவியர், எபூசியரேன்பவர்களுடைய வாசஸ்தானமுமாகியிருக்கிறதேசத்திற்கு உன்னை வரப்பண்ணுங் காலத்தில், நீ அந்த மாதத்தில் இந்த ஆராதனையைச் செய்வாயாக.

௬. புளிப்பில்லாத அப்பத்தை ஏழு நாளளவும் புசிக்கவேண்டும். ஏழாம் நாளிலே யெகோவாவுக்கேன்று ஒரு உற்சவமுண்டாகும்.

எ. அவ்வேழுநாளும் புளிப்பில்லாத அப்பத்தைப் புசிக்கவேண்டும். புளிப்புள்ள அப்பம் உன்னிடத்திற் காணப்படலாகாது. உன்னெல்லையெங்கும் புளித்தமாவும் உன்னிடத்திற் காணப்படலாகாது.

அ. அந்நாளில் நீ உன் புத்திரனை நோக்கி, நான் எகிப்தினின்றும் புறப்படுகையில், யெகோவா எனக்குச் செய்திருக்கிற காரியத்தினிமித்தம், இப்படி நடப்பிக்கப்படுகின்றதென்று சொல்லு.

௯. யெகோவா அருளிய விதிப்பிரமாணம் உன் வாயிலிருக்கும்பொருட்டு, இது உன் கையிலே ஒரு அடையாளமாகவும், உன் கண்களுக்கிடையில் ஒரு ஞாபகக்குறியாகவும் இருக்கக்கடவது. கைவல்லபத்தினால், யெகோவா உன்னை எகிப்தில் நின்றும் புறப்படச்செய்தாரே.

௰. ஆகையால் நீ வருஷந்தோறும் காலக்கிரமப்படி இந்நியமத்தை ஆசரித்துவரவேண்டும்.

௰௧. யெகோவா தாம் உனக்கும், உன் பிதாக்களுக்கும் ஆணையிட்டபிரகாரம், உன்னைக் கானானியருடைய தேசத்தில் சேரப்பண்ணி அதை உனக்கு அளித்தபின்பு,

௰௨. கருப்பத்தில் தோன்றும் முதற் பேற

னத்தையும், உன்னிடத்திலிருக்கிற மிருகங்களின் தலையீற்றனத்தையும் யேகோவாவுக்குப் பிரதிஷ்டைபண்ணு. அவைகளிலுள்ள ஆணெல்லாம் யேகோவாவினுடையவைகள்.

௰௩. கழுதையின் தலையீற்றுக்கள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு ஆட்டுக்குட்டியைக் கொண்டு மீட்டுக்கொள்ளவேண்டும். மீட்காவிட்டால், அதின் கழுத்தை முறித்துவிடவேண்டும். மானிடனாகிய உன் பிள்ளைகளுக்குள் முதற்பேறனைத்தையும் மீட்டுக்கொள்ளவேண்டும்.

௰௪. பிற்காலத்தில் உன் புத்திரன், இதென்னவென்று உன்னிடத்திற் கேட்டால், நாங்கள் அடிமைத்தனத்திலிருந்த வாசஸ்தானமாகிய எகிப்தினின்றும் எங்களை யேகோவா கைவல்லபத்தினாலே புறப்படச்செய்தார்.

௰௫. எங்களை அனுப்பிவிடுவதற்குப் பார்வோன் உடன்படாததினால், யேகோவா எகிப்துதேசத்தில் மனிதருடைய சேஷ்டபுத்திரர் முதல், மிருகங்களின் தலையீற்றுக்கள் வரைக்கும், முதற்பேறுகள் யாவையுஞ் சங்கரித்தார். ஆதலால் கருப்பத்தில் தோன்றும் முதற்பேறான ஆணெல்லாம் நான் யேகோவாவுக்குப் பலியிடுகிறேன்; என் பிள்ளைகளி

ல் முதற்பேறனைத்தையும் மீட்டுக்கொள்ளுகிறேன்.

௰௬. யேகோவா கைவல்லபத்தினால் எங்களை எகிப்தினின்றும் புறப்படச்செய்ததற்கு இது உன் கையில் அடையாளமாகவும், உன் கண்களுக்கிடையிலே நெற்றிக்குறியாகவுமிருப்பதாகவென்று, அவனிடத்திற் சொல்லவேண்டுமென்றான்.

௰௭. பார்வோன், சனங்களை அனுப்பிவிட்டபின், சனங்கள் யுத்தத்தில் எதிர்த்தால், சஞ்சலப்பட்டு எகிப்துக்குத் திரும்பவும் கூடுமென்று தேவன் பெலிஸ்தியர் தேசஞ் சமீபமாயிருந்தும் அதின் வழியாலே தேவன் அவர்களை நடத்தாமல், செங்கடலோரத்தில் வனத்தின்வழியாய்ச் சுற்றிநடக்கச்செய்தார்.

௰௮. இஸ்ரவேல்சந்ததியார் எகிப்துதேசத்தினின்றும் அணியணியாய்ப் புறப்பட்டுப் போனார்கள்.

௰௯. யோசேப்பு இஸ்ரவேல்சந்ததியாரை நோக்கி, தேவன் உங்களைக் கடாட்சிப்பார். அப்பொழுது என் எலும்புகளை இங்கிருந்து கொண்டுபோங்களென்று சொல்லி, அதற்கு அவர்களைக் கொண்டு ஆணையிடுவித்திருந்தபடியால், மோசே யோசேப்பினுடைய எலும்புகளை எடுத்துக்கொண்டுபோனான்.

உ௰. அவர்கள் சுக்கோத்தினின்றும் பிரயாணப்பட்டு, வனத்தின் எல்லையிலுள்ள ஏதாமிலே பாளயமிறங்கினார்கள்.

உக. யேகோவா அவர்களை இரவும் பகலும் நடத்தும்பொருட்டு, பகலில் அவர்களை வழிநடத்த மேகத்தூணிலும் இரவில் அவர்களுக்கு வெளிச்சங்காட்ட அக்கினித்தூணிலுமிருந்து அவர்களுக்கு முன்சென்றார்.

உஉ. அவர், பகலில் மேகத்தூணையும், இரவில் அக்கினித்தூணையும், சனங்களுக்கு முன்னின்று அகற்றவில்லை.

## ௰சு. அதிகாரம்.

க. தேவன் இஸ்ரவேலருக்கு வழிகாட்டல்: ரு. பார்வோன் அவர்களைத் தொடர்தல்: ௰. இஸ்ரவேலர் புலம்பல்: ௰௩. மோசே அவர்களைத் தேற்றல்: ௰ரு. தேவன் மோசேக்குப் போதித்தல்: ௰௯. தூதனும் மேகஸ்தம்பமும் இஸ்ரவேலருக்குப் பின்னாதல்: உக. மோசே சமுத்திரத்தைப் பிரித்தல்: உ௩. முன்னே போன இஸ்ரவேலரை எகிப்தியர் தொடர்தல்: உ௯. எகிப்தியர் சமுத்திரத்தில் அமிழ்ந்தி அழிதல்.

க. யேகோவா மோசேயை நோக்கி,

உ. நீங்கள் திரும்பி மிக்தோலுக்குஞ் சமுத்திரத்திற்கும் இடையிலே பாகால் சிபோனுக்கெதிரேயிருக்கிற பீயகீரோத்துக்கு முன்பா

க இறங்கவும், அதற்கெதிராகச் சமுத்திரக்க ரையிலே பாளயமிறங்கவும் வேண்டுமென்று இஸ்ரவேல் சந்ததியாருக்குச் சொல்லு.

ங. பார்வோன் இஸ்ரவேலரைக் குறித்து, அவர்கள் தேசத்துக்குள்ளே அகப்பட்டிருக்கி றார்கள். வனம் அவர்களை அடைத்துக்கொ ண்டதென்று சொல்லுவான்.

ச. அப்பொழுது பார்வோன் அவர்களைத் தொடரும்படி, நான் அவன் இருதயத்தைக் கடினப்படுத்தி, நானே யெகோவா என்பதை எகிப்தியர் அறியும்பொருட்டு, பார்வோனாலு ம், அவனுடைய சமஸ்த சேனைகளினாலும், என் மகத்துவம் விளங்கும்படி செய்வேனெ ன்று சொன்னார். அவர்கள் அப்படியே செ ய்தார்கள்.

ரு. சனங்கள் ஓடிப்போய்விட்டார்களெ ன்று எகிப்தின் இராசனுக்குத் தெரிவிக்கப்ப ட; அவர்களுக்கு மாறாகப் பார்வோனும், அ வனுடைய பணிவிடைக்காரரும், மனம்பே தித்து, நமக்கூழியஞ்செய்யாமல், இஸ்ரவேல ர் போகும்படி நாம் விட்டதேதென்றார்கள்.

சூ. அவன் தன்னிரதத்தை ஆயத்தப்படுத் தி, தன் சனங்களைச் சேர்த்துக்கொண்டுபோ னன்.

எ. அவன் தெரிந்தெடுத்த அறுநூறு இரதங்

களேயன்றி, எகிப்திலுள்ள இரதங்கள் யாவும், அவைகள் எவற்றினுஞ் சாரதிகளும், வரப்பண்ணிக்கொண்டுபோனான்.

அ. யெகோவா, எகிப்தின் இராசனாகிய பார்வோனுடைய இருதயத்தைக் கடினப்படுத்தினார். அவன் இஸ்ரவேல்சந்ததியாரைப் பின்தொடர்ந்தான். இஸ்ரவேல்சந்ததியார் மிகுந்த வல்லமையுடன் புறப்பட்டுப்போனார்கள்.

௯. எகிப்தியர் பார்வோனுடைய சகல குதிரைகளோடும், இரதங்களோடும், குதிரைவீரரோடும், சேனைகளோடும், அவர்களைத் தொடர்ந்துபோய், சமுத்திரத்தின் அருகே பாகால் சிபோனுக்கெதிரேயிருக்கிற பீயகீரோத்துக்குச் சமீபமாய்ப் பாளயமிறங்கியிருக்கையில், அணுகினார்கள்.

௰. பார்வோன் சமீபித்தபொழுது இஸ்ரவேல்சந்ததியார் கண்களை ஏறிட்டுப்பார்த்து எகிப்தியர் தங்களுக்குப் பின்வருகிறதைக் கண்டு மிகவும் பயந்தார்கள். இஸ்ரவேல் சந்ததியார் யெகோவாவை நோக்கி ஓலமிட்டார்கள்.

௰௧. அன்றியும் அவர்கள், மோசேயுடனே எகிப்திலே பிரேதக்குழிகளில்லையென்றோ, வனத்தில் மரணமடைய, எங்களை அழைத்து

வந்தீர். நீர் எங்களை எகிப்தினின்றும் புறப்பட
ப்பண்ணி எங்களுக்கிப்படிச் செய்ததேன்ன?

௰௨. வனத்தில் சாவதிலும், எகிப்தியருக்கு ஊழியஞ்செய்வது எங்களுக்குநலம். நாங்கள் எகிப்தியருக்கு ஊழியஞ் செய்யவிடுமென்றிப்படி எகிப்திலே நாங்கள் உம்மிடத்திற் சொல்லவில்லையா என்றார்கள்.

௰௩. அப்பொழுது மோசே சனங்களை நோக்கி, பயப்படாதிருங்கள். இன்றைக்கு யெகோவா உங்களுக்குச் செய்யும் இரட்சிப்பை நின்று பாருங்கள். இன்றைக்கு நீங்கள் காண்கிற எகிப்தியரை இனி ஒருக்காலும் காணமாட்டீர்கள்.

௰௪. யெகோவா உங்களுக்காக யுத்தம்பண்ணுவார். நீங்கள் அமைதியாயிருங்களென்றான்.

௰௫. யெகோவா மோசேயுடனே, நீ என்னை நோக்கி ஓலமிடுகிறதேன்ன? முன்செல்லுங்களென்று இஸரவேல் சந்ததியாருக்குச் சொல்லு.

௰௬. நீ உன்கோலையோங்கி, உன்கையைச் சமுத்திரத்தின்மேல் நீட்டிச் சமுத்திரத்தைப் பிரித்துவிடு. அப்பொழுது இஸ்ரவேல் சந்ததியார் சமுத்திரத்தின்மத்தியில் உலர்ந்த தரையிலே நடந்து போவார்கள்.

௰எ. எகிப்தியர் உங்களைத் தொடரத்தக்க தாக நான் அவர்கள் இருதயங்களைக் கடினப்ப டுத்தி, பார்வோனிடத்திலும், அவன் இரதங் கள், குதிரைவீரர் முதலாகிய அவனுடைய சகல சேனைகளிடத்திலும், என் மகத்துவம் விளங்கும்படி செய்வேன்.

௰அ. இப்படிப் பார்வோனிடத்திலும், அ வனிரதங்களிடத்திலும், குதிரைவீரரிடத்தி லும் என் மகத்துவம் விளங்கும்பொழுது, நானே யேகோவாவென்பதை எகிப்தியர் உ ணருவார்களென்று சொன்னார்.

௰கூ. இஸ்ரவேலின் சேனைகளுக்கு முன் ந டந்த தேவதூதரானவர் விலகி அவர்களுக்கு ப் பின்னாக நடந்தார். மேகத்தூண் அவர்கள் சமுகத்திற்கு விலகிப் போய்ப் பின்னே நின் றது.

உ௰. அது எகிப்தியரின் சேனையும் இஸ்ர வேலரின் சேனையும் இராமுழுதும் ஒன்றோ டொன்று சேராதபடி அவைகளின் மத்தியில் வந்தது. அதற்கு மேகமும் அந்தகாரமுமாயிரு ந்தது. இதற்கோ இரவிலும் வெளிச்சமா யிருந்தது.

உக. மோசே தன் கையைச் சமுத்திரத்தி ன் மேல் நீட்டினான். யேகோவா இராமுழு வதும் உரத்த கீழ்க்காற்றினாலே சமுத்திரம்

விலகும்படி செய்து, அதை உலர்ந்த தரை யாக்கினார். சலம் பிரிவுபட்டது.

௨௨. இஸ்ரவேல் சந்ததியார் சமுத்திர மத்தியிற் பிரவேசித்து உலர்ந்த தரை வழியாக நடந்துபோனார்கள். சலம் வலப்புறமும் இடப்புறமும் அவர்களுக்கு மதிலாய் நின்றது.

௨௩. அப்பொழுது எகிப்தியர் அவர்களைத் தொடர்ந்து பார்வோனுடைய சகல குதிரைகளோடும், இரதங்களோடும், குதிரை வீரரோடும் சமுத்திரமத்தியில் பிரவேசித்தார்கள்.

௨௪. விடியற்காலத்தில் யேகோவா மேகாக்கினித்தூணின் வழியாய் எகிப்தியரின் சேனையைப் பார்த்தார். எகிப்தியரின் சேனையைக் கலங்கச் செய்தார்.

௨௫. உருளைகள் அவர்களிரதங்களை விட்டுக் கழலவும், அவர்கள் அவைகளை வருத்தத்தோடே செலுத்தவும் பண்ணினார். அதனால் எகிப்தியர், இஸ்ரவேலரை விட்டோடிப் போவோம். யேகோவா அவர்களுக்காக, எகிப்தியராகிய எங்களுக்கு விரோதமாக யுத்தம்பண்ணுகிறாரேன்று சொன்னார்கள்.

௨௬. யேகோவா மோசேயை நோக்கி, சலம் திரும்பி எகிப்தியரையும் அவர்கள் இரதங்களையும், குதிரை வீரரையும் மூடும்படிக்கு,

உன் கையைச் சமுத்திரத்தின் மேல் நீட்டடே ன்று சொல்ல,

௨எ. மோசே, தன் கையைச் சமுத்திரத்தி ன்மேல் நீட்டினான். விடியற்காலத்தில், சமு த்திரந் திரும்பத் தன் தத்துவத்தைக் கொண் டது. எகிப்தியர் அதற்கு அஞ்சியோட, யெ கோவா அவர்களைச் சமுத்திரமத்தியில் அமி ழ்த்தினார்.

௨அ. சலந்திரும்பி வந்து இரதங்களையும், குதிரை வீரரையும், அவர்கள் பின்னாகச் ச முத்திரத்துட் பிரவேசித்திருந்த பார்வோனு டைய சேனைகள் யாவையும், மூடிக்கொண் டது. அவைகளில் ஒன்றாகிலுந் தப்பவில்லை.

௨௯. இஸ்ரவேல் சந்ததியாரோ சமுத்திர மத்தியில் உலர்ந்த தரையின் வழியாய் நடந் து போனார்கள். அவர்களுடைய வலப்புறத் திலும், இடப்புறத்திலும், சலம் அவர்களுக் கு மதிலாய் நின்றது.

௩௰. இப்படியே யெகோவா அந்நாளில் இ ஸ்ரவேலரை எகிப்தியர் கையினின்றும் இர ட்சித்தார். கடற்கரையில் எகிப்தியர் செத்து க்கிடக்கிறதை இஸ்ரவேலர் கண்டார்கள்.

௩௧. யெகோவா எகிப்தியர்மேல் வைத்த பயங்கரமான கரத்தை இஸ்ரவேலர் கண்டா ர்கள். சனங்கள் யெகோவாவுக்குப் பயந்தா

ர்கள். யெகோவாவினிடத்திலும் அவருடை
ய தாசனாகிய மோசேயினிடத்திலும், விசுவா
சம் வைத்தார்கள்.

## யரு. அதிகாரம்.

*க. மோசே கீதக் கவிசெய்தல்: உய. அதைப் பாடுத
ல்: உஉ. சலங்கிடையாமை: உ௩. மாரா என்னு
ம் ஸ்தானத்தில் அகப்பட்ட கசப்பான சலம் மரத்
தழையினாலினிமையாதல்: உஎ. ஏலீம் ஸ்தானத்
திற் பாளயம் இறங்கல்.*

க. பார்வோனுடைய குதிரைகளும், அவ
னுடைய இரதங்களும், குதிரை வீரரும், ச
முத்திரத்திற் பிரவேசித்தபோழுது, யெகோ
வா சமுத்திரத்தின் சலத்தை அவர்கள் மேல்
திருப்பினார். இஸ்ரவேல் சந்ததியாரோ சமுத்
திரத்தின் நடுவே உலர்ந்த தரைவழியாக நட
ந்துபோனார்கள்.

உ. அப்பொழுது இஸ்ரவேல் சந்ததியாரு
ம், மோசேயும், யெகோவாவின்மேல் பாடிய
கவி வருமாறு. யெகோவா மகிமையோடுஞ்
சயங் கொண்டார். ஆதலால் அவரைப் பாடு
வேன். குதிரையையும் குதிரைவீரரையுஞ்
சமுத்திரத்திலே தள்ளிவிட்டார்.

௩. யெகோவாவே என்பலம், என் கீதம்.

அவரே, என் இரட்சகர். அவரே என் தேவன். அவருக்கு ஒரு ஆலயமும் உண்டாக்குவேன். என் பிதாவின் தேவனும் அவரே, ஆதலால் அவரை வாழ்த்துவேன்.

௩. யேகோவா ஒருயுத்தவீரர். யேகோவாவே அவர் நாமம்.

௪. பார்வோனின் இரதங்களையும் அவன் சேனைகளையும், சமுத்திரத்தில் தள்ளிவிட்டார். அவனுடைய பிரதான சேனாபதிகளுஞ் செங்கடலிலே மாண்டு போனார்கள்.

௫. ஆழி அவர்களை மூடிக்கொண்டது. கல்லைப்போல் ஆழத்தில் தாழ்ந்து அமிழ்ந்திப் போனார்கள்.

௬. யேகோவாவே, உமது வலக்கரம், பலத்தினால் மகத்துவஞ் சிறந்திருக்கின்றது. யேகோவாவே, உமது வலக்கரம் சத்துருவைச் சின்னபின்னப் படுத்திற்று.

௭. உமக்கு மாறாக எழுந்தவர்களை, மேன்மை பொருந்திய உமது மகத்துவத்தினால் கவிழ்த்தீர். நீர் பிரயோகித்த கோபாக்கினி, அரிதாளைப்போல அவர்களைப் பட்சித்தது.

௮. உமது நாசியின் சுவாசத்தினால் சலம் குவிந்து நின்றது. வெள்ளம் குவியல் போல, நிமிர்ந்து நின்றது. சமுத்திர மத்தியில் அலைகிற சலம் உறைந்து போயிற்று.

௯. தொடருவேன், பிடிப்பேன்; கொள்ளையிட்டதைப் பங்கிடுவேன்; அவைகளினுல் என் மனுேவாஞ்சை திர்த்தியடையும். என் கட்கத்தை உருவுவேன்; என்கை அவர்களைச் சங்கரிக்குமென்று சத்துரு சொல்ல,

௰. நீர் உமது காற்றை வீசப்பண்ணினீர். கடல் அவர்களை மூடிக்கொண்டது. உரமான சமுத்திரத்தில் ஈயத்தைப் போலத் தாழ்ந்துபோனுர்கள்.

௰௧. யெகோவாவே, பராக்கிரம சாலிகளுக்குள்ளே உமக்கொப்பானவர் யாவர்? மாட்சிமை பொருந்திய பரிசுத்தமுள்ளவரும், பயபத்தியுடன் துதிக்கப்படத்தக்கவரும் அற்புதங்களைச் செய்பவருமாகிய உமக்கொப்பானவர் யாவர்?

௰௨. நீர் உமது வலக்கையை நீட்டப் பூமி அவர்களை விழுங்கிற்று.

௰௩. நீர் மீட்டுக்கொண்ட இந்தச் சனங்களை நீர் உமது தயையினுல் நடத்தினீர். நீர் இவர்களுக்கு வழிகாட்டி, உமது வல்லபத்தினுல் உமது பரிசுத்த வாசஸ்தலத்திற்கு நடத்தினீர்.

௰௪. சனங்கள் அதைக் கேட்கும் போழுது நடுங்குவார்கள். பேலிஸ்திய தேசத்தாரைத் திகில் பிடிக்கும்.

௰௫. ஏதோமின் இராசாக்கள் கலங்குவார்கள். மோவாபின் பராக்கிரமசாலிகளை நடுக்கம் பிடிக்கும். கானான் குடிகள் யாவருங் கரைந்து போவார்கள்.

௰௬. பயமுந் திகிலும், அவர்கள் மேல் விழும். யெகோவாவே, உம்முடைய சனங்கள் கடந்து போகும் வரைக்கும் நீர்மீட்ட சனங்களே கடந்துபோகும் வரைக்கும் உமது புயபலத்தினால் அவர்கள் கல்லைப்போல அசைவற்றிருப்பார்கள்.

௰௭. யெகோவாவாகிய நீர் உம்முடைய சனங்களைக் கொண்டுபோய், வாசம்பண்ணுகிறதற்கு நீர் நியமித்த இடமும், ஆண்டவராயிருக்கிற உமது கரம் ஸ்தாபித்த பரிசுத்த ஸ்தலமுமாகிய உமது சுதந்தரமான மலையில் நாட்டுவீர்.

௰௮. யெகோவாவானவர் என்றென்றைக்கும் அரசாளுகிறார்.

௨௰. ஆரோனுடைய சகோதரியும், தீர்க்கதரிசியுமாகிய மிரியம் தன் கையிலே மிர்தங்கத்தையெடுக்க, மற்ற ஸ்திரிகளெல்லாரும் மிர்தங்கங்களை எடுத்துக்கொண்டு, அவளுக்குப் பின்னே புறப்பட்டு நடனம்பண்ணிவர,

௨௧. மிரியம் அவர்களுக்கு யெகோவாவைப் பாடுங்கள். அவர் மகிமையோடுஞ் சயங்

கொண்டார். குதிரையையும், குதிரைவீரனை யும், சமுத்திரத்தில் தள்ளி விட்டாரென்று சொன்னாள்.

௨௨. மோசே, இஸ்ரவேலரோடும், செங்க கடலினின்றும் புறப்பட்டு ஊர்வனத்திற்குப் பிரயாணஞ்செய்தான். அவர்கள் மூன்றுநாளள ளவும் வனத்திலே நடந்து, தண்ணீர் அகப்பட டாமல், மாரா என்னும் இடத்திற் சேர்ந்தார் கள்.

௨௩. மாராவிலுள்ள நீர் கசப்பாய் இருந்த தினால், அது குடிக்கக் கூடாமற் போயிற்று. அதனால் அவ்விடத்திற்கு மாராவென்று பே ராயிற்று.

௨௪. சனங்கள் மோசேக்கு விரோதமாய் மோறுமோறுத்து, எதைப் பானம்பண்ணு வோமென்றார்கள்.

௨௫. மோசே, யேகோவாவை நோக்கி, ஒல மிட, யேகோவா மோசேக்கு ஒரு மரத்தைக் காண்பித்தார். அதை அவன் நீரிற் போட்ட வுடனே நீர் மதுரமாயிற்று. அங்கே அவர் அ வர்களுக்குப் பிரமாணத்தையும், நியமத்தை யும் விதித்து, அங்கே அவர்களைச் சோதித்து;

௨௬. நீங்கள் உங்கள் தேவனாகிய யேகோ வாவின் வாக்கை யுற்றுக் கேட்டு, அவருடை ய பார்வைக்குச் செப்பமானவைகளைச் செய்

து, அவருடைய கட்டளைகளுக்குச் செவிகொ
டுத்து, அவருடைய நியமங்கள் யாவையுங்
கைக்கொண்டால், நான் எகிப்தியருக்கு வர
ப்பண்ணின உபாதிகளிலொன்றையும், உங்
களுக்கு வரப்பண்ணேன். நானே உங்களைச்
சொஸ்தப்படுத்தும் யெகோவா என்றார்.

உஎ. அவர்கள் பன்னிரண்டு நீரூற்றுக் கண்
களும், எழுபது பேரீந்து மரங்களுமிருந்த எ
லீமிற் சேர்ந்து அங்கே நீரருகே பாளயமிறங்கி
னார்கள்.

## ௰சு. அதிகாரம்.

*க. ஆகாரமில்லாமையால் இஸ்ரவேலர் மொறுமொ
றுத்தல்: ச. ஆகாரம் வருஷிப்பேனென்று தேவன்
வாக்குத்தத்தஞ்செய்தல்: கூ. மோசே சனங்களுக்
குக் கட்டளையிடல். தேவன் அவர்களுக்குப் பிரச
ன்னமாதல்: ௰க. அவர் காடையை விடுத்தல், ம
ன்னா வருஷிக்கப்படல்: ௰சு. ஆகாரத்துக்களவு கு
றித்தல்: உஉ. ஆறாந்தினத்தில் இருமடங்கு சேர்க்
கும்படி கட்டளையிடல்: உஎ. ஏழாந்தினத்தில் ஆ
காரம் வருஷியாதொழிதல்: ௩உ. பாத்திரத்தில் ம
ன்னாவையிட்டுப் பேணிக்கொள்ளல்.*

க. பின்பு இஸ்ரவேல் சந்ததியாரரகிய ச
பையாரெல்லாரும் எலீமைவிட்டுப் பிரயா
ணம்பண்ணி, தாங்கள் எகிப்துதேசத்திலிருந்
து புறப்பட்ட இரண்டாம்மாதம் பதினைந்

தாந் தினத்தில், எலீமுக்கும், சீனாயுக்குமி டையே சீன் வனத்திற் சேர்ந்தார்கள்.

௨. அந்த வனத்தில் இஸ்ரவேல் சந்ததியா ராகிய சபையாரேல்லாரும் மோசேக்கும் ஆ ரோனுக்கும் விரோதமாக மோறுமோறுத்தா ர்கள்.

௩. இஸ்ரவேல்சந்ததியார், நாங்கள் மாமிச பாத்திரங்களுக்கருகேயிருந்து, ஆகாரத்தைத் திருத்தியாகப் புசித்துவந்த எகிப்துதேசத்தி லே, யெகோவாவின் கையால் இறந்தோமா னால் நலம். இந்தக் கூட்டம் முழுவதையும் பட்டினியினால் கோல்லத்தக்கதாக, நீங்கள் எங்களைப் புறப்படுத்தி, இந்த வனத்திற் கு அழைத்து வந்தீர்களேயேன்று சோன்னார் கள்.

௪. அப்போழுது யெகோவா மோசேயை நோக்கி, நான் உங்களுக்கு ஆகாரம் வானத்தி னின்றும் வருஷிக்கப்பண்ணுவேன். சனங் கள் புறப்பட்டு, நாள்வீதம், சேர்த்துக்கோள் ளவேண்டும். அதினால் அவர்கள் என் நியா யப்பிரமாணத்தின்படி நடப்பார்களோ, மா ட்டார்களோவேன்று அவர்களைச் சோதிப் பேன்.

௫. ஆறும்நாளில் அவர்கள் நாள்தோறுஞ் சேர்த்துக்கோள்வதிலும் இரு மடங்காய்க்

கொண்டுவந்து, அதை ஆயத்தம்பண்ணிவை
க்கக்கடவர்களென்றார்.

௬. மோசேயும், ஆரோனும், இஸ்ரவேல்ச
ந்ததியாரெல்லாரையும் நோக்கி, உங்களை எ
கிப்துதேசத்தினின்றும் யெகோவா புறப்ப
டச் செய்தாரென்று சாயங்காலமே அறிவீர்
கள்.

௭. விடியற்காலம் யெகோவாவின் மகிமை
யையுங் காண்பீர்கள். யெகோவா தமக்கு வி
ரோதமாக நீங்கள் குறைகூறினதைக் கேட்
டாரே. நீங்கள் எங்கள் மேல் மோறுமோ
றுக்க நாங்கள் எம்மாத்திரமென்றார்கள்.

௮. அன்றியும் மோசே, புசிப்பதற்குச் சா
யங்காலத்தில் இறைச்சியையும், திருத்திய
டைவதற்கு விடியற்காலத்தில் அப்பத்தையு
ம் யெகோவா உங்களுக்குத் தரும்போழுது,
இது விளங்கும். யெகோவாவுக்கு விரோத
மாய் நீங்கள் மோறுமோறுத்ததை அவர் கே
ட்டிருக்கிறார். நாங்களார்? உங்கள் மோறு
மோறுப்புக்கள் எங்களுக்கல்ல, யெகோவா
வுக்கே விரோதமாயிருக்கின்றனவென்
றான்.

௯. மோசே ஆரோனிடத்தில், நீ இஸ்ரவே
லராகிய சபையார் யாவரையும் நோக்கி, யெ
கோவாவின் சந்நிதியிற் சேருங்கள். அவர் உ

ங்கள் மொறுமொறுப்புக்களைக் கேட்டிருக்கி றாரென்று சொல்லென்றான்.

௰. ஆரோன் இஸ்ரவேலராகிய சபையாரெல்லாருக்குஞ் சொன்னமாத்திரத்தில், அவர்கள் திரும்பி வனத்திற்கு நேராய்ப்பார்க்க, அங்கே யெகோவாவின் மகிமைப் பிரகாசம் மேகத்திலே காணப்பட்டது.

௰௧. யெகோவா மோசேயை நோக்கி, இஸ்ரவேல் சந்ததியாருடைய மொறுமொறுப்புக்களைக் கேட்டேன்.

௰௨. சாயங்காலம் நீங்கள் மாமிசத்தைப் புசித்து, விடியற்காலம் அப்பத்தினால் திருத்தியடைவீர்கள். நானே உங்கள் தேவனாகிய யெகோவாவென்பதை அறிந்துகொள்வீர்களென்று நீ அவர்களுக்குச் சொல்லென்றார்.

௰௩. சாயங்காலங் காடைகள் வந்து பாளயத்தை மூடிக்கொண்டன. விடியற்காலத்தில் பாளயமெங்கும் பனிபெய்திருந்தது. பெய்திருந்தபனி நீங்கினபின் வனமெங்கும் உறைந்த பனிக்கட்டிகளைப்போன்ற சிறு உண்டைகள் தரையிலே கிடந்தன.

௰௪. இஸ்ரவேல்சந்ததியார் அதைக் கண்டு,

௰௫. அதை இன்னதென்றறியாதபடியால் ஒருவரை ஒருவர், இதென்னவென்று கேட்க; மோசே அவர்களை நோக்கி, இதுதான் யெ

கோவா உங்களுக்குப் புசிக்கத்தந்த அப்பம்.

௰௬. யெகோவா விதித்தபடி, நீங்கள் உங்கள் உங்கள் கூடாரத்திலுள்ள ஆள்களின் தொகைக்கும், அவரவர் புசிக்குமளவுக்கும் ஏற்கத் தலைக்கோரு ஓமராக, அதிலெடுத்துச் சேர்த்துக்கோள்ளக்கடவீர்களென்றான்.

௰௭. இஸ்ரவேல் சந்ததியார், அப்படியே செய்தார்கள். சிலர் அதிகமாயும், சிலர் குறைவாயுஞ் சேர்த்தார்கள்.

௰௮. அதிகமாகச் சேர்த்துக்கோண்டவர்களுக்கு அதிகமும், குறைவாகச் சேர்த்துக்கோண்டவர்களுக்குக் குறைவுமாகாதபடி ஓமரினால் அளந்தார்கள். அவரவர் புசிக்குமளவாகச் சேர்க்கப்பட்டது.

௰௯. மோசே ஒருவனும் விடியற்காலம்மட்டும் அதில் ஒன்றும் வைக்கப்படாதேன்று அவர்களுக்குச் சோல்லியும்,

௨௰. சிலர் மோசேயின் சோற்படி செய்யாமல், விடியற்காலமட்டும், அதில் சிறிது சேஷம்வைத்தார்கள். அதில் கிருமியுண்டாய் நாற்றமேடுத்தது. அவர்கள் மேல் மோசே கோபங்கோண்டான்.

௨௧. அதை விடியற்காலந்தோறும் அவரவர் புசிக்குமளவுக்குத் தக்கதாகச் சேர்த்தார்கள். வெயில் ஏற ஏற அது உருகிப்போம்.

௨௨. அவர்கள் ஆறும்நாளில் ஒவ்வொருவருக்கு இரண்டு ஓமர் வீதமாய், இருமடங்காக, ஆகாரத்தைச் சேர்த்தார்கள். சபையிலுள்ள தலைவர் எல்லாரும் போய் அதை மோசேக்கு அறிவிக்க;

௨௩. அவன் அவர்களை நோக்கி, நாளைக்கு யெகோவாவுக்குரிய பரிசுத்த ஓய்வுநாள்; ஆதலால் இன்றைக்கு நீங்கள் சுடவேண்டுவதைச் சுட்டு, சமைக்கவேண்டுவதைச் சமைத்து, சேஷமான யாவையும் மறுநாளைக்கு உங்களுக்காக வைத்துக்கொள்ளுங்கள். யெகோவா சொல்லிய காரியம் இதுவேயென்றான்.

௨௪. மோசேயிட்ட கட்டளைப்படி, அதை மறுநாளைக்கு வைத்தார்கள். அது நாறவுமில்லை; அதில் கிருமியுண்டாகவுமில்லை.

௨௫. அப்பொழுது மோசே இன்றைக்கு யெகோவாவுக்குரிய ஓய்வுநாள். இன்று நீங்கள் அதை வெளியிலே காணீர்கள். இன்றைக்கு இதையே புசியுங்கள்.

௨௬. ஆறுநாளும் அதைச் சேர்த்துக்கொள்ளவேண்டும். ஓய்வுநாளாகிய ஏழாம் நாளில் அது அகப்படாதேன்றான்.

௨௭. ஏழாம்நாளில் சனங்களில் சிலர் அதைச் சேர்க்கப் புறப்பட்டார்கள். அவர்கள் கண்டடையவில்லை.

உ௯. யேகோவா மோசேயை நோக்கி, என் கட்டளைகளையும், நியாயப்பிரமாணங்களையும் அநுசரித்துக்கொள்ளாமல் எதுவரைக்கும் மறுப்பீர்கள்.

உ௯. பாருங்கள், யேகோவா உங்களுக்கு ஓய்வுநாளை அருளினபடியால் அவர் ஆறும்நாளில் உங்களுக்கு இரண்டுநாளுக்கும் வேண்டிய ஆகாரத்தைத் தருகிறாரே. ஏழாம் நாளில் நீங்கள் ஒவ்வொருவரும் உங்களுங்களுடைய ஸ்தானத்தை நீங்காமல் இருக்கவேண்டுமென்றார்.

௩௰. அப்படியே சனங்கள் ஏழாம்நாளில் ஓய்ந்திருந்தார்கள்.

௩௧. இஸ்ரவேல் வமிசத்தார் அதற்கு மன்னாவென்று பேரிட்டார்கள். அது கோத்துமல்லியளவும் வெண்மையுமுள்ளதாயிருந்தது. அதின் உருசி தேன்கூடிய பணிகாரத்திற்கொப்பாயிருந்தது.

௩௨. யேகோவா நான் உங்களை எகிப்துதேசத்தினின்றும் புறப்படச்செய்து வனத்தில் உங்களுக்குப் புசிக்கத் தந்த ஆகாரத்தை உங்கள் சந்ததியார் காணும்படி காத்துக்கொள்ளும்பொருட்டு அவர்கள் நிமித்தம் அதில் ஒரு ஓமர் நிரம்ப எடுத்துவைக்க வேண்டுமென்று விதித்திருக்கிறாரென்று மோசே சொன்னான்.

கூகூ. மேலும் மோசே ஆரோனை நோக்கி, நீ ஒரு பாத்திரத்தை எடுத்து, அதில் ஒரு ஓமர் மன்னாவைஇட்டு அதை உங்கள் சந்ததியார் நிமித்தங் காத்துக்கொள்ளும்படிக்கு யெகோவாவின் சந்நிதானத்தில் வையென்றான்.

கூச. யெகோவா மோசேக்கு விதித்த பிரகாரம் காத்துக்கொள்ளும்படிக்கு ஆரோன் அதைச் சாட்சிப்பெட்டிக்கு முன் வைத்தான்.

கூரு. இஸ்ரவேல்சந்ததியாரும் தங்கள் வாசஸ்தானமாகிய தேசத்திற்கு வரும்வரைக்கும், நாற்பதுவருஷமளவும், மன்னாவைப் புசித்தார்கள். அவர்கள் கானான் தேசத்தின் எல்லையில் சேரும்வரைக்கும் மன்னாவைப் புசித்தார்கள்.

கூகா. ஒரு ஓமரானது, ஏபாவிற் பத்திலொருபங்கு.

## யஎ. அதிகாரம்.

*க. இரிவிதீமிலே நீரில்லாமையால் மொறுமொறுத்தல்: ரு. ஒரேபின் கன்மலைக்குத் தேவன் நீருக்காக மோசேயை அனுப்பல்: அ. அம்லேக்கியரைச் செயித்தல்: யச. மோசே யெகோவாவுக்கு வேதிகையுண்டாக்கல்.*

க. பின்பு இஸ்ரவேலராகிய சபையாரெல்லாரும் தங்களுக்கு யெகோவா அருளிய வா

க்கின்படி, பிரயாணம்பண்ணி, சீன்வனத்தைவிட்டுப் புறப்பட்டு, இரிவீதீமிற் சென்று பாளயமிறங்கினார்கள். அங்கே சனங்கள் குடிக்கத் தண்ணீர் இல்லை.

உ. ஆதலால் மோசேயுடனே சனங்கள் வாதாடி, நாங்கள்குடிக்க எங்களுக்குத் தண்ணீர் வேண்டுமென்று சொல்ல, மோசே ஏன் நீங்கள் என்னோடே வாதுபண்ணுகிறீர்கள்? ஏன் யெகோவாவைச் சோதிக்கிறீர்களென்றான்.

௩. சனங்கள் அவ்விடத்தில் தண்ணீர்த்தாகமாயிருந்ததினால், அவர்கள் மோசேக்கு விரோதமாய் மோறுமோறுத்து, நீர் எங்களையும் எங்கள் பிள்ளைகளையும், ஆடுமாடுகளையுந் தண்ணீர்த்தாகத்தினால், கொல்லத்தக்கதாக எகிப்திலிருந்தும் புறப்படுத்தினதென்னவென்றார்கள்.

௪. மோசே யெகோவாவை நோக்கி, ஓலமிட்டு, இந்தச் சனங்களுக்கு என்ன செய்வேன்? இவர்கள் என்மேற் கல்லெறியப் பார்க்கிறார்கள் என்றான்.

௫. யெகோவா மோசேயை நோக்கி, இஸ்ரவேலரின் முதியோரில் சிலரை உன்னுடன் கூட்டிக்கொண்டு, அந்த நதியை அடித்த உன் கோலைக் கையில் பிடித்து சனங்களுக்கு முன்னே நடந்துபோ;

௬. அங்கே ஓரேபுமலையில் நான் உனக்கு முன்பாகக் கல்லின்மேல் நிற்பேன். அந்தக் கன்மலையில் அடி; அப்பொழுது சனங்கள் குடிக்கும்படிக்கு, அதிலிருந்து தண்ணீர் புறப்படுமென்றார். அப்படியே மோசே இஸ்ரவேலரின் முதியோர் முன்னிலையில் செய்தான்.

௭. இஸ்ரவேல்சந்ததியார் வாதுபண்ணினதினிமித்தமும், யெகோவா எங்களுக்குள்ளிருக்கிறாரா இல்லையாவென்று, அவர்கள் யெகோவாவைச் சோதித்ததினிமித்தமும், அவன் அந்த ஸ்தானத்திற்கு மாசாவென்றும் மேரிபாவென்றும் பேரிட்டான்.

௮. அமலேக்கியர் இரிவீதீமிலே இஸ்ரவேலருடன் யுத்தம்பண்ணவந்தார்கள்.

௯. மோசே யோசுவாவை நோக்கி, நீ நமக்காக மனிதரைத் தெரிந்தெடுத்துப் புறப்பட்டு, அம்லேக்கருக்கு விரோதமாக யுத்தம்பண்ணு. நாளைக்கு நான் மலையுச்சியில் தேவனுடைய கோலை என்கையில் பிடித்துக்கொண்டு நிற்பேனென்று சொன்னான்.

௰. யோசுவா தனக்கு மோசே சொன்னபடிசெய்து, அம்லேக்கருடன் யுத்தம்பண்ண, மோசேயும், ஆரோனும், ஊரேன்பவனும், மலையுச்சியிலேறினார்கள்.

௰௧. மோசே தன் கையை உயர்த்துகையில், இஸ்ரவேலர் மேற்கொண்டார்கள். அவன் தன் கையைத் தாழ்த்துகையில், அம்லேக்கர் மேற்கொண்டார்கள்.

௰௨. மோசேயினுடைய கைகள் திமிர்கொண்டபடியால் அவர்கள் ஒரு கல்லைக்கொண்டுவந்து அவன் கீழ்வைக்க, அதின்மேலிருந்தான். ஆரோனும், ஊரும், ஒருவன் வலப்பக்கத்திலும், ஒருவன் இடப்பக்கத்திலுமாயிருந்து, அவனுடைய கைகளைத் தாங்கினார்கள். இவ்விதமாய் அவனுடைய கைகள் சூரியன் அஸ்தமான பரியந்தம் அசையாதிருந்தன.

௰௩. யோசுவா, அம்லேக்கையும், அவன் சனங்களையும், கட்கத்தின்வாயினாலே முறிய அடித்தான்.

௰௪. யேகோவா மோசேயை நோக்கி, அம்லேக்கரென்னும் பேரும் வானத்தின் கீழேயிருக்குமிராமல், நான் நிச்சயமாய் அவர்களை நிருமூலமாக்குவேனென்பதை நினைக்கும் படிக்கு, நீ ஒரு புத்தகத்தில் எழுதி, யோசுவாவின் செவியிலேறவுஞ் செய்யென்றார்.

௰௫. மோசே ஒரு வேதிகையைக் கட்டி, அம்லேக்கின் கை யேகோவாவின் ஆசனத்துக்கு விரோதமானபடியால்,

௰கூ. தலைமுறைதோறும் அவர்களுக்கு விரோதமாக, யேகோவா யுத்தஞ்செய்வாரென்று சொல்லி, அதற்கு யேகோவாநிசியென்று பேரிட்டான்.

## ௰அ. அதிகாரம்.

*க. மோசேயை அவன் மனைவியும் புத்திரரும் மாமனுங் காணவருதல் : எ. மோசே அவர்களை எதிர்கொண்டு உபசரித்தல் : ௰௬. எத்திரோ மோசேக்குப் புத்திசொல்லல் : உஎ. எத்திரோ தன் தேசத்துக்குத் திரும்பிப்போதல்.*

க. மீதியானில் ஆசாரியனும், மோசேயின் மாமனுமாகிய எத்திரோ, தேவன் மோசேக்கும், தம்முடைய சனங்களாகிய இஸ்ரவேலருக்குஞ் செய்தயாவையும், இஸ்ரவேலர் எகிப்தினின்றும் புறப்படச் செய்ததையுங் கேள்விப்பட்டான்.

உ. அப்பொழுது மோசேயின் மாமனாகிய எத்திரோ, மோசேயினாலே திரும்ப அனுப்பிவிடப்பட்ட அவன் மனைவியாகிய சிப்போராளையும்,

௩. அவன் அந்நியதேசத்தில் பரதேசியானேனென்று சொன்னபடியினாலே கேர்ஷோமென்றும்,

௪. என் பிதாவின் தேவன் எனக்குத் து

ணயாகி என்னைப் பார்வோனுடைய கட்கத்துக்குத் தப்புவித்தாரென்று சொன்னபடியினாலே, எலீயேசரென்றும் பெயர்பெற்ற அவன் புத்திரரிருவரையுங் கூட்டிக்கொண்டு புறப்பட்டான்.

ரு. மோசேக்கு மாமனாகிய எத்திரோ மோசேயின் புத்திரரோடும், அவன் மனைவியோடும், அவன் பாளயமிறங்கியிருந்த வனத்தில் தேவமலையைச் சமீபித்து,

௬. எத்திரோ என்னும் உன் மாமனாகிய நானும், உன் மனைவியும், அவள் குமாரரிருவரும், உன்னிடத்தில் வருகிறோமென்று மோசேயிடத்தில் சொல்லியனுப்ப,

எ. மோசே தன் மாமனை எதிர்கொண்டு போய், அவனை வணங்கி முத்தஞ்செய்தான். அவர்கள் அவரவர் சுகசெய்திகளை விசாரித்துக்கொண்டு கூடாரத்தில் பிரவேசித்தார்கள்.

அ. இஸ்ரவேலர் நிமித்தம் யெகோவா பார்வோனுக்கும், எகிப்தியருக்குஞ் செய்த யாவையும், வழியிலே தாங்கள் பட்ட பாடுகளையும், தங்களை யெகோவா இரட்சித்ததையும், மோசே தன் மாமனுக்கு விவரமாய்ச் சொன்னான்.

௯. யெகோவா இஸ்ரவேலரை எகிப்தியரு

டைய கைக்குத் தப்புவித்து, அவர்களுக்கு ச் செய்த சகல நன்மைகளையுங் குறித்து, எத் திரோ சந்தோஷப்பட்டான்.

௰. அன்றியும் எத்திரோ் எகிப்தியருடைய கைக்கும், பார்வோனுடைய கைக்கும் உங் களைத் தப்புவித்து, எகிப்தியருடைய கைக்கு ட்பட்டிருந்த இந்தச் சனங்களை விடுவித்த யே கோவா துதிக்கப்படக்கடவர்.

௰௧. அவர்கள் அகந்தையாய்ச் செய்தகாரி யங்களில் அவர்களை மேற்கொண்டபடியால் யேகோவா எல்லாத்தேவர்களிலும், பெரியவ ரேன்பதை இப்பொழுது அறிந்துகொண்டே னென்றான்.

௰௨. பின்பு மோசேயின் மாமனாகிய எத் திரோ சருவாங்க தகன பலியையும், மற்றை ப் பலிகளையும், தேவனுக்குக் கொண்டுவந் தான்.

௰௩. ஆரோனும், இஸ்ரவேலரின் மூதி யோரனைவருஞ் சேர்ந்து, மோசேயின் மாம னுடனே, தேவனுடைய சமுகத்தில், போச னஞ்செய்தார்கள். மற்றைநாள் மோசே சன ங்களுக்கு நியாயந்தீர்க்கும்படி வீற்றிருந்தா ன். சனங்கள் காலைமுதல் மாலைமட்டும், மோசே அருகே நின்றார்கள்.

௰௪. சனங்களுக்கு அவன் செய்த யாவை

யும், மோசேயின் மாமன் கண்டு, நீ சனங்க ளுக்கு இப்படிச்செய்கிறதேன்ன? நீ ஒருவ ன்மாத்திரம் வீற்றிருக்கிறதேது? சனங்களே ல்லாங் காலேமுதல் மாலேமட்டும், உன்னரு கே நிற்கவேண்டியதேன்னவேன்று கேட்க,

௰௫. மோசே தன் மாமனே நோக்கி, தேவ னிடத்தில் நியாயம்விசாரிப்பிக்கச் சனங்கள் என்னிடத்தில் வருகிறார்கள்.

௰௬. அவர்களுக்கு யாதோரு காரியமுண் டானல் என்னிடத்தில் வருவார்கள். நான் அவனவனுக்குத்தக்க நியாயந்தீர்த்து, யேகோ வாவுடைய கட்டளேகளேயும், விதிப்பிரமா ணங்களேயுந் தேரிவிக்கிறேனேன்றான்.

௰௭. அதற்கு மோசேயின் மாமன், நீ இ ப்படிச்செய்கிறது நல்லதல்ல.

௰௮. இது உனக்கு மிகவும் பாரமானகா ரியம். ஆகையால் நீயும், உன்னேடிருக்கிற இந்தச் சனங்களும், மேலிந்துபோவீர்கள். நீ தனியே அதை நடப்பிக்கமாட்டாய்.

௰௯. என் சோல்லேக்கேள்: உனக்குப் பு த்திசோல்லுகிறேன். தேவனும் உன் பட்ச த்திலிருப்பார். சனங்கள் நிமித்தம் நீ தேவ ன் பட்சத்திலிருந்து அவர்களுடைய காரிய ங்களேத் தேவனுக்கு முற்படுத்தி,

௨௰. கட்டளேகளேயும், விதிப்பிரமாணங்க

ளையும், அவர்களுக்குணர்த்தி, அவர்கள்நடக்க வேண்டியவழியையும், அவர்கள் செய்யவே ண்டியகிரியையையும்அவர்களுக்குத்தெரிவி.

௨௧. மேலும் சகல சனங்களுக்குள்ளும் தேவனுக்குப் பயப்படுகிறவர்களும், உண் மையுள்ளவர்களும், பொருளாசையை வெ றுப்பவர்களும், சாமர்த்தியருமாகிய புருஷ ரை நீ தெரிந்து; அவர்களை ஆயிரம்பெயருக்க திபதிகளாகவும், நூறுபெயருக்கதிபதிகளாகவு ம், ஐம்பதுபெயருக்கதிபதிகளாகவும், பத்து ப்பெயருக்கதிபதிகளாகவும், சனங்கள் மே லே ஏற்படுத்து.

௨௨. அவர்களே எப்பொழுதுஞ் சனங்களு க்கு நியாயந்தீர்க்கக்கடவர்கள். பெரிய கா ரியங்கள் யாவையும் உன்னிடத்திற் கொண் டுவரவும், அற்பகாரியங்கள் யாவையும், தாங் களே தீர்க்கவுங்கடவர்கள். அவர்கள் உன்னு டைய பாரத்தைக் கூடச்சுமந்தால், உனக்கு இலகுவாயிருக்கும்.

௨௩. இந்தப் பிரகாரமாக நீ செய்வதும், இப்படித் தேவன் உனக்குக் கட்டளையிடுவ துமுண்டானல், உன்னலே தாங்கிக்கொள் ளக்கூடும். இந்தச் சனங்கள் யாவருஞ் சமா தானத்துடன், தாங்கள் போகுமிடத்திற் சே ர்வார்களென்றான்.

உச. மோசே தன் மாமன் சொன்னதைக் கேட்டு, அவன் சொன்னபடியெல்லாஞ் செய்தான்.

உரு. இஸ்ரவேலர் எல்லாரிலுஞ் சாமர்த்திய புருஷரை, மோசே தெரிந்து, சனங்களுக்குத் தலைவர்களாயிருக்கும்படி, அவர்களை ஆயிரம்பேயருக்கதிபதிகளாகவும், நூறுபேயருக்கதிபதிகளாகவும், ஐம்பதுபேயருக்கதிபதிகளாகவும், பத்துப்பேயருக்கதிபதிகளாகவும் ஏற்படுத்தினான்.

உசூ. அவர்கள் எப்பொழுதுஞ் சனங்களுக்கு நியாயந்தீர்த்து வந்தார்கள்; பெருங்காரியங்களை மாத்திரம், மோசேயினிடத்தில் கொண்டுவந்தார்கள்; அற்பகாரியங்கள் யாவையுந் தாங்களே தீர்த்தார்கள்.

உஎ. பின்பு மோசே தன் மாமனை அனுப்பிவிட, அவன் திரும்பத் தன் தேசத்துக்குப் போனான்.

## ௰௯. அதிகாரம்.

*க. சனங்கள் சீனாய்மலையிற் சேர்ந்து அங்கே தேவவாக்குப்பெறுதல்: எ. சனங்கள் சொல்லும் உத்தரத்தைத் தேவசமுகத்தேறச்செய்தல்: ௰. சனங்கள் தங்களைச் சுத்திசெய்யும்படிக்கும் சீனாய்மலைக்குச் சமீபத்தில் வராதபடிக்குங் கட்டளையிடல்: ௰௪. தேவன் சனங்களுக்குப் பிரத்தியட்சமாய்ச் சீனாய் மலையின்மேல் வெளிப்படல்.*

௧. இஸ்ரவேல்சந்ததியார் எகிப்துதேசத்தி னின்றும் புறப்பட்ட மூன்றும் மாதத்தில், முதலாம்நாளிலே, சீனாய்வனத்திற் சேர்ந்தார்கள்.

௨. அவர்கள் இரிவீதீமைவிட்டுப் புறப்பட்டு, சீனாய் வனத்திற் போய் அந்த வனத்தில் இறங்கினார்கள். இஸ்ரவேலர் அங்கே மலைக்கெதிராகப் பாளயமிறங்கியபின்பு, மோசே தேவசந்நிதியில் ஏறினான்.

௩. யெகோவா மலையிலிருந்து அவனை அழைத்து, நீ யாக்கோபின் வமிசத்தாராகிய இஸ்ரவேல்சந்ததியாரை நோக்கி,

௪. நான் எகிப்தியருக்குச் செய்ததையும், கழுகுகள், தங்கள் சிறகுகளின்மேல் சுமப்பதுபோல, நான் உங்களைத் தாங்கிவந்து, என்னிடத்தில் சேர்த்துக்கொண்டதையும், நீங்கள் கண்டிருக்கிறீர்கள்.

௫. இனி நீங்கள் என் வாக்குக்கு உள்ளபடி அமைந்து என் உடன்படிக்கையைக் காத்துக்கொள்வீர்களாகில், சகல சனங்களிலும் நீங்களே எனக்கு அருமையான போக்கிஷமாவீர்கள்.

௬. பூமிமுழுவதும் என்னுடையதாயிருந்தும், நீங்களே என் ஆசாரிய ராச்சியமும், பரிசுத்த சாதியுமாயிருப்பீர்களென்று, அவர்க

ளுக்கு அறிவி. நீ இஸ்ரவேல்சந்ததியாருக்கு ச் சொல்லவேண்டிய வாக்குகள் இவையே என்றார்.

எ. மோசே போய்ச் சனங்களின் முதியோரை அழைப்பித்து, தன்னிடத்தில் யெகோவா கற்பித்த வாக்குகள் யாவையும், அவர்கள் முன்னிற்கப் பிரஸ்தாபம் பண்ணினான்.

அ. அதற்கு உத்தரமாகச் சகலசனங்களும் ஏகமாய், யெகோவா சொல்லிய யாவையும் செய்வோமென்று சொன்னார்கள். மோசே சனங்கள் சொன்ன வாக்குகளை யெகோவாவின் சமுகத்தில் தெரிவித்தான்.

கூ. யெகோவா மோசேயை நோக்கி, நான் உன்னுடனே சம்பாஷிக்கும்பொழுது, சனங்கள் கேட்டு, உன்னை எப்பொழுதும் விசுவாசிக்கும்பொருட்டு நான் கார்மேகத்தில் உனக்கு வெளிப்படுவேனென்று சொன்னார். சனங்கள் சொன்ன வாக்குகளை மோசே யெகோவாவுக்குச் சொன்னான்.

ய. யெகோவா மோசேயை நோக்கி, மூன்றும்நாளில் யெகோவா சகல சனங்களுக்கும் பிரத்தியட்சமாகச் சீனாய்மலையின்மேல் இறங்குவார்.

யக. ஆதலால் நீ சனங்களிடத்தில் போய் இன்றைக்கும், நாளைக்கும், அவர்கள் தங்கள்

தங்கள் வஸ்திரங்களைத் தோய்க்கும்படிசெய்து, அவர்களைப் பரிசுத்தப்படுத்தி மூன்றும் நாளுக்கு ஆயத்தமாய் இருக்கும்படி செய்வாயாக.

௧௨. நீ சனங்களை நோக்கி, நீங்கள் மலையில் ஏருதபடிக்கும், அதின் அடிவாரத்தைத் தோடாதபடிக்கும் எச்சரிக்கையாயிருங்கள் என்று சொல்லி, அதின் சுற்றிலும் ஒரு எல்லையைக்குறித்துவிடு. மலையைத்தொடுகிறவன் எவனும் நிச்சயமாகக் கொலை செய்யப்படுவான்.

௧௩. ஒரு கையுந் தீண்டலாகாது. தீண்டினல், அவன் நிச்சயமாய்க் கல்லெறியப்படவேண்டும்; அல்லது ஊடுருவ எய்யப்படவேண்டும். மிருகமாகுலும் மனுஷனைலும் உயிரோடிருக்கவிடப்படாது. எக்காளம் நெடுந் தொனி செய்யும்பொழுது, அவர்கள் மலைக்குச் சமீபத்தில் வரக்கடவர்களென்ருர்.

௧௪. மோசே மலையினின்றும் இறங்கிச் சனங்களிடத்திலே போய், அவர்களைப் பரிசுத்தப்படுத்தினன். அவர்கள் தங்கள் வஸ்திரங்களைத் தோய்த்தார்கள்.

௧௫. அவன் சனங்களை நோக்கி, மூன்றும் நாளுக்கு ஆயத்தமாயிருங்கள். ஸ்திரிகளிடத்திற் சேராதிருங்களென்ருன்.

௧௬. மூன்றும் நாள் விடியற்காலத்தில் பா

ளயத்திலிருந்த சனங்களெல்லாம் நடுங்க, இ
டிமுழக்கமும், மின்னலும், மலையின்மேல்
கார்மேகமும், உரத்த எக்காளசத்தமும், தோ
ன்றின.

௰எ. சனங்கள் தேவனுக்கு முற்படும்படி,
மோசே அவர்களைப் பாளயத்தினின்றும் புற
ப்படச் செய்தான். அவர்கள் மலையடிவாரத்
தில் நின்றார்கள்.

௰அ. யேகோவா சீனாய்மலையின்மேல் அக்
கினியுடன் இறங்கினபடியினாலே, அது முழு
வதும் புகை மயமாயிருந்தது. அந்தப் புகை
சூளையின் புகையைப்போல் எழும்பிற்று.

௰௯. மலைமுழுவதும் மிகவும் அதிர்ந்தது.
எக்காள சத்தம் வரவர உரங்கொண்டு தோ
னித்தது. மோசே பேசினான். தேவன் அவ
னுக்கு வாக்கினால் உத்தரங் கொடுத்தார்.

௨௰. யேகோவா சீனாய் மலையுச்சியில் இறங்
கினார். யேகோவா மலையுச்சியில் மோசேயை
வரவழைத்தார். மோசே ஏறிப்போனான்.

௨௧. யேகோவா மோசேயை நோக்கி, இ
றங்கிப் போய்ச் சனங்கள் பார்க்கிறதற்காக எ
ல்லையைக் கடந்து, யேகோவாவினிடத்தில்
வராதபடிக்கும், அவர்களில் அநேகர் விழாத
படிக்கும், அவர்களுக்குக் கட்டளையிடு.

௨௨. யேகோவாவின் சமூகத்தில் வருகிற

ஆசாரியர்களும், தங்களைப் பரிசுத்தப்படுத்தி க்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால், யெ கோவா அவர்கள்மேற் பாய்ந்து விழுவார்.

உ௩. மோசே யெகோவாவை நோக்கி, ம லையைச் சூழ எல்லை குறித்துவிட்டு அதைச் சுத்திகரியுங்களென்று நீர் எங்களுக்குக் கட் டளையிட்டிருக்கீறீர்; ஆகையால் சனங்கள் ம லையின்மேல் ஏறிவரமாட்டார்களென்று சொ ன்ஞன்.

உச. யெகோவா அவனை நோக்கி, நீ இ றங்கிப் போ. பின்பு நீயும், ஆரோனும், கூ டி ஏறிவாருங்கள். ஆசாரியரும், சனங்களும், எல்லையைக் கடந்து, யெகோவாவிடத்தில் வ ராதிருக்கக் கடவர்கள் ; வந்தால், அவர் அவர் கள் மேல் பாய்ந்து விழுவாரென்றார்.

உரு. மோசே இறங்கிச் சனங்களிடத்திற் போய், அப்படியே அவர்களுக்குச் சொன் ஞன்.

## உ௰. அதிகாரம்.

*க. பத்துக்கட்டளையின் முதற்பகுதி : யஉ. பத்துக் கட்டளையின் இரண்டாம்பகுதி : யஅ. சனங்கள் பயப்படுகையில் மோசே அவர்களைத் தேற்றல் : உஉ. விக்கிரகாராதனையை விலக்கல் : உச. தேவ வேதிகை வகுக்கும்விதி.*

க. பின்பு தேவன்,

உ. நீ அடிமையாயிருந்த இடமாகிய எகிப்

துதேசத்தினின்றும், உன்னைப் புறப்படச்செ
ய்த யெகோவாவாகிய நானே உன் தேவன்;

௩. என்னையன்றி, நீ வேறு தேவர்களைப்
பற்றிக்கொள்ளவேண்டாம்.

௪. தொழிற்படுத்திய எந்த விக்கிரகத்தை
யாகிலும் மேலே வானத்திலும், கீழே பூமியி
லும், பூமிக்குக்கீழே சலத்திலுமுள்ள எந்த
வஸ்துவின் பிரதி ரூபத்தையாகிலும், நீ உன
க்குண்டாக்கவேண்டாம். நீ அவைகளை நம
ஸ்கரிக்கவும் சேவிக்கவும்வேண்டாம்.

௫. உன் தேவனும் யெகோவாவுமாகிய
நான், பிதாக்கள் செய்த அதிக்கிரமத்தை, என்
னைப் பகைக்கிற பிள்ளைகளிடத்தில், மூன்று
நாலு தலைமுறைவரைக்கும், விசாரிக்கிற எரி
ச்சலுள்ள தேவனாயிருக்கிறேன்.

௬. என்னிடத்தில் அன்புவைத்து என் க
ட்டளைகளைக் காத்துக் கொள்ளுகிறவர்களுக்
கு, ஆயிரந் தலைமுறைவரைக்கும், தயைசெ
ய்கிறவராயிருக்கிறேன்.

௭. உன் தேவனாகிய யெகோவாவின் நாம
த்தை வீணாய் வழங்காயாக. யெகோவா தம
து நாமத்தை வீணாய் வழங்குகிறவனைத் தண்
டியாமல் விடார்.

௮. ஓய்வுநாளைப் பரிசுத்தமாய் ஆசரிக்க
நினைப்பாயாக.

௯. ஆறுநாளும் நீ வேலைசெய்து உன் சகல கிரியைகளையும் நடத்துவாயாக.

௰. ஏழாம்நாள், உன் தேவனாகிய யேகோவாவின் ஓய்வுநாள். நீயானாலும், உன் புத்திரனானாலும், உன் புத்திரியானாலும், உன் பணிவிடைக்காரனானாலும், உன் பணிவிடைக்காரியானாலும், உன் மிருகசீவனானாலும், உன் வாசல்களிலுள்ள பரதேசியானாலும் அதிலே யாதொரு வேலையையுஞ் செய்யவேண்டாம்.

௰க. யேகோவா வானத்தையும், பூமியையும், சமுத்திரத்தையும், அவைகளிலுள்ள யாவையும், ஆறுநாளில் உண்டாக்கி, ஏழாம் நாளில் ஓய்ந்திருந்தார். அதினால் யேகோவா ஓய்வுநாளை ஆசீர்வதித்து, அதைப் பரிசுத்தப் படுத்தினார்.

௰உ. உன் தேவனாகிய யேகோவா உனக்கு அளிக்குந் தேசத்தில் உன் ஆயுசு நீடித்திருப்பதற்கு, உன் பிதாவையும், மாதாவையும் கனம்பண்ணுவாயாக.

௰௩. கோலைசெய்யாயாக.

௰௪. விபசாரஞ் செய்யாயாக.

௰௫. களவுசெய்யாயாக.

௰௬. பிறனுக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சி சொல்லாயாக.

௰௭. பிறனுடைய வீட்டை இச்சியாயாக;

பிறனுடைய மனைவியையும், அவன் பணி விடைக்காரனையும், அவன் பணிவிடைக்கா ரியையும், அவனுடைய எருதையும், அவ னுடைய கழுதையையும், பிறனுடைய மற் றெந்தப் பொருளையும், இச்சியாயாக என்னு ம் இவ்வாக்குகள் யாவையும் அருளிச்செய் தார்.

௰௮. சனங்களெல்லாரும், இடிமுழக்கத் தையும், எக்காளச் சத்தத்தையும், மின்னலை யும், மலை புகைகிறதையுங் கண்டார்கள். அ தைக் கண்டு, சனங்கள் பயத்தோடே பின் வாங்கித் தூரத்தில் நின்று,

௰௯. மோசேயை நோக்கி, நீரே எங்களோ டே பேசும். நாங்கள் கேட்போம். தேவன் எங்களுடனே பேசாதபடி பண்ணும். நாங் கள் இறந்துபோவோமென்றார்கள்.

௨௰. அதற்கு மோசே, பயப்படாதிருங்கள். உங்களைச் சோதிக்கும் பொருட்டும், பாவஞ் செய்யாமல் தம்மைப்பற்றும் பயம் உங்க ளுக்குள்ளிருக்கும்பொருட்டும், தேவன் இ ப்படித் தோன்றினாரென்றான்.

௨௧. சனங்கள் தூரத்தில் நிற்க, மோசே, தேவனிருந்த கார்மேகத்தைச் சமீபித்தான்.

௨௨. அப்பொழுது யெகோவா மோசேயை நோக்கி, நீங்கள் இஸ்ரவேல் சந்ததியாரிட

த்தில், நான் வானத்திலிருந்து உங்களுடனே பேசினதைக் கண்டீர்கள்.

உ௩. நீங்கள் என் முன்னிலையில், வெள்ளியினாலே தெய்வங்களையும், பொன்னினாலே தெய்வங்களையும் உங்களுக்குண்டாக்கலாகாது.

உ௪. நீங்கள் எனக்கு மண்ணினால் ஒரு வேதிகை செய்து, அதின்மேல் உங்கள் ஆடுமாடுகளை, தகனபலியாகவும், ஸ்தோத்திர பலியாகவுஞ் செலுத்துவீர்களாக. நான் என் நாமத்தை நினைவுகூரப்பண்ணும் எந்தஸ்தானத்திலும், உங்களிடத்தில் சேர்ந்து உங்களை ஆசீர்வதிப்பேன்.

உ௫. எனக்குக் கல்லினால் வேதிகையை உண்டாக்க வேண்டுமாகில், உளியிட்டகற்களால் அதை உண்டாக்கலாகாது. நீங்கள் அதில் உளியிட்டால், அதை அசுசிப்படுத்தினீர்கள்.

உ௬. உங்கள் நிருவாணங் காணப்படவுங் கூடும். ஆதலால் என் வேதிகையின்மேல் படிவழியாய், ஏறலாகாது என்று சொல்லென்றார்.